# திருவானைக்கா அகிலாண்டநாயகி மாலை

**ஆசிரியர்**

**மகாவித்துவான் தி. மீ. சு. பிள்ளையவர்கள்**




**உரைவிளக்கம்**

குன்றக்குடி ஆதீனப்புலவர் , தமிழாகரர் ,

சைவத்தமிழ் மணி , சைவத்தமிழ் அறிஞர்

சித்தாந்தச் செல்வர்

வித்துவான் . க. கதிரேசன் எம்.ஏ: பிஎட்

பூவாளூர் . 621 712

அலைபேசி : 09865193754

# உள்ளுறை



******************

## தோரணவாயில்

மலர்என்ற சொல்லைக் கேட்டதுமே நம்உள்ளத்தில் மலரின் மலர்ச்சி,பொலிவு, வண்ணம்,வடிவம்,மென்மை,மணம்,பூந்தாது,தேன் ஆகிய அனைத்தும் தோன்றி நிலைப்பது போல, மகாவித்துவான் தி.மீ.சு.பிள்ளையவர்கள் என்ற பெயரைக்கேட்டதுமே,நம்நெஞ்சில் களிநடம்புரிவன,இவரது நூல்களின் வரிசை,இவற்றில் பாங்குற மணக்கும் பன்னலம்செறிந்த தீஞ்சுவைச் செய்யுட்களின் அணிவகுப்பு. கம்பநாடரின்''புவியினுக்கு அணியாய்'' என்று தொடங்கும் கோதாவிரி ஆற்றின் வளமை கூறும் உவமையாகிய ''சான்றோர் கவி''க்குரிய செய்திகள் அனைத்தும் ஒருசேரப் பொலிவன இவரதுகவிதைகள்.இவர்களைப்பற்றிப் பெரும்புலமைச் சான்றோராகிய கிருபானந்த வாரியார் சுவாமிகள்''வித்தகத்தமிழை''வளர்த்து வளம்பெறச் செய்தவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளைவர்கள்.ஒருலட்சம்கவிகள் பாடிப் ''பத்துக்கம்பன்'' என்று புகழ்பெற்றவர்.பிள்ளையவர்களின் பாடல் என்றும்குன்றாது ஓடும் சீவநதி போன்றது.தேனமுதம்போல வானமுதாய் இனிக்கப்பாடிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களை நினைந்து போற்றுவது நன்றிக்கடனாகும்'' என்று பிள்ளையவர்களின் தலைமாணாக்கர்ஆகிய பூவாளூர் சி.தியாகராச செட்டியார் இயற்றியுள்ள''மீனாட்சி சுந்தரம்பிள்ளைஅந்தாதி'' நூலின் வாழ்த்துரையில் குறிப்பிட்டுள்ளார்கள்.

பிள்ளையவர்கள் 06–4–1815 இல் திருச்சிராப்பள்ளி மாவட்டம் அதவத்தூரில் சிதம்பரம்பிள்ளை,அன்னத்தாச்சியின் அருந்தவப்புதல்வராய்ப் பிறந்தார். திருவாவடுதுறை ஆதீனத்து அருட்டிருவேலாயுதமுனிவரிடம்சமய,இலக்கிய நூல்கள்பலவற்றைத்தெளிவுறக் கற்றார்.தேன்ஒன்றையே நாடித்திரியும் தேனீப்போல இலக்கண, இலக்கிய,சமய நூல்களையும் நுட்பங்களையும் நாடி அறிஞர்பலரைச்சார்ந்து சார்ந்து கற்றார்.ஒரு செய்தி: அந்நாளில் அணிஇலக்கணநூலாகிய தண்டிஅலங்காரத்தில் வல்ல பரதேசிஒருவர் திருச்சிராப்பள்ளிக்கு வந்துள்ளதை அறிந்த இவர்,அவரையண்டித் தமக்குத் தண்டியலங்கார நூலினைக் கற்பிக்க வேண்டினார்.அவரோ மறுத்துவிட்டார். ஆயினும்,இவர் அவரை விட்டபாடில்லை.''சூழ்ந்து முரண்று அணவிச் சுற்றும் துதைந்தாடித் தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும் தேனீயாய்த்'' தொடர்ந்தார். ''அகலாது அணுகாது தீக்காய்வார் போல்''தொடர்ந்து,அவர்''எத்திறம் உவக்கும்அத்திறம் அறத்தின் திரியாது படர்ந்து,''நையாத மனத்தினையும் நைவித்துக்''கற்றுத்தேர்ந்தார்.

> ''பொங்கரின் நுழைந்து வாவி புகுந்துபங் கயம்து மாவிப்
> பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
> கொங்கலர் மணங்கூட் டுண்டு குளிர்ந்துமெல் லென்று தென்றல்
> அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போல் இயங்கு மன்றே''

என்கிறதிருவிளையாடற் புராணச்செய்யுட்கு இலக்கியமாக ,யார்யார் எவ்வெந்நூல்களில் வல்லவரோ அவரவரிடம் அவ்வந்நூல் கற்றலில் முனைந்து கற்றார்.இதனால் இவரது செய்யுட்கள் பலவகைப்பரிமாணச் சிறப்புக்களுடன் மணக்கின்றன. இப்பரிமாணங்களைச்

சுவைத்துக்களித்த அறிஞர் பெருமக்கள் களிகூர்ந்து அளித்த மாபெரும் விருதே ''மகாவித்துவான்'' என்பது.

திருவாவடுதுறை ஆதீனம் இவருக்குப் பெருஞ்சிறப்பளித்துப் பேணியது.அன்றைய மகாசந்நிதானங்கள்,அடியார் பலரோடு உண்ணும் விருந்துகளில் இவரைத்தமது அருகில் இடதுபுறம் அமரச் செய்து உண்பித்து உண்டதாகக் கூறுகின்றனர்.இன்றும் இவர்பெயரால் விருந்தினர் மாளிகை ஒன்றுதிருவாவடுதுறையில் இத்திருமடத்துக்கு எதிரே பொலிகிறது. மேலும் குன்றக்குடிக்கு இப்புலவர்பெருமான் வருகைதந்தபோது இவருக்கென்று தனித்ததொரு சிவிகை செய்வித்து அதில் இவரை அமரச்செய்து ஊர்வலமாக அழைத்துவந்து, திருமடத்தில் பெரியவரவேற்பும் சன்மானமும் அளித்ததுடன், இவர்காரைக்குடிக்குப் புறப்பட்டபோது அச்சிவிகையில் அமரச்செய்து வழியனுப்பியதும் வரலாறாகும்.

ஒப்பாரும் மிக்காருமின்றி மிளிர்ந்த இவர்கள் 1876 ஆம்ஆண்டுபிப்ரவரித்திங்களில் இறைவன் திருவடி நிழல்சேர்ந்தார். இவரின் தலைமாணாக்கர் பூவாளூர்த் தியாகராச செட்டியார் அவர்கள் இவர்நினைவைப் போற்றும் வகையில் ,அரியவராகிய இவரைஅரிய யாப்பாகிய கட்டளைக் கலித்துறையாப்பில் இவரைச்சிவபரம்பொருளாகக் கொண்டு ''மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அந்தாதி'' இயற்றியுள்ளதும், தமிழ்த்தாத்தா உ.வே.சா அவர்கள்இவரது நூல்கள் அனைத்தையும் ஒரே தொகுப்பாக வெளியிட்டுத் தமிழ்த்தாய்க்கு அணிசேர்த்துள்ளதும் குறிப்பிடத்தக்கன.

இலக்கியநயம் செறிந்த இவரது நூல்களில் ஒன்று இந்நூல்_**திருவானைக்கா அகிலாண்ட நாயகிமாலை.** திருவானைக்காவில்அப்பன்அருள்தரு வெண்ணாவல் ஈசர்.அம்மை அருள்தரு அகிலாண்ட நாயகி.ஐம்பூதத்தலங்களுள் இத்தலம் நீர்த்தலம்_அப்புத்தலம். இத் திருக்கோயிலின் திருவுண்ணாழியில் தூயநன்னீர் இடையறாது சுரப்பதைக் காணலாம். இப்பெருமானை வணங்கிப் போற்றிப்பாடிக் களித்தஅப்பரடிகள் அருளியனமூன்றுபதிகங்கள். இவற்றுள்ஒருபதிகம்_திருத்தாண்டகம்_முழுவதும்''செழுநீர்த்திரளைச்சென்றுஆடினேனே'' என்றமகுடம் கொண்டது.இவ்வமைப்பினை எண்ணிய மகாவித்துவான் அவர்களும்இம்மாலை நூல் முழுவதும்_100பாடல்களிலும்''திருவானைக்கா அகிலாண்ட நாயகியே'' என்று மகுடம் அமைத்திருத்தல் இயல்பே எனலாம்.திருவானைக்கா திருத்தாண்டக முதற்பாடல்

''தென்ஆனைக் காவானைத் தேனைப் பாலைச்
செழுநீர்த் திரளைச்சென்று ஆடி னேனே''

என்று நிறைவு பெறுவது. நம்சமயகுரவர்கள் நால்வரும் போற்றியுள்ள இத்தலத்தினைத் திருவாவடுதுறை ஆதீனத்துக் கவிராட்சச கச்சியப்ப முனிவர் தலபுராணம் இயற்றிப் போற்றியுள்ளார்.

இத்தலத்துப் பெருமான்மேல் சருகுமுதலியன விழாதிருக்கும் பொருட்டுத் தன்நூலால் பந்தரிழைத்த சிலம்பியும்,நாடோறும் காவிரி நீரினால் பெருமமானுக்குத் திருமுழுக்காட்டி வழிபட்ட யானையும் மறுமையில் முறையே கோச்செங்கட்சோழனும்,பூதகணத்தலைவனுமாக ஆயினர்என்பது தலபுராணச்செய்தி.( இதில் பா எண்60.) அறுபத்துமூன்று நாயன்மாருள்

ஒருவரான கோச்செங்கண் சோழன்கட்டிய மாடக்கோயிலுடன் சேர்த்து அவன்,''எண்தோள் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்து உலகாண்ட திருக்குலத்து வாழ்சோழன்'' என்று திருமங்கைஆழ்வாரால் போற்றப் பெறுகிறான்.

ஐயடிகள்காடவர்கோன் நாயனார் தமது சேத்திரத் திருவெண்பாவில்''தென்ஆனைக்கா அடைநீ சென்று'' என்று நம்மை இத்தலத்திற்கு ஆற்றுப்படுத்துகிறார்.

அருள்தரு வெண்ணாவலீசர்,காவிரியில் நீராடிய உறந்தைச்சோழன் அணிந்திருந்த முத்துமாலையை நழுவச்செய்து,திருமஞ்சனக்குடத்தில் புகச்செய்து,திருமுழுக்காட்டில், தான் அணிந்தவன்.(இதில் பாஎண்64.)

இத்திருக்கோயிலின் ஐந்தாம் திருச்சுற்றுத் திருமதில்''திருநீறிட்டான்திருமதில்'' என்று வழங்கப்பெறுவது.(இதில் பாஎண்76)

நான்முகன்,திருமால்,உருத்திரன்,மருத்துவர் இருவர்,வசுக்கள்எண்மர்,அருக்கன் முதலியோர் வழிபட்டும் தவம்புரிந்தும் வரங்கள் பல பெற்றதலம் இது.காஞ்சியைப்போல் அப்பனை,அம்மைஎழுந்தருளச் செய்து வழிபட்ட சிறப்புடைய அம்மைத்திருத்தலம் இது.

மிகப்பலரும் மதிக்கும் சிதம்பரம் பிள்ளை என்பவர்,மகாவித்துவான் அவர்களிடம் ''திருவண்ணாமலையை வலம்வரத்தொடங்கிய சிவப்பிரகாச சுவாமிகள் அதனைஒருமுறை வலம்வந்து முடிப்பதற்குள்''சோணசைலமாலை'' இயற்றியது போலத் தாங்கள் அருள்தரு வெண்ணாவல் ஈசரை வழிபட்டுத்திரும்புமுன்,''ஒருமாலை நூல்'' இயற்றித்தர இயலுமா?என்று கேட்க, அதன்படி இயற்றித்தந்ததே இந்த அகிலாண்ட நாயகி மாலை.காப்புச்செய்யுள் 1+ நூல் செய்யுட்கள் 100, ஆக 101செய்யுட்களையும் ,எழுசீர் ஆசிரிய விருத்தத்தில் அருளியுள்ளதுடன் நூல் பகுதியின் 100 செய்யுட்களையும்''திருவானைக்கா அகிலாண்ட நாயகியே''என்ற ஒரே மகுடத்தில் இயற்றித்தந்துள்ளதும் இதற்குள்ளஒருசிறப்பு.

பற்பல இலக்கிய நயங்களுடன் மிளிரும் இந்நூலுக்கு உரைவிளக்கம் எழுதும் நல்லதொரு வாய்ப்பருளிய திருவருளுக்கும் குருவருளுக்கும் என்கனிவான வணக்கங்கள்.

இவ்வுரைவிளக்க நூலுக்குத் தமது சமய,சமுதாய ,நிருவாகப்பணிச்சூழல்களுக்கு இடையே வழக்கம்போல்கனிந்த அணிந்துரையும் வாழ்த்துரையும் அருளிச்சிறப்பித்துள்ள வணக்கத்திற்கும் போற்றுதலுக்கும் வழிபாட்டிற்கும் உரிய திருக்கயிலாய பரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக்குருமகாசந்நிதானம்(46)**திருப்பெருந்திரு தெய்வ சிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின்_முனைவர்குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களின்_** பொன்னார்திருவடிகட்குப் பணிவன்புடனான என்மனம் மொழி மெய்யால் அமைந்த வணக்கங்களைச் செலுத்தி மகிழ்கிறேன்.

மேலும், இந்நூலுக்கு,தருமை ஆதீனத்திற்குரிய திருவையாறுஅருள்தரு அறம்வளர்த்தநாயகி உடனாய ஐயாறப்பர் திருக்கோயில் , திருச்சிராப்பள்ளி மௌமடம் ஆகியவற்றின் கட்டளை விசாரணைத்தம்பிரான் சுவாமிகள் ஆகிய வணக்கத்திற்கும் போற்றுதலுக்கும் வழிபாட்டிற்கும் உரிய முனைவர் ஸ்ரீ **மத் மௌன குமாரசுவாமித்**

**தம்பிரான் சுவாமிகள் அவர்களின்** பொன்னார் திருவடிகட்குப் பணிவன்புடனான என்மனம் மொழிமெய்யால்அமைந்த வணக்கங்களைச் செலுத்தி மகிழ்கிறேன்.

என் இனிய நண்பர்,தமிழாகரர்,சித்தாந்தச்செம்மணி, திருச்சிராப்பள்ளிசெட்டிநாடு கலைஅறிவியல்கல்லூரி முன்னாள் முதல்வர் **திருமிகு முனைவர் பழ. முத்தப்பனார் அவர்கள்** தமது சமய,சாத்திர,எழுத்து,சொற்பொழிவுப் பணிகட்கிடையே இந்நூலுக்கு மதிப்புரை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள்.இக்கனிந்த அன்புக்கு என்பணிவன்புடனான நன்றியும் வணக்கமும் உரியன.

பூவாளூர்

அன்புள்ள

குன்றக்குடி ஆதீனப்புலவர்
க.கதிரேசன்.

*******************

உ
சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
☎ : 04577 -264227

தவத்திரு
குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

## வாழ்த்துரை

திருவாவடுதுறை ஆதீனமகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய அருளமுதமான " **திருவானைக்கா அகிலாண்ட நாயகி மாலை"** க்கு நமது குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனவித்துவான் "தமிழாகரர்" திரு. க. கதிரேசன் அவர்கள் விளக்கவுரை எழுதியிருப்பது ஒருபொருத்தமாகும். இந்தப் பொருத்தம் நமக்குப் பெருமகிழ்வளிக்கிறது. திரு. கதிரேசன் அவர்கள் பணிஓய்வு பெற்றபின் அருள்நூல்கள் பலவற்றுக்கு உரைஎழுதுவதை ஓயாப்பணியாகக் கொண்டுள்ளார். இந்நாள்வரை இவர்செய்தளித்த உரைநூல்கள் அனைத்தும் பாராட்டத்தக்கவையாகும்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய நூல்களில் அருள்தரு அகிலாண்டநாயகி மாலை வித்தியாசமானசூழலில் விரைந்து பாடப்பெற்றதாகும். மகாவித்துவான் அவர்கள் சிலஅன்பர்களுடன் திருவானைக்காவுக்குச் சென்றபோது உடனிருந்த சிதம்பரம் பிள்ளை என்பவர், மகாவித்துவான்அவர்களிடம் " திருவண்ணாமலையை வலம்வரத் தொடங்கிய அருட்டிரு சிவப்பிரகாச சுவாமிகள் அம்மலையை ஒருமுறை வலம்வருவதற்குள் சோணசைல மாலையைப் பாடிமுடித்தது போல், தாங்கள் அருள்தரு வெண்ணாவல் ஈசரை வழிபட்டுத் திரும்புமுன் ஒருமாலைநூல் இயற்றவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அவர்தம் விருப்பத்திற்கிணங்க இயற்றித்தந்ததே இந்த அகிலாண்டநாயகி மாலை. இவ்வாறு பிள்ளையவர்களால் விரைந்து பாடப்பெற்ற நூலாயினும் இந்நூல் கவிதைச்சுவையும் உருக்கமும் நிறைந்ததாகும்.

இந்தச் சுவையையும் உணர்வையும், நமது ஆதீனப்புலவர் அவர்கள் துய்த்துமகிழ்ந்து தமது விளக்கவுரைவாயிலாகப் படிப்போர்க்கெல்லாம் விருந்தளிக்கிறார். உரையாசிரியர் நல்ல இலக்கணப்புலவர் ஆதலால் இலக்கணக்குறிப்புகளுடன் இவ்வுரை இலங்குகிறது. விளக்கவுரை நுட்பமும் திட்பமும் நிறைந்துள்ளது. மகாவித்துவான் அவர்களின் கருத்தோட்டத்தை நன்கு புரிந்துகொண்டு பொருள்விரிக்கும் உரையாசிரியரின் புலமைத்திறத்தைப் பாராட்டி மகிழ்கிறோம்.

இந்த அரியநூலுக்கு உரையெழுதி மக்களுக்கு உதவிய நமது ஆதீனப்புலவர் தமிழாகரர் திரு. கதிரேசன் அவர்களுக்கு எல்லாநலமும் வளமும் அருள அருள்தரு காளத்தியப்பர் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

பொன்னம்பலஅடிகளார்

( பொன்னம்பல அடிகளார் )

* திருக்குறளே நமது பொதுமறை * திருமுறைகளே நமது மறை *

**********************************************************

உ

## குருபாதம்

**தந்தை தாயும்நீ; என்னுயிர்த் துணையும் நீ**
**சஞ்சல மதுதீர்க்க**
**வந்த தேசிக வடிவும் நீ; உனையல்லால்**
**மற்றொரு துணை காணேன்**
**அந்தம் ஆதியும் அளப்பரும் சோதியே!**
**ஆதியே அடியார்தம்**
**சிந்தை மேவிய தாயுமா னவன்எனும்**
**சிரகிரிப் பெருமானே!**

**ஸ்ரீ தாயுமான சுவாமிகள்**

**முனைவர். ஸ்ரீமத் மௌன குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
கட்டளை விசாரணை
**தருமையாதீனம் ஸ்ரீ மௌனமடம் - மலைக்கோட்டை**
**திருச்சிராப்பள்ளி - 620 002. போன் : 0431 - 2702472**

---

மாயவ னாய்ஓர் பாதிஇல் லவளாய்
மற்றொர்பா தியும்கவர்ந் தனையால்
நாயகன் மேனி எனில்அவன் வடிவம்
நாடொறும் மறைந்ததாய் இருக்கச்
சேயமண் சத்தி மயம்எனா(து) அந்தோ
சிவமயம் என்ப(து)என் உரையாய்
காயம்மீ(து) எழுந்த மதில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

திருவானைக்கா பஞ்சபூதத்தலத்தில் அப்புத்தலமாக விளங்குவது; மூவராலும் பாடல் பெற்றது; ஆனையும் சிலந்தியும் வழிபாட்டினை நிகழ்த்தி அதன்பயனாக முத்தியும், கோச்செங்கட் சோழனாகவும் பேறுபெற்ற தலமாம். காளமேகப் புலவரை உருவாக்கியது. எங்கள் ஆதிகுருஞானசம்பந்தரின் குரு கமலை ஞானப்பிரகாசர் தந்திவன புராணம் பாடிப் போற்றியுள்ள பதி. இப்பதியில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ அகிலாண்ட நாயகியைப் போற்றி மகாவித்துவான் தி. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் “ அகிலாண்டநாயகிமாலை “ பாடிப் போற்றியுள்ளார். இது காப்புச்செய்யுள் உள்பட 101 பாடல்களில் எழுசீர் விருத்தயாப்பில் அமைந்தது.

இந்நூல் பலமுறை வெளிவந்திருப்பினும் நமது பாராட்டுதலுக்கும் அன்பிற்குமுரிய குன்றக்குடி ஆதீனப்புலவர் க. கதிரேசன் அவர்கள்: குறிப்புரை, பொழிப்புரை, விளக்கவுரை, மேற்கோள், இலக்கணக் குறிப்பு எனத் தமது நுண்மாண்நுழைபுல அறிவால் நுணுகி நுணுகி ஆய்ந்த ஆய்வுரையோடு வெளிவரவிருப்பது சிறப்புக்குரியது.

இந்நூலின்கண் முதலில் நூல்ஆராய்ச்சி செய்திருப்பது, உ. வே. சாமிநாதய்யர் செய்த பணியை நினைவூட்டுகிறது. இந்நூலாராய்ச்சியைப்படித்தாலே, இந்நூலினைப் படித்த உணர்வு கிடைக்கும்வகையில், மேற்கோள் நூல்கள், தோத்திரம், சாத்திரம், இலக்கணம், புராணச் செய்திகள், மரபுவழிகள் ஆகியவற்றையும் காட்டுகிறார்.

" அளவறு பிழைகள் பொறுத்தருள் நின்னை " என்ற 7ஆம் பாடலுக்கு, " தண்ணீர் தன்பால்நீந்த அறியாது தத்தளித்து மூழ்கியவரை மும்முறை மேலேதூக்கிவிடும் " என்ற மரபு காட்டுவதால் பழக்க வழக்கத்தில் உள்ளதை உள்ளபடியே கூறுகிறார். மேலும் இச்செய்யுள் புகழாப்புகழ்ச்சி அல்லது வஞ்சப்புகழ்ச்சியணி என்ற இலக்கணக்குறிப்பு இவரின் இலக்கணப் புலமையைக் காட்டுகிறது.

" விழிஇடந்தப்பி மகவரிந்து ஊட்டி " என்ற 10 ஆம் பாடலில்; பெரியபுராணம், பட்டினத்தார், திருக்களிற்றுப்படியார் என்று பலநூல்களை மேற்கோள் காட்டியிருப்பது, புலவருக்குள்ள பல நூலறிவைக் காட்டுகிறது. இப்பாடல்களில் பலஅடியவர்களின் வரலாறுகளைப் பதிவுசெய்கிறார். 11ஆம் பாடலிலும் புறநானூறு, கபிலர் அகவல் போன்ற நூல்களைக் காட்டியுள்ளது புலவர் கதிரேசனாரின் சங்கஇலக்கியப் புலமையைக்காட்டுகிறது.

40 ஆவது பாடலுக்கு விளக்கவுரை தரும்போது " வேட்கையன் " என்பது இங்கு முழுநம்பிக்கை குறிப்பது என்பதும், நாய்க்குணமும், கீழ்மக்களின் கீழ்க்குணமும் என்ற விளக்கமும் மிகவும் சிறப்புடையன..

" ஓதுறு முறைமை ஒன்றின்முன் மூன்றனுள் '' என்ற 43 ஆம் பாடலில் பஞ்சாட்சர விளக்கம் சிறப்பாக அமைந்துள்ளது. அதில் வகரம் அம்மையைக் குறிப்பது. அம்மை= அருள். "அருளது சத்தியாகும் அரன்தனக்கு " என்று சாத்திரம் பகர்கிறது. இவ்வைந்தெழுத்தை ஓதுமுறைமை பற்றி, அம்மை (வ) ; யகரமாகிய உயிரை ஆட்கொள்ள, நகர மகரங்களாகிய மறைப்பாற்றல் மலம் இரண்டினையும்நீக்கி, அவ்வுயிர் சிகரமாகிய சிவத்தை அணைய வழிகாட்ட வேண்டும் என்றவிளக்கம் மரபுசார்ந்த , சித்தாந்த அடிப்படையில் கூறுவதாய்ச் பஞ்சாட்சரத்தைச் சிறப்புற விளக்குவதாய் அமைந்துள்ளது.

" மறைமுதல் பொருவ ஏந்தினை நீயும் " என்ற 47 ஆம் பாடலுக்கு, வன்னிஎன்னும்சொல், கிளியையும் நெருப்பையும் குறிப்பது. இதனைவைத்து ஆசிரியர் விடுகதைச் செய்யுளாக அமைத்துள்ளமையை எண்ணிச் சிறப்பாக உரைநயம் காண்கிறார் உரையாசிரியர். இப்பாடலில், நீயும் - இறந்தததுதழுவிய எச்சவும்மை, மலர்புரைதரு கை -

விரியுவமைத்தொடர். அதுதான் - தான் - அசைச்சொல். விடுகதைஒத்த இச்செய்யுள் வேற்றுமையணி என்று சொல்தோறும் ஆய்வுசெய்துள்ளார்.

" ஆரங்கொண்டவரலாறு " "திருநீற்று மதில் வரலாறு என வரலாறு காட்டுகிறார்.

" சிலம்பகத்து உதித்த நின்னடி தற்சூழ் " என்ற 55 ஆம் பாடலில் ( ஆறுபடை வீடுகளில் ஒன்றான பழமுதிர்சோலையில் ) அருவியாக இறங்கும் ஆறு மலைவீழ்ஆறு. ஆதலால் அதன்பெயர் " மலையாறு " என்று அது கிபி 1960 களில் வழங்கப்பெற்றும் எழுதப்பெற்றும் இருந்தது என்றும், பின்னர் அவ்வருவி " நூபுர கங்கை " என்று வழங்கப்பெறுவதன் பொருத்தமின்மையைக்காட்டிக் கடிந்துகொண்டபின் உண்மையுரைக்கும் போது உரையாசிரியரின் மரபுமீறிய கோபம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. காலந்தோறும் " மெள்ளத் தமிழினிச் சாகும் " என்பதற்கு எடுத்துக்காட்டாக இதுபோன்றவை இனி நிகழ்ந்துவிடக் கூடாது என்பதை வாய்ப்புநேரும்காலத்தில் சுட்டிக்காட்டுவது சிறப்புடைத்து.

" மைய ஆண்மகன்எள் எச்சில் உண்டாற்கு " என்னும் 78 ஆம் பாடலில் பரிகலசேட தீட்சையைக் காட்டுவதும், அதற்குத் தருமையாதீனத்தில் ஸ்ரீ குமரகுருபரர் நாயாகப்பிறந்து பரிகல சேடம் உண்ணவிரும்புவது குறித்த பண்டார மும்மணிக்கோவைப் பாடலைக் காட்டுவதும் சிறப்பு . இன்றும் இம்மரபு பின்பற்றப்படுகிறது. மறைஞான சம்பந்தரின் சேடத்தை உமாபதியார் உண்டு ," குருப்பிரசாதம் " என்றார். இதனைத் தாயுமானவர் ,

" இடத்தைக் காத்திட்ட சுவாவெனப் புன்புலால் இறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினேன் உன்னன்பர் தயங்கும்
மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய் ! நின்னருள் வேண்டும். "

என்பார். இதுபோன்ற மரபுகளை - வழக்கங்களைத் தகுந்த இடத்தில் பதிவுசெய்வதில் உரையாசிரியர் பல்துறைஅறிவைப் புலப்படுத்துகிறார்.

" மாயவ னாய்ஓர் பாதிஇல் லவளாய் " என்ற 99 ஆம் பாடல் " சர்வம்சத்தி மயம் " எனும் தன்மையை நிறுவும்பாடலாக அமைந்துள்ளது. ஸ்ரீ குமரகுருபரர் " அனைத்தும் தன்மயம் எனும் சுருதிகரி யாவைத்து " என்று முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் அமைத்துள்ளதை இது நினைவுறுத்தும். இவைபோல் இன்னும் எத்தனையோ ! எதை எடுத்துக்காட்டுவது.

உரையாசிரியர் , தம்நுண்ணறிவால் பலநூல்கள் உரைகண்ட வரிசையில், " திருவானைக்கா அகிலாண்டநாயகி மாலை "யும் அமைந்தது சிறப்புக்குரியது. " ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும் தெற்றென்க மன்னவன் கண் " என்ற வள்ளுவர் வாக்கிற் கிணங்க, இலக்கிய, இலக்கண, கற்பனை, பத்திச்சுவை முதலியன நனிசொட்டச் சொட்டப்பாடிய தற்காலக்கம்பன் மகாவித்வான் தி, மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் இந்நூலுக்கு உரையாக, சில்நாள் பல்பிணிச் சிற்றறிவுக்கெட்டிய வழியில், மிகப்பெரிய காரியத்தைச் செய்த

திரு. கதிரேசன் அவர்கட்குச் செந்தமிழ்ச் சொக்கநாதப்பெருமான் திருவருளும், தருமையாதீனக் குருமணியின் குருவருளும் மல்குவதாக.

( இவர்கள் இன்று தருமை ஆதீனம் சின்ன பண்டாரசந்நிதி ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த சுவாமிகள் )

## மதிப்புரை

**தமிழாகரர் . சித்தாந்தச் செம்மணி . சிவஞானக் கலைமணி .**
**முனைவர். பழ. முத்தப்பன்.**
**திருச்சிராப்பள்ளி**

*****************

குன்றக்குடி ஆதீனப்புலவரும், நல்ல உரையாசிரியரும், அருமை நண்பரும் ஆகிய புலவர் கதிரேசனார் அவர்கள், அண்மைக் காலமாகப் பலஅரிய நூல்களுக்கு உரையெழுதி வருகிறார்கள். அவர்களின் உரைநூல்களுள் ஒன்று திருவானைக்கா அகிலாண்டநாயகி மாலை. என்ற நூலாகும். இந்நூலைப் படைத்த பெருமான் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆவார்கள். தலபுராண வேந்தராகவும், சிற்றிலக்கிய மன்னராகவும் விளங்கிய பிள்ளையவர்கள், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் சோணசைலமாலை பாடியது போல், திருவானைக்கா திருவலம்வந்து நிறைவேறுவதற்குள் பாடிய மாலைநூல் இதுவாகும் என்ற செவிவழிச் செய்தியுண்டு.

இந்நூலுக்கு எளிய உரையைத்தந்து, திருவானைக்கா அருள்மிகு அகிலாண்ட தேவியின் அருள்பெறக் கதிரேசனார் அவர்கள் வாய்ப்பளித்திருக்கிறார்கள். உரைஅமைப்பு : மூலபாடத்தை யடுத்துக் குறிப்புரையும், அதனையடுத்துப் பாடலுக்குரிய பொழிப்புரையும், அதனையடுத்து விளக்கவுரையும் அமைந்துள்ளது. விளக்கவுரை, புலவர் அவர்களின் நுண்மாண் நுழைபுலத்தை வெளிப்படுத்துகிறது. இலக்கணக் குறிப்பும், இலக்கிய ஒப்புமைகளும், திருமுறை மற்றும் சித்தாந்த எடுத்துக்காட்டுகளும் விளக்கவுரையில் அமைந்து, பாடலின் நயத்தைத் தருகின்றன.

புலவர் அவர்கள் ஒவ்வொருபாடலுக்கும் பொழிப்புரையை மிகவும் சிறப்பாகத் தந்திருக்கிறார்கள். மேலோட்டமாகப் பொருள்தராது கொண்டுகூட்டிப் பொருள்தந்திருக்கிறார்கள். சொல்லுக்குச்சொல் பொருள்தந்து பாடலின் பொருளைப் பொழிப்புரையாக எளியநடையில் தந்துள்ளார்கள். எந்தப் பாடலை எடுத்துக்கொண்டாலும் பொருளில் மயக்கம் ஏற்படாது நேரிடையான பொருளைத் தந்திருப்பது அவரின் புலமைக்கு எடுத்துக்காட்டாகும். 101 பாடல்களுக்கும் எளிய சிறந்த பொழிப்புரையைத் தந்திருக்கின்ற புலவர் அவர்களை நெஞ்சாரப் பாராட்டி மகிழுகிறோம்.

பாடலில் ஏதேனும் வரலாற்றுச் செய்தி இடம்பெற்றிருந்தால் அதனை விளக்கவுரையில் உரிய சான்றுடன் தந்திருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக,

" பொருவில்நீறு இட்டான் மதில்கண்டால்
போதுமே புண்ணியக் கொழுந்தே " ( பா. 76 )

என்பதற்குத் திருவானைக்கா திருக்கோயில் ஐந்தாம் திருச்சுற்றுத் திருமதில், '' திருநீறிட்டான் திருமதில் " என்றபெயருடையதாகும். சிவபெருமான் சித்தர்வடிவில் எழுந்தருளி, மதில்கட்டும் பணியாளர்களுக்குக் கூலியாகத் தமது திருக்கரத்தால் திருநீறுவழங்கினார். அத்திருநீறு

அவரவர் பணிக்கு ஏற்றகூலிக்குரிய பொன்னாக அதனைப்பெற்றவர் கைகளில் திகழ்ந்தது என்பது வரலாற்றுச் செய்தியாகும். இதனைப் புலவர் அவர்கள் விளக்கவுரையில் குறிப்பிட்டுள்ளார்கள்.

வரலாற்றுச் செய்தியைப் போலவே பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு விளக்கம்தருவதிலும் புலவர் அவர்கள் சிறந்துவிளங்குகிறார்கள்.

" நந்திய அறியா மையில்நினைத் துதிப்பேன்
நாயினேன் ஆயினும் " ( பா. 40 )

என்றபகுதியில் இடம்பெற்ற " நாய் " என்ற சொல்லிற்கு விளக்கமாக நாயின் குணங்களைப் புலவரவர்கள் பட்டியலிட்டுக் காட்டியிருக்கிறார்கள். அத்தகைய பட்டியலை ஆன்மாவின் பண்புகளுடன் இணைத்துக் காட்டியிருப்பதும் அவர்தம் சிறப்பாகும். அதுபோல,

" இலங்கு அறமுப்பத் திரண்டுஎன வகுத்துஆங்கே
இகலற அவையெலாம் வளர்த்து " ( பா. 83 )

என்றபகுதியில் அறம் முப்பத்திரண்டு எவை என்பதையும் அவர்கள் குறிப்பிட்டிருப்பது பெருமைக்குரியதாகும்.

" தனைஉணர் மகள்தாய் மரபுஎனக் கிள்ளை
தன்னைநின் கையிலேந் தினையால் " ( பா.57 )

என்ற இப்பகுதியில், அப்பன் அம்மையைத் தனது இடது பாகமாகக் கொண்டிருத்தலுக்கும், அம்மை அப்பனைத் தனது வலதுபாகமாகக் கொண்டிருத்தலுக்கும் தற்குறிப்பேற்றமாகக் காரணம் பாடலில் குறிக்கப்பெற்றிருக்கிறது என்றுஎழுதி,

" உலகத்தைப் படைத்தற்காக இறைவன் சத்தியைத் தோற்றுவித்தபொழுது, சத்தி மகள் முறையினள்; பின்னர் சத்தி, சதாசிவத்தைத் தோற்றுவித்தபொழுது சதாசிவன் மகன் முறையினன், சத்தி தாய் முறையினள் என்றகுறிப்பு இதனால் பெறப்படுகிறது"
என்ற விளக்கம் தந்திருப்பது படித்தறியத்தக்கதாகும். இத்தகைய விளக்கத்தோடு தன்னுடைய நன்றிகடப்பாட்டையும் புலவர் அவர்கள் வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

" தேவியொடும் வந்தருள் புரிந்தான்
சிவனடியார்க்கு என்பதன்றி " ( பா. 68 )

என்ற பாடற்பகுதிக்கு உரைஎழுதும் பொழுது " நால்வரும் உளம் ஒத்துநின்றமையாலும், சீராளனுக்கும் அருள்புரிய வேண்டிய கடப்பாட்டாலும் முருகனுடன் கூடிய அம்மையும் அப்பனுமாகக் காட்சிதந்தருளினான் " என்பார் வணக்கத்திற்குரிய 45 ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள்" என்று உரையாசிரியர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களை கூர்ந்துள்ளமை,

தம்மை ஆதரித்து வளர்த்த " குன்னக்குடி சாமி " யை நெஞ்சாரப் போற்றிய நன்றிக்கடமையை வெளிப்படுத்துகிறது.

இக்கால உரைநூல்களில் காணவியலாதசெய்தி, இலக்கணக்குறிப்புகளாகும். இந்நூலின் விளக்கவுரைப் பகுதியில் புலவர் அவர்கள் பாடலில் அமைந்துள்ள சொல்லிலக்கணத்தையும், பொருள்கோள் இலக்கணத்தையும் சுட்டிக்காட்டி எழுதியிருப்பது தொன்மைமிக்க புலமைதன்மையைக் காட்டுகிறது. பண்டைக்காலத் தமிழ்ப்புலவரிடத்தில் காணப்படும் இலக்கணப்புலமையை இவரிடத்தில் காணமுடிகிறது. உரையில் சங்கஇலக்கியப் பாடல்கள், திருமுறைப் பாடல்கள், திருக்குறள் உள்ளிட்ட நீதிநூல்கள், ஸ்ரீ குமரகுருபரர்பாடல்கள்உள்ளிட்ட சிற்றிலக்கியங்கள், சித்தாந்த சாத்திரங்கள் ஆகிய பகுதிகளை எடுத்துக்காட்டுகளாகவும், ஒப்புமைப் பகுதிகளாகவும் எடுத்தாண்டிருப்பது, புலவரின் இலக்கிய, இலக்கண, சாத்திரப் பயிற்சியினைக் காட்டுகிறது.

நூலின் முற்பகுதியில் ஆய்வுரை என்றபகுதி அமைந்திருப்பதால் உரைச்சிறப்பை ஆய்வாக அளிக்காமல் மதிப்புரையாகத்தந்து உரையாசிரியர் அவர்களின் புலமைத்திறத்தைப் போற்றிப் பாராட்டிமகிழ்கிறோம். பக்தி சிற்றிலக்கியங்களுக்கு உரைஎழுதும்பொழுது அமைந்திருக்க வேண்டிய அனைத்துமரபுகளும் இந்நூலில் காணப்படுவதைப் பயில்வோர் உறுதியாக உணரலாம். குன்றக்குடி ஆதீனப்புலவர் அவர்கள் இதுபோன்ற தெய்வப் பனுவல்களுக்கு உரைஎழுதித் தமிழகத்துப் பக்தியுணர்வை மேம்படுத்த எல்லாம் வல்ல அருள்மிகு அகிலாண்டேசுவரி உடனுறை ஜம்புகேசுவரப் பெருமான் அருள்புரிவானாக.

திருச்சிற்றம்பலம்.

*******************

## நூல் ஆராய்ச்சி

குன்றக்குடி ஆதீனப் புலவர் வித்துவான் . க . கதிரேசன் எம்.ஏ; பி.எட்.

நறைபழுத்த தீஞ்சுவைக் கனிகள்கொண்ட ஒட்டுப்பழமரவகைகளின் வரிசை கொண்ட பழமுதிர்சோலை யொன்று.அதில் ஓர் அணில் புகுந்தது .விளைவு, வெள்ளாடு மேய்ந்தாற்போல் அங்ககொன்றும் இங்கொன்றுமாகப் பழங்கள் சிலவற்றை, கடித்துச் சுவைத்து மகிழ்ந்தது.அதனால் இயன்றது அவ்வளவே.இவ்வணிலின் நிலையே என்நிலை.அப்பழமுதிர்சோலைதான் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் இந்நூல்.அணிலுக்கு எல்லாப்பழங்களையும் சுவைக்கப் பேராசை!ஆயினும் அவ்வணிலால் இயன்றது மிகமிகச் சிறிதளவே. அணில்சுவைத்த பழங்களும் இடங்களும் இவை.இவையும்பிறவும் உங்கள்பங்கிற்கு.

**கங்கைதாழ்பொன்னி:**

யாதானும் நாடாமால் ஊராமால் என்று வாழும் அருளாளர்களாயினும், அறிஞர்களாயினும், யாரேயாயினும் தத்தம் நாட்டுப்பற்று மிக்கவர்களே.''மருங்கு வண்டுசிறந்தார்ப்ப மணிப்பூ ஆடையது போர்த்துக் கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி'' என்று வாழ்த்துவார் இளங்கோவடிகள்.''கங்கையிற் புனிதம்ஆய காவிரி''என்று காவிரியின் புனிதம் காட்டுவார்ஆழ்வார். மகாவித்துவான்அவர்கள்,காவிரியினது புனிதத்துப் பயன், கங்கையும் வழிபடும் சிறப்பு என்கிறார்.அது,இது.

''கங்கைதாழ் பொன்னி சூழ்திரு வானைக்கா'–பா.41.

**செழுநீர்த்தலம்–அப்புத்தலம் திருவானைக்கா:**

இறைவன்; நிலம்,நீர்,தீ,வளி,விண்,நிலா,பகலோன்,உயிர் என்ற எண்வகைத் திருமேனிகள் தாங்கி அருள்புரிகிறான்.ஐம்பூதங்களுள் ஒன்றான நீர்நிறைந்த கடலாக உலகைச் சூழ்ந்திருக்கும் அவன்,தூயநன்னீராகத் திருவானைக்கா திருக்கோயில் திருவுண்ணாழியில் (கருவறையில்)திகழ்கின்றான்.எனவே இதனை ''நீர்த்தலம்''– அப்புத்தலம் என்பது மரபு.

''தென்ஆனைக் காவானைத் தேனைப் பாலைச்
செழுநீர்த் திரளைச்சென்று ஆடி னேனே''

என்று திருவானைக்கா பதிகம்(திருமுறை.6.)முழுவதும் மகுடம் அமைத்துக் காட்டியும் திளைத்தும் மகிழ்கிறார் அப்பரடிகள்.

காஞ்சியில் அம்மை காமாட்சி,இறைத்திருமேனியை(தாபரம்) மணலால் கூப்பி வழிபட்டது போல்,ஆனைக்கா அண்ணலைச் செழுநீர்த்திரளால் அமைத்து வழிபாடு செய்துமகிழ்தாள் அருள்தரு அகிலாண்ட நாயகி என்பதை;

“ அமுதம் என்றதண் புனலினால் திரட்டி
அமைக்கும் அச்சிவ லிங்கம் அவ்வியல்
அமுத லிங்கம்என்று உரைத்தி டப்படும்”
– □

திருவானைக்காப்புராணம்.மூர்த்தி..7.

என்று கூறி மகிழ்வார் கவிராட்சச கச்சியப்ப முனிவர்.

காஞ்சி,மதுரை போல இதுவும் ஆற்றல்மிக்கதோர்அம்மைத்தலம்–சத்தித்தலம். தலபுராணச் செய்தியையொட்டி,நாடோறும் உச்சிக்கால வழிபாட்டினை,இவ்வம்மையின் திருக்கோலம் பூண்டஅர்ச்சகர்,தன்னை இவ்வம்மையாகப் பாவித்து அம்மையின் திருமுன் இருந்து மேளதாளம்முழங்கப் புறப்பட்டு மூன்றாம் திருச்சுற்றில் வலம்வந்து, அருள்தரு வெண்ணாவல் அண்ணலைஅணுகி முறையாக வழிபாடு செய்வது வழக்கம்.

**அம்மையின் பேரருள்:**

**ஐந்தொழிலுமேவித் தனிநடத்தும் அம்மை:**

அப்பன், பிறநோக்காது தன்னையே நோக்கி நிற்கும்தவஞானி.அம்மையோ, அப்பன் நாடும் அனைத்தையும்,அவனது திருஉளக்குறிப்பின் வண்ணம் தானே முடிப்பவள்.

“நங்கையினால் நாமனைத்தும் செய்தாற்போல் நாடனைத்து
நங்கையினால் செய்தளிக்கும் நாயகன்”. –திருக்களிற்றுப்..76.

“எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்கும்” –சித்தி.சுபக்.115.

என்றபடி,அம்மை ஐந்தொழில்புரியும் நான்முகன் முதலிய அவரவர் மனத்தில் எழுந்தருளி அவர்களை அவரவர் தொழில்களில் ஏவிநடத்தும் ஏவுதற்கருத்தாவாகவும், தானே ஐந்தொழில்களில் மேவி,அவை புரியும்இயற்றுதற் கருத்தாவாகவும் செயற்படுகிறாள்.இவ்விரு செயற்பாடுகளையும்

“ஐந்தொழிலு மேவித் தனிநடத்தும் எங்கோவே”
_கந்தர்கலிவெண்பா.கண்ணி.64.

என்பதுகுறிப்பிடும்.(ஐந்தொழிலுமேவி=ஐந்தொழிலும்+ஏவி,ஐந்தொழிலும்+மேவி).இதனை

“கடவுளர் உளம்புக்கு அமர்திருவானைக் காஅகிலாண்ட நாயகியே” –அகி.மாலை. 2

என்பார் இவர்.

**மூவகைத் தொழிற்கும் மூலம் இவள் :**

படைத்தல்,காத்தல், அழித்தல்,மறைத்தல்,அருளல்என்ற ஐந்தொழில்களையும் முத்தொழில்களில் அடக்கிக்கூறும் மரபினையொட்டி மூவகைத்தொழிற்கும் மூலம் இவ்வன்னையே என்பதை ,வேள்வியில் அவிப்பொருளிட உதவும் அகப்பை,மணிவடம் இரண்டையும் ஏந்திப் படைத்தலுக்குரிய நான்முகனாகவும்;சங்கும்,சக்கரமும்ஏந்திக் காத்தலுக்குரிய திருமாலாகவும்;முத்தலைச் சூலமும்,இலைவடிவான வேலும் ஏந்தி உருத்திரனாகவும் மூவகையில் அருட்காட்சி வழங்குகிறாள்என்பதை;

''தாவரும் சிருக்கு மணிவடம் சங்கு
சக்கரம் சூல்படை இலைவேல்
ஓவருஞ் சிறப்பின் வேறுவேறு ஏந்தும்
உண்மையால் ஒண்மல ரோன்முன்
மூவரும் இயற்றும் மூவகைத் தொழிற்கும்
மூலம்நீ என்பது தெரிந்தேன்'' –

அகி.மாலை.13. என்று

கூறுகிறார்.

**கல்வி,செல்வம்அருள்பவள்:**

இவ்வம்மையின் வலதுகண்ணாகத்திருமகளும்,இடதுகண்ணாகக் கலைமகளும் அமைந்து,இவளை வழிபடுகின்றவர்களுக்கு முறையேசெல்வமும்கல்வியும்வழங்குகின்றனர். மேலும்,அம்மை வழிபாட்டினர்க்கு முற்கூறிய இரண்டுடன் தன்ஞானமாகிய நுதற்கண்ணால் வீடு பேறும் வழங்குகிறாள்என்று, திருவிளையாடற்புராணம் கூடற்காண்டம் செய்யுள்எண்.2. கூறுகிறது.அருள்தருஅகிலாண்நாயகியின் இருகடைக்கண்களும்,தன்அடியார்க்கு,குபேரன் வெட்குமளவு அளப்பரும் செல்வமும்,அகத்தியர் வெட்குமளவு எல்லையற்ற கல்வியறிவும் வழங்குவன என்பதை;

'' வடதிசை யவனும் சமழ்ப்புறக் கனகம்
வாய்ந்துதென் திசைநகத்து அமரு
குடமுனி அவனும் சமழ்ப்புறக் கல்வி
கூர்ந்துமிக்கு உயர்ந்தவர் பலரும்
தடமலர் புரைநின் முகத்திருக் கடைக்கண்
சார்புஒருங்கு உற்றவ ரன்றோ. –அகி.மாலை.2.

என்பார்.

**நிலவும் இவள் மலர்க்கை அலர்ச்சியில்:**

இவ்வம்மையினது கைத்தாமரையின் அலர்ச்சியே–எழுச்சியே நிலவின் அலர்சியை–எழுச்சியை மாற்றும் என்பதே உண்மையாயினும்; உலகவர்,நிலவின் அலர்ச்சியே –எழுச்சியே,தாமரையின்அலர்ச்சியை மாற்றும்என்கின்றனரே,விபரீதமல்லவா இது என்று வருந்துகிறார்.இதன்மூலம் இவ்வம்மையின் அளப்பரிய பேராற்றலைக்கூறுகிறார்.

தருமம் என்றுஉரைக்கும் அளியமர் நின்கைத்
தாமரை மலரினது அலர்ச்சி
பெருமதி மலர்ச்சி மாற்றும் என்றுஉரையார்
பெருமதி அலர்ச்சியே செழித்த
மருமலி கமல மலரினது அலர்ச்சி
மாற்றும்என்று உரைப்பர் ஈதுஎன்னே. –அகி.மாலை.51.

**எமனும் நடுங்குவான்.ஏன்?:**

கோக்காலி மரத்தின் வலிய வேரினைச் சார்ந்து வளரும் பசும்புல்லை உழவரதுவலிய கலப்பை யாதொன்றும் செய்ய இயலாது. அதுபோன்று உன்திருவடியைச்சார்ந்த அற்பமான என்னை எமன் யாதொன்றும் செய்தல் இயலாது(செய்யுள்15)என்று உவமை அணிபொருந்தக் கூறியதுடன் அமையாது;

வெண்ணாவல் நிழல் அமர்ந்த பெருமானின் இடதுதிருவடியாகிய உன்திருவடியைப் பற்றிக்கொண்ட எனக்கு எமபயம் இல்லை. ஏனெனில் எமன்என்அருகில்வரவே அஞ்சுவான். ஏன் தெரியுமா?மார்க்கண்டேயர்க்காக அவனைப் பெருமான் உதைத்த இடது திருவடி உன்திருவடி. அதன்மீதுள்ள அச்சத்தால்,உன்னைப் பற்றிக்கொண்ட என்னைக் குறுகவும்அஞ்சுவான் என்கிறார்.

''பரவுவெண் ணாவல் நீழலோன் இடத்தாள்
பற்றிய என்முனம் குறுக
உரவுசெய் தண்ட தரன்உளம் நடுங்கும்
உதைத்தது அத்தாள் எனவுன்னி. —அகி. மாலை. 75.

இதன்மூலம் எமன்பற்றிய அவரது அச்சமில்லா நிலைமையை அறியலாம்.

**அம்மையின் அருள்வேண்டுமா?:**

இவளை நாம் வழிபடத் தேங்காய் பழம் பூ ஏந்திச் செல்லவேண்டும் என்பதில்லை. அம்மை,நம் தூயஅன்புக்கே ஏங்குகிறாள். இதனை;

" .. .. .. .. .. .. .. .. .. .. .. ..—அன்பன்றித்
தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யும்அவை
சாற்றும் பழமன்றே தான்'' _திருக்களிற்றுப்..55.

என்கிற மெய்ப்பொருளியலை உள்வாங்கிய இவர்;

''தொண்டுஅவாய் மனம்ஆ திகள்ஒருங்கு உய்க்கும்
தூயவர் அன்றிமற் றோரும்
அண்டர்ஆ தியரும் அணுகுஅரு நின்தாள்
அடைவரோ?'' —அகி. மாலை. 22.

என்பதால்,தன்மனம் சொல் செயல் மூன்றினையும் தொண்டுசெய்வதிலேயே ஈடுபடுத்தும் அன்பரே அன்னையின் அருள்பெறுவர் என்கிறார்.

**உன்நுதல்விழி ஆக்கத்திற்கே ஆகட்டும்:**

அப்பனின் நுதல்விழி,மன்மதனை நீறாக்கி, உருவிலாளாய் ஆக்கியது. அம்மையே உன் நுதல்வழி,ஆக்கத்திற்கே ஆகட்டும். என் இருவினைகளையும் உனது நுதல்விழியால் நீறாக்குவதன்மூலம் எனக்கு வற்றாமுற்றாப் பேரின்ப வீடருள். இதனால் எனக்கு ஆக்கம் மட்டுமா? உனக்கு என் அப்பனைக்காட்டிலும் பெரும்புகழ்உண்டு என்று வேண்டுகிறார்.

''விளிமிகு நாயேன் வினையினை எரித்தால்
இரும்புகழ் அவரினும் நினக்குஆம்'' —அகி. மாலை. 71.

என்பது இவரது வேண்டுகோள்.நினக்கு அவரினும் மிகுபுகழ்ஆம் எனக்காரணம், அவர்எரித்தது கட்புலனாகும் உருவத்தை, அம்மை எரிப்பது கட்புலனாகா—அருவமான வினைப்பயனை—ஊழ்வினையை.

**கருணைக் கடல்:**

உயிர்க்குலம் தோன்ற ,வளர,வாழப் பண்டுமுதல் உதவிவருவதுஉலகைச் சூழ்ந்துள்ள கடல்.அம்மையே! நீயும் ஒருபெருங்கடல் போல் அண்டம் சூழ்ந்தவள். எனினும்,கடல் உப்புக்கரிப்பது; எல்லைக்கு உட்பட்டது;அழிக்கவும் செய்வது;பாற்கடலோ நஞ்சும்தந்தது.நீயோ யாரையும் கரித்துக்கொட்டாதவள்;அளவிடற்கரிய மாபெரும் பரப்புடையவள்;பொங்கிஎழுபவளோ அழிப்பவளோ அல்லள்;ஆருயிர்க்கு அமுதம் நினைந்தூட்டும் கருணைத்தாய் என்று குறிப்பில் உணர்த்துகிறார்.

''கருணையங் கடலே அருள்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே! —அகி.மாலை.77.

என்பது அது.

**அம்மையே உன்னை மெல்லியல் என்பது தகாது:**

முப்புரஎரியின் போது வலிய மாமேருமலையை வில்லாக எளிதில்ஏந்தி வளைத்த உன்கொழுநனது ஆற்றல்மிக்க தோள்களை நீ உன் முலைக் கோட்டினால்—முலைச் சிகரத்தால்தளரச்செய்தவள்.மலைவில் வளைத்தஅவனையே தளரச்செய்த உன்னை மெல்லியல் என்பது தகுமா?

'' உயல்மறந்து அடரும் திரிபுரம் சிதைத்த
ஒருவரை எளிதினில் குழைத்த
பயல்மதி முடித்த பாடல்சால் பெருமான்
பாழிஅம் தடநெடும் தோள்கள்
வியன்முலைக் கோட்டால் குழைத்தருள் நினக்கு
மெல்லியல் எனும்பெயர் தகுமோ'' —அகி.மாலை.77.

என்று வினவுகிறார்.தகுமோ—ஓகாரம் எதிர்மறைப்பொருளது.

**மலைமருந்து:**

மலைக்கண் தோன்றும் மருந்தை உண்டாக்குவார் யாருமில்லை;அது ஆற்றல் வடிவானது; உட்கொள்வாரின் நோயினை முற்றாகத்தீர்த்து இன்பமே தரவல்லது; பிற நன்செய்செய் மருந்துகளைவிட மேலான முதன்மையுடையது.அம்மை,போற்றத் தக்க இமயமலைக்கண் தோன்றிய மருந்தாதலின் உடற்பிணி மட்டுமன்றிப் பாசத்தால் வந்த உயிர்ப்பிணியும் தீர்க்கும் அரிய மருந்து.

''வெம்பாசம் மருவிய பிணிகெட மலைதரும் அருமை மருந்தே ''..
– மீ .பி.செங்கீ.9

என்ற விளக்கமான கருத்தைச் சுருக்கமாக இவர்,

"வெற்பு அலர் மருந்தே" அகி.மாலை.67.

என்று விளிப்பார்.

**தலைஅடி சூட்டிஅருள்:**

இத்தொடரில்,"தலை" என்பது தலைசிறந்த என்றும்,நம்உடல்உறுப்பாகிய தலை என்றும் இருபொருள் தரும். எனவே ஞானத்தின் வடிவான தலைசிறந்த உன்திருவடியை– தலையடியை – எனக்குச் சூட்டியருள் என்றும்;என் தலைக்கண் உன்திருவடி சூட்டி அருள் என்றும் இத்தொடர் பொருள்தரும்.

"ஞானத்,தலைவனு மாய்நின்ற தாளிணை தானே" –திருமந்திரம்.897.

தாள்=ஞானம் ஆதலின். "தலைதடுமாற்றம் கொள்ளற்க" என்றவிடத்துத் தலை என்பது இடவாகுபெயராய் அறிவினைக் குறிப்பது போல் இங்கும்அறிவினைக் குறித்து நின்று,"என்அறிவில் ஞானத்தைச்சூட்டியருள்" என்று கொள்வது சிறக்கும்.

திருவடி,மிகமிகக் குளிர்ச்சியானது என்பதை அனுபவத்தில் கண்ட அப்பரடிகள்,திருநல்லூர்ப்பதிகம் முழுவதும் மகுடமாக(திருமுறை.6.)"திருவடிஎன் தலைமேல் வைத்தார் நல்லூர்எம் பெருமானார் நல்லவாறே"என்பதுடன்,திருவடியின் தண்மையை அறிவிக்கும் வகையில்"நனைந்தனைய திருவடி",என்றுஎண்ணிஎண்ணி இன்புற்று நமக்கும்அறிவித்து ஆற்றுப்படுத்துவதை மகுடத்தால் உணரலாம்.

திருவடியின் ஒப்பற்ற சிறப்புணர்ந்த மகாவித்துவான்;"உலக ஆசாபாச அலைகளால் அலைப்புண்டு உன்திருவடியில் மனம் நிலைபெறாத என்மீது இரங்கி,என்தலையில்–அறிவில் உன் திருவடி சூட்டி; இவனைப் பிடி அடிஎன்று தன்தூதர்களுக்கு ஆணையிடும்எமனது தடியடி விலக்கியாள்வதன்மூலம் எனக்கு வீடுபேறு அருள்க என்று வேண்டுகிறார்.

"அலைடி அடைந்த அகத்துஅடி நிலையாது
அலைஅடி யேற்குஇ ரங்குபுுன்
தலைஅடி சூட்டிப் பிடிஎன்பான் தடியடி விலக்கி ஆள்"

– அகி.மாலை.18.

என்பது இவர் வேண்டுகோள்.

**திருவானைக்கா:**

**சோலை :**

கழிதெல்இல் தென்னங்கா(11),அருமலர் நல்கிடும்கா(13).காயினைச்சுமந்த பொழில்(14).கறிபயில் அளிசூழ் பொழில்(45).கனம்சுமக்கும் கா(90).விண்கமழ் கனிபடு பொழில்(100).கப்பு இணர்த்தரு(42).தென்னை ஒத்த பாக்குமரம்(40).

**வயல்:**

கரம்பறு கழனி(66).கரைசெயா வளங்கள்(63).கடையறாமருதம்(23). காவியங் கழனி(5).கரும்புவிளை பூங்கழனி(65).கண்ணருங்கழனி(25).கரும்பு பைங் கமுகில் பொலி கழனி(39).கான்என அரம்பை சூழ்கழனி(9).களமர்மொய்கழனி(7).

**மதில்:**

கல்திணி மதில்கள்(15).கருமுகில் தவழுமதில்917).கருமுகில் உறங்கும் மதில்(19).கடுப்பதுதவிர் மதில்(20).கனல்பயில் மாமதில்(79).ககனம்மேல் ஓங்குமதில்(87). பொருவில்நீறிட்டான் மதில்(76)).மதிலடி கண்டால் பதியடி காண்தகு மதில்.(76)கனக்கடி சூழ்மதில்(87).

**வலம் சூழ்வோர்:**

கற்றவர் புகழ்ந்து சூழ்தல்(21).கரவுதீர் முனிவர் சூழ்தல்(35).களிமிகும் அமரர் சூழ்தல்(71).கடவுளர் பலர்சூழ்தல்(48)நான்முகன் திருமால்சூழ்தல்(56).

**திருக்கோபுரமும் குளமும்:**

கழுமணிச்சிகரி(29)களைத்தடம் சிகரி(84).மணமலர்த் தடம்(14).காவிஆர் தடங்கள்(68).கயல் மலர்த்தடங்கள்(70)கம்பு(சங்கு)அலர்த்தடம்(73).

**தெருவும் மக்களும்:**

காவணம் மலிமறுகு(44).கருள்அற ஒளியின் மலிந்தது(49).கண்டுநேர் மொழியார்(6). கரும்புநேர் மொழியார்(54).கடுவிழி மடவார்(72).கல்நவில்தோளார்(53).

**கழகமும் புகழும்:**

கடிதலில் கழகம்(12).கலகமில் கழகம்(28).கழிநசை முனிவர்புகழ்(3). கழிஉணர்வு உடையார்புகழ்(10).கலையடிஉணர்ந்தார் புகழ்(18).கருந்துழாய் மார்பர் புகழ்(3). கரவுஉறாப்புலவர் புகழ்(.75)

**வினையும்பிறவியும்தீர்ப்பதும் பிறவும்:**

கடியவெவ் வினைதீர்ப்பது(4).கண்டவர்பவம் காணாதது(22).காய்எனப் பவம்முற்று அகழ்வது(34).கங்கைதாழ் பொன்னி சூழ்ந்தது(41).கலம்பகம் உலா பெற்றது(45).கலிதருதுயர் சாராதது(58)கறையற விளங்குவது(62).கண்ணியவரங்கள் தருவது(64).கற்பு(முல்லைமலர்)நந்தவனம் கொண்டது(67).கையர்வந்து அணுகற்கு அரியது(78).

**புராணச்செய்திகள்:**

மார்க்கண்டற்காக் காலனை உதைத்தது(4).தாயைப்புணர்ந்து தந்தையைக்கொன்றமாபாதகம்தீர்த்தது(5)திருஞான சம்பந்தர்க்கு ஞானப்பால்அருளியது (6,28,29.).உபமன்யுமுனிவர்க்குப் பாற்கடல் ஈந்தது(29).ஏடுஎதிர் ஏறச்செய்தது(69). முதலையுண்ட சிறுவனை வரவழைத்தது(29).கண்ணப்பர்,சிறுத்தொண்டர், சண்டீசர், இயற்பகையார் குறிப்புகள்(10).தாய்,தந்தை,மனைவி,சேய்,சுற்றம் கொன்றவர்க்கு அருளியது(14).சிவபிரான் அதுக்கி உமிழ்ந்த வெண்ணாவல்கனி விதையைப் பரிகல சேடமாக விழுங்கிய சம்புமுனிவர்பால் அது மரமாகவளர,அதன்நிழலில் பெருமான் எழுந்தருளியது(30).அருள்தரு அகிலாண்டநாயகி,வெண்ணாவலீசரை வழிபட்டது(30).

முப்புரஎரி(42,72).இறைவி,இறைவனது கண்களைப் பொத்தியது (48,52).சுந்தரரைத் தடுத்தாட்கொண்டது(49,67)திருவடி காணத் திருமால் பன்றியாய் முயன்றது(76). திருநீறிட்டான் மதில்(76)திருமால் தனது கண்மலர் சாத்தி வழிபட்டது(50).பாண்டியன் வேள்வியில் தடாதகைப்பிராட்டி தோன்றியது(53).அம்மை இமவானுக்குப் பார்வதியாகத் தோன்றியது(55).நவமாதர் தோன்றியது(55).அம்மை கைகளில் கங்கையாறு தோன்றியது(55) முருகனுக்குச் சிவபிரான் சத்திவேல் தந்தது(56).சிலம்பி கோச்செங்கணானாகப் பிறந்தது(60).உறந்தைச் சோழன் அணிந்திருந்த முத்துமாலையை, அருள்தரு வெண்ணாவல் அண்ணல் அணிந்தது(64).சிவனுக்கும் மோகினிக்கும் ஐயனார் தோன்றியது(33).கால்மாறிஆடியது(74).அப்பன் மறைக்கோவணமும் அம்மை மறைமேகலையும் தரித்தது(44).

**பழமொழிகள்:**

அழுதபிள்ளை பால்குடிக்கும்(28,29).நொந்தவர்வைவர்(85).வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்(92).

**அரிய கற்பனைகள்:**

**ஒரேநேரத்தில் ஞாயிற்றொளியும் திங்களொளியும்; விளைவும்:**

ஞாயிற்றொளியில் மலர்வது தாமரை; திங்களொளியில் மலர்வது குவளை. ஒரேநேரத்தில்,ஞாயிறும் திங்களும் ஒளிர்தலும்;தாமரையும் குவளையும் மலர்தலும் நிகழ்தல் உண்டா?உண்டு. அம்மையைத் தம்எதிரே கண்ட அடியார்களின் முகத்தாமரைகள், அம்மையின் காதணி(தாடங்கம்)யாம் ஞாற்றொளியால் மலர்ந்தன;அடியார்களின் கண்குவளைகள், அவளது புன்முறுவலால் சற்றே வெளிப்பட்ட முல்லைப் பற்களின் நிலவுஒளியால் மலர்ந்தன என்கிறார்.

“ பூமலி செய்ய பொலிமணித் தோடு
புதுவெயில் எறித்தும்உள் மலர்ந்த
தேமலி ஆம்பற் செய்யவாய் முளைத்த
சிறுநகை இளநிலா எறித்தும்
மாமலி குழல்நின் றவர்முகம் மலர்கண்
வளம்தர முன்புவந்து அருள்வாய். —அகி.மாலை.1

**அம்மையே உனக்கு முழுப்புகழ் வேண்டாமா?:**

அப்பன்;திருஞானசம்பந்தர்க்குப் பால்வழங்குமாறு கூற, நீஞானப்பால் தந்ததனால் ஆனபுகழ்,சொன்னவர்க்கும்,கொடுத்தவர்க்குமாக ஆளுக்குப் பாதி பாதியே.உனக்கு முழுப்புகழ் வேண்டுமா? யாரும் கூறாமலேயே என்மீது கருணைகாட்டி,என்னை அடியவனாக ஏற்றுஅருளினால் அதனாலாய முழுப்புகழும் உன்னையே சேருமல்லவா? இங்ஙனம் அருளின் நீயே முழுப்புகழ் பெறலாம்.அருள்க. —அகி.மாலை.6.

**சிவன் பித்தனா?.**

மிகவும் ஆழமான நீரில்மூழ்கி நீந்தத்தெரியாது தவிப்பவனை,அங்நீர்–கங்கை மும்முறை மேலேதூக்கிவிட்டுக் காக்கும்.ஆனால்நீயோ,அளவற்ற பிழைசெய்தவர்க்கும்உன் தாள் –அருள் –தந்து கரையேற்றும் இயல்புடையவள்.முப்பிழை பொறுக்கும் கங்கையை உன்கணவன் தன் தலையில் வைத்தான். அளவறுபிழைகள் பொறுக்கும் உன்னைத்தன் உருவில்பாதி இடத்தில் வைத்தான்.பிழைபொறுத்தலில்; குறைந்த தடவையே பொறுக்கும் கங்கையைத் தன்தலையிலும்,அளவற்றதடவை பொறுக்கும் உன்னைத்தன் உடம்பிடத்துப் பாதிலும் வைத்ததால் அவன் பித்தன்எனும் பெயர்பெறான் என்கிறார்.

அளவறு பிழைகள் பொறுத்தருள் நின்னை
அணிஉருப் பாதியில் வைத்தான்
தளர்பிழை மூன்றே பொறுப்பவள் தன்னைச்
சடைமுடி வைத்தனன் அதனால்
பிளவியல் மதியம் சூடிய பெருமான்
பித்தன்என்று ஒருபெயர் பெற்றான். –அகி.மாலை.7.

சிறியஇடமான சடைமுடியில்,பிறை,கொக்கிறகு,கொன்றை,எருக்கு முதலிய பலவற்றுடனான மிகச்சிற்றிடத்தில் கங்கை;உனக்கு இடமோ தன்முழுஉடம்பில் செம்பாதி. எனவே அவன் பித்தனல்லன் என்பதைப் பெறவைத்தார்.

**ஒரு விடுகதை:**

அப்பன் கையில் ஒருவன்னி;அம்மையே! உன்கையிலும் ஒரு வன்னி.இதனால் இருவர் இயல்பும் ஒத்தன எனலாம்.ஆயினும் அப்பன்கைவன்னி எழுநாவுடையது.உன்கை வன்னியோ மேன்மேலும் மகிழ்ந்து அனைவரும் கேட்க விரும்பும் ஒருநாவுடையது. அவன் கைவன்னியாது?உன்கைவன்னியாது?குற்றமறச் சொல் என்பது விடுகதையின் வினா.

வன்னி என்றசொல்;நெருப்பு, கிளி என்ற இருபொருளும் தரும் ஒருசொல். அப்பன்கை வன்னிஎன்பது நெருப்பு.அம்மைகை வன்னி என்பதுகிளி.இதுவேஇதன்விடை.

– அகி.மாலை47.

**அம்மை,விளையாட்டாக அப்பன்கண்களைப் புதைத்போது நுதற்புதைக்காது,வலக்கண் இடக்கண் புதைத்ததேன்?.**

உலகியலில் கண்பொத்தி விளையாடுதல் கருத்தொருமித்த காதலிடத்தும் உண்டு. அப்பனின் கண்களை விளையாட்டாகப் பொத்திய அம்மை,அப்பனது நுதற்கண் புதைக்காது,பிறஇருகண் பொத்தினாள்.மலையத்துவச பாண்டியனின் வேள்விதீயில் தடாதகைப் பிராட்டியாகத் தோன்றிய வாஞ்சையால் தீ வடிவான நுதற்கண் புதைத்திலை என்ற அமைதிகூறி,நீதோன்றியது பாண்டியர் குலமாகிய சந்திரகுலம் என்பதை மறந்தாய் போலும்! அதனால்தான் நிலவாக விளங்கும் இடதுகண் புதைத்தனை என்றுகூறி நகையாடுகிறார்.

“தென்னவன்.. .. .. ..ஓர்ந்திலையோ” –அகி.மாலை.53.

**தலைமதியன் சிவபிரான்:**

அம்மையே!உன்கொழுநனுக்கு உனது இடை,தோள்,பற்கள்,முலைகளில் கொண்ட பெருவிருப்பால்,அவன், உனது இடை ஒத்த வெற்றிடமாகிய—ஆகாயத்தலமாகிய—சிதம்பரத்தலம்,உன்தோள்களை ஒத்த மூங்கிலால்பெயர் பெற்ற வேணுவனம்(திருநெல்வேலி. வேணு=மூங்கில்),உன்முல்லைப் பற்கள் ஒத்த முல்லையரும்பால் பெயர்பெற்ற திருமுல்லை வாயில், உன் முலைகள் ஒத்த குன்றான திருக்கயிலை ஆகிய இடங்களில் உள்ளான். எவ்வகையிலும் உன்னைப் பிரிய விரும்பாத அவன்"தலைமதியன்"—தலைசிறந்த ஞானியாவான்.(தலையில் மதிசூடியவன் ஆவான்)என்று புகழ்கிறார்.

"தேவிநின் இடைதோள் ஒத்திடு குணத்தால்
சிதம்பர தலத்தும்வேய் வனத்தும்
மேவிய நகைமுத்து அணிமுலை ஒக்கும்
விதத்தினால் திருமுல்லை வாயில்
பாவிய கயிலை இடத்தும்வீற் றிருப்பன்
பரன்தலை மதியனே அன்றோ." — அகி.மாலை.93.

**கண்ணாடிக்காட்சி தந்த ஐயம்:**

நம்ஒப்பனையை நாம்கண்ணாடியில் கண்டு மகிழ்வதுபோலத் தனக்குப் பணிவிடை செய்யும் தேவமகளிர் கண்ணாடிகாட்ட அம்மை கண்டாள்.அதன் வலப்பாகத்தில் ஒருபெண் உருவமல்லவாஉள்ளது.அவ்விடத்தில் தன்கொழுநன் இல்லையே!என்று ஐயம்கொண்டுஅவனோடு நீ பிணங்காதே.கூர்ந்து நோக்கினால்அவன் பிழைஇல்லான் என்பதை நீயே அறிவாய் அவ்வுரு உன்னுருவே என்கிறார்.

கண்ணாடியில் நம் வலதுபக்கம் இடதுபக்கமாகவும், இடதுபக்கம் வலதுபக்கமாகவும் காணப்படுவதன் அடிப்படையில் எழுந்த கற்பனை இது.

"இறையவன் வாமத்து உறையுநீ தொழில்செய்
இமையவர் தருப்பணம் காட்ட
மறைவுஇல்மற்று அதனை நோக்கிஅவ் விறைவன்
வலப்புறத்து ஒருமடக் கொடிநன்கு
உறைவதுஎன் எனமற்று அவனொடு பிணங்கேல்
உற்றுநோக் கிடில்பிழை இல்லான்
கறைமலி களத்தன்.. .. .. அகி.மாலை.95.

**நீ அம்மியில் வைத்த காலும்,அப்பன் ஆடஎடுத்த காலும்எனக்குத்துணை:**

அம்மையின் திருமணநிகழ்ச்சி காண்பார் கண்களுக்குப் பெருவிருந்து என்று இவர் தனது பெருந்திருப்பிராட்டி பிள்ளைத்தமிழில் கூறுவார்.அத்திருமணநிகழ்ச்சியில், தாயே!அப்பன் உன்வலது காலைத்தொட்டு அம்மிமேல் வைத்தான்.அதை நினைத்து,அந்த உன்வலதுகால் துணைஎன்று ஒருமுறை கூறுவேன். பிறிதொருமுறை,அப்பன் ஆட எடுத்த திருவடி துணை என்பேன்.இப்படி மாற்றிமாற்றிக் கூறுவதால் என்னைச்"செம்பொருள்"

பற்றிய ஒருதுணிவும் இல்லாதவன் என்று இகழாதே.நான்,அத்திருவடிகள் இரண்டும் உன்னுடையனவே என்றதெளிவால்தான் கூறினேன்.நீயே எனக்குத்துணை என்று தேர்ந்தேஅவ்வழி நின்றேன் என்கிறார்.

அருளுவதில் அம்மையின் முதன்மையான அருளிப்பாட்டினை நினைந்து இங்ஙனம் கூறுகிறார். ''முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருள்''என்று திருவாதவூரரும், ''தாயுடன் சேர்ந்து தாதையைக் கூடி''என்றுபட்டினத்தாரும்கூறுவன நினைக.

''அம்பலத்து ஆட எடுத்ததாள் துணை என்று
அறைவன்ஓர் கால்மலை யரையன்
வம்பலர் முன்றில் திருமணத்து அம்மி
வைத்ததாள் துணைஎன்பன் ஓர்கால்
செம்பொருள் துணியான் என்றுஎனை இகழேல்
தேர்ந்துஒரு வழிநின்றேன் அன்னாய்'' – அகி.மாலை.73.

**தாயே! உன் உன்உள்ளங்காலில் பிறைச்சுவடு ஏன்?.**

''காமக் கிடப்பினுள் பணிந்த கிளவி
காணுங் காலை கிழவோற்கு உரித்தே''. தொல்.1106.
என்ற நூற்பாவின் அடிப்படையில் எழுந்த கற்பனை இது.

அம்மை,ஊடி மலரணையில் கிடக்கும்போது அவ்வூடலைத்தீர்க்க,அப்பன்''சீறேல்'' என்று அவள் சீரடி பணிந்தான்.அதனால் ஊடல்தணியாத அம்மை, தன்காலிற்பட்ட தலையைத் தன்காலால் உதைத்ததால் மலரினும் மெல்லிய அத்திருவடியில் அவன்தலையில் இருந்த பிறையின் சுவடுபடியும் என்ற கற்பனையில் எழுந்த வினாஇது.

உன்கொழுநன் தலையில் பிறை இருப்பதால்,அவன்தலையில் பிறைச்சுவடு பொலிவதுபற்றி யாருக்கும் ஐயம் எழாது.ஆனால்,மறைகளும் உறுதற்கரிய உன்திருவடி யகத்திலும் அப்பிறையின் சுவடுபொலியக் காரணம் என்ன? என்மீது சினவாது கூறு என்று வினவுகிறார்.

''சிறுபிறைக் கொழுந்து வீற்றிருத் தலினால்
தேவதே வன்திரு முடிமேல்
மறுவில்அச் சுவடு பொலிதரும் ஐயம்
மருவுறாது அஃதுமற்று எவர்க்கும்
உறுமறைக்கு அரிய நின்னடி அகத்தும்
ஒளிரும்அச் சுவடுகா ரணம்என்
கறுஒழித்து உரைப்பாய்''.. .. . .. .. .. ... – அகி.மாலை.31.

அந்தப்புரத்துப் படுக்கையறை நிகழ்ச்சியின் விளைவே இச்சுவடு என்ற உறுதிப்பாட்டினால் என்மீது சினவாது–கறுஒழித்து–உரைப்பாய் என்றுவேண்டுகிறார்.

**இலக்கணக்கற்பனை :திருமகளும்,கலைமகளும்நீயே:**

''மலர்பூ'' என்பது,மலர்ந்தபூ,மலர்கின்றபூ,மலரும்பூ என்று விரியும் தன்மையால் வினைத்தொகை எனப்படுவதுடன்;மலர்ஆகியபூ என்றும் அமைந்துபண்புத் தொகையாகவும் கூறப்பெறும். அதுபோல,''தாமரை தாங்குவார்''என்றதொடர்,தாமரையால் தாங்கப்படுவார் என்று விரிந்து திருமகளையும் கலைமகளையும் குறிக்கும். மேலும், ''தாமரைதாங்குவார்'' என்ற இத்தொடரே அனைவரும் விரும்பும் உன்செங்கையில் நீ தாமரை தாங்கி இருக்கும் தன்மையால் உன்னைக்குறிக்கும். உன்உறுப்பாகிய கண்களாக அமைந்தவர்கள் திருமகளும் கலைமகளும் என்பதால் நீயே அவ்விருவருமாக உள்ளாயாதலின் செல்வமும் கல்வியும் நீயே அருள்கிறாய் என்கிறார்.

அகி. மாலை. 39.

இதனைச் செய்யுள் எண்38 உடன் ஒப்பு நோக்குக.

**மெய்ப்பொருளியல் கூறுகள்:**

**இருவினைச் சிமிழ்ப்பு:**

ஒருவனை இறுகப்பிணிக்க ஒருவிலங்கே போதுமானது. கைகளிலும்கால்களிலும் விலங்கானால் என்னபாடுபடுவான். அதுபோலஉயிர்கள்,பொன்விலங்கு,இரும்பு விலங்கு என்பவற்றால் தம்மைத்தாமே பிணித்துக் கொண்டுள்ளன. தாமே பிணித்துக் கொண்டமையால் அதுபற்றிய நினைவோ சிந்தனையோ சிறிதும்இல்லாமல் பிறந்தும்இறந்தும்;சுவர்க்கம், இப்பூவுலகு,நரகம்என்பனவற்றில் அமுந்தி அமுந்தி;அலைந்துஅலைந்து துன்புறுகின்றன. பிறர்க்குத் தீங்குசெய்பவனைவிட, தனக்குத்தானேதீங்கு இழைத்துக்கொள்பவன் மிகவும் கொடியவன் மாபாவி அல்லவா? எனவே,

'' இருவினைச் சிமிழ்ப்புண்டு உழல்கொடியவன்''

என்கிறார். —அகி. மாலை. 19.

**இன்துதியும் புன்துதியும்:,,,,,,,**

தேனொழுக்குப்போல எவ்வித ஆரவாரமும்இல்லாமல் தூயஅன்பினால் அமைந்த வழிபாடே இன்துதி. பிறர் தன்னை வியந்து பார்க்கவேண்டும், கூறவேண்டும் என்பதற்காக அமைந்த ஆரவாரமான அன்பற்ற வழிபாடு புன்துதி. இதில் தேங்காய் பழம் பூமாலை முதலியன நிறைந்திருப்பினும் அன்பின்றேல் பயனில்லை.

''அன்பேஎன் அன்பேஎன்று அன்பால் அழுதரற்றி
அன்பேஅன் பாக அறிவுஅழியும்—அன்பன்றித்
தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்'' – திருக்களிற். 55.

அன்பின் வழிப்பட்ட வழிபாடு இனியதன்மை மாறாத குயிலின் இன்குரல் என்றும், இதற்குமாறான ஆகுல வழிபாடு காக்கைகரைதல் என்றும்உவமைகாட்டி விளக்குகிறார்.

'' இடையறா அன்பின் மெய்கொடு துதிப்பார்
இன்துதி முன்னர்மெய்ந் நிழல்போல்
புடையறா வினையேன் பொய்கொடு துதிக்கும்

புன்துதி எங்ஙனம் என்னில்
நடையறாத் தேமாங் குயில்குரல் எதிர்ஓர்
அரிட்டமும் கதறுதல் பொருவும்''. —அகி.மாலை.23.
(அரிட்டம் =காக்கை)

**மனம் ஆதிகளால் தொண்டு அவாவுக:**

வழிபாட்டில் நம் ஒவ்வோர்உறுப்பும் நிற்க வேண்டிய நிலைகளை, அப்பரடிகளின் ''திருவங்கமாலை''வலியுறுத்தும்.நம்மனம் மொழி மெய் ஆகியமூன்றும் வழிபாட்டில் ஒருவழிப்படுதல் இன்றியமையாதது.

'' மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
இனமலர் கையில் கொண்டங்கு இச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுதல் அகற்றி வாழும் செயல்அற மானால் யார்க்கும்
முனம்ஒரு தெய்வம் எங்கும் செயற்குமுன் நிற்கு மன்றே.'' சித்தி.114.

என்று ஒழுகின்''தெய்வம் மடிதற்றுத் தான்முந்துறும்''என்ற பொய்யாமொழி,மெய்ம்மொழியாய் இலங்கும்.இதனை;

'' தொண்டுஅவாய் மனம்ஆ திகள்ஒருங்கு உய்க்கும்
தூயவ ரன்றிமற் றோரும்
அண்டர்ஆ தியரும் அணுகரு நின்தாள்
அடைவரோ'' —அகி.மாலை.22.

அதிகார மலத்தரான தேவர்களும் நெருங்குதற்கரிய உன்திருவடியைத் தொண்டு அவாய் மனம்ஆதிகள் ஒருங்கு உய்க்கும் தூயவரே அடைவர் என்கிறார்.

**உணர்த்த உணர்வன உயிர்கள்:**

பிறந்ததுமுதல் தாய்,தந்தை,உடன்பிறந்தார்,ஆசிரியர்,உலகவர் என்று ஒவ்வொருவரும் உணர்த்த உணரும் நிலையினரே நாம். இவர்கள் அனைவரும் முக்குண வசத்தரேயாதலின் முறைமாறி உணர்த்துதல் இயல்பே.முற்றும் உணர்ந்த பரம்பொருள் மட்டுமே உள்ளதை உள்ளவாறு உணர்த்துவதாதலின்,உயிரினத்தரான திருமால் முதலியோரும் பரமனைப் பழுதறத் தாமே உணரார், திருவருள் உணர்த்தவே உணர்வர் என்பதை;

'' .. .. .. ..முகுந்தன் ஆதியரிடத் தினும்நீ
பழுதற உணர்த்தா விடின்உணர் வாரோ பரமனை'' – அகி.மாலை.27.

''அறிவிப்பான் தானே'' என்பது,அம்மையின் அற்புதத்திருவந்தாதி. ஆட்டுவிப்பவனும் அடங்குவிப்பவனும்;ஓட்டுவிப்பவனும் உருகுவிப்பவனும்;பாட்டுவிப்பவனும் பணிவிப்பவனும்;காட்டுவிப்பவனும் பரம்பொருளே என்பார் அப்பரடிகள்.

**அப்பன்,அம்மை உறவுமுறைகள்:**

சிவமும் சத்தியும் பொருளும்ஆற்றலுமாக—அம்மையப்பராக—விளங்குவதை இணைபிரியாக் கணவன்மனைவி நிலையில் வைத்துக்கூறுவது மரபு.மெய்ப்பொருளியல் கூற்றுப்படி,உயிர்க்குல ஈடேற்றத்தின் பொருட்டுச் சிவமும்சத்தியும் பலநிலைகளில்நின்று அருள்புரிகிறது.பிரித்தற்கு இயலாநிலையில்அம்மையப்பராக உள்ள சிவம், அருளிப்பாட்டின் பொருட்டு,முதலில் தன்னிடமிருந்து சத்தியைத் தோற்றுவிக்கிறது.இந்நிலையில், சிவம், சத்திக்குத்தாயும்,சத்தி சிவத்திற்கு மகளும் ஆகின்றனர்.உலக இயக்கத்தின் பொருட்டுச் சத்தி சதாசிவத்தை தோற்றுவிக்கும் போது;அம்மைக்குச் சதாசிவம்மகனும், சதாசிவத்திற்கு அம்மை தாயும்ஆகின்றனர்.இந்நிலைகளை மிகச்சுருக்கமாக;

''சிவம் சத்திதன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்துஇரு வரும்பு ணர்ந்துஇங்கு உலகுஉயிர் எல்லாம் ஈன்றும்'' —சித்தி.167.

என்பார்அருள்நந்தி சிவம். இச்சுருக்கச் செய்தி, திருமந்திரம், திருவாசகம்,சிதம்பரச் செய்யுட்கோவை ஆகியவற்றில் மேலும்தொடர்ச்சியாகக் கூறப்பெறுவதைச் செய்யுள்.34.இன் விளக்கப்பகுதியில் காணலாம்.

சிவம் சத்தி ஆகிய இருவரின்தாய்,மகள்உறவினையும்,மகன்தாய் உறவினையும் மட்டும் இலக்கியச் சுவையுற,தற்குறிப்பேற்றஅணி அமைய;

'' நினைஉணர் மகள்தாய் மரபுஎன ஒருமான்
நெடுங்கைஏந் தினன்பெம்மான் அம்மான்
தனைஉணர் மகன்தாய் மரபுஎனக் கிள்ளை
தன்னைநின் கையில்ஏந் தினையால்.'' அகி.மாலை.57.

கிள்ளை என்றசொல் கிள்+ஐ என்று தொடர்மொழியாய் நின்று,நெருக்கமான தலைவன்— கணவன்என்ற பொருளைத் தருவதுடன், கிள்ளைஎன்று ஒருமொழியாய் நின்று அம்மைதன் கையில்ஏந்திய கிளியையும் நினைப்பிக்கும்.''கிள்ளை தன்னை நின்கை ஏந்தினையால்''என்றதொடரில் கிள்ளைஎன்பது கிளியை நினைப்பிப்பதாயினும்,இங்குக் கிள்ளை என்பது தொடர்மொழியாய்,கிள்+ஐ என்றுநின்று,நெருக்கமான தலைவன் என்ற பொருளேதரும். இங்ஙனம் கூறுவது ஒருவகைக் கவித்துவம்—சமத்காரம் என்பது மரபு.

**உன் இடை துடிஒத்ததா?.**

அம்மையின்இடையினை,அப்பன் கைத்துடி ஒக்கும் என்பது பொருந்துமா எனின், பல்லுலகுஈன்றது அம்மையின்இடை, பல்லுலகு தோற்றுவிப்பது துடி( உண்மை விளக்கம், 35) இரண்டின் நடுவிடமும் சிறுத்தனவே . ஆயினும் இடையைச்சார்ந்த திருவயிறுபோல் துடியைச் சார்ந்த இருபக்கங்களும் மிகமிக மென்மையானவையல்ல, வன்மையனவே.. எனவே அம்மையின் இடைக்குத் துடிஒப்பாகாது என்று முடிக்கிறார்.

''பல்லுலகு ஈன்ற நின்திரு உதரப்
பால்உளது என்னும்நின் இடைநேர்
ஒல்லுமாறு இலதா யினும்ஒரு பக்கம்
ஒத்தலின் சிருட்டியை ஆற்றும்

வெல்லுநா யகன்கைத் துடிஎனின் நின்றன்
மெல்வயிற் றிற்குஅது புகழோ.''　　　　—அகி.மாலை.91.

**பிண்ட நூல்:**

பிண்டம் என்பது,பலவற்றைக் கூட்டி ஆக்கிய ஒருபொருளாகும் .எனவே நமதுஉடல்,உறுப்புகள்,உலகு ,அனுபவப்பொருள்கள் (தனுகரணபுவனபோகப்பொருள்கள்) ஆகியஅனைத்தும் பிண்டப்பொருள்களே_ஐம்பூதக்கூட்டினால் ஆனவையே.இவை ஒருநாள் அழியும் என்பது மெய்ப்பொருளியலுக்கும்,அறிவியலுக்கும் ஒத்தமுடிபேயாகும்.

இப்பிண்டப்பொருள்களை அம்மை விளையாட்டாய்ப் படைக்கிறாள்என்பதும், அப்பன்அவற்றைக் கடையூழியில் எளிதில் அழிக்கிறான் என்பதும் மெய்ப்பொருளில்கூற்று. இப்படைத்தல், அழித்தல் ஆகிய இருவேறு செயல்களையும் உட்கொண்டு இயற்றப்படுவது, ஆண்பால் பிள்ளைத் தமிழின் சிற்றில்பருவம்.சிறுமியர் சிற்றில் இழைக்க,அச்சிற்றிலைப் பிள்ளைத்தமிழுக்கு உரியவன் சிதைப்பதும், “சிற்றலைச் சிதைக்காதே'' என்று அதனை இழைப்போர் வேண்டுவதும் இப்பருவத்து மையக்கருத்து.

இதனை உளங்கொண்டஇவர்,''அம்மையே!நீ பிண்டப்பொருள்களை அமைத்து அமைத்து ஆடுவாய்.அப்பன் அவற்றை அழித்து அழித்து ஆடுவான்.நீ அதுபற்றிச்சிறிதும் கவலைப்பட மாட்டாய்.ஏனெனில் பிண்டப்பொருள்கள் அனைத்தும் அழியக்கூடினவே என்பதாலும்,அழிக்கும் அவன் பித்தன் என்று கூறப்பெறுவதாலும் நீ பேதை(பெண்) என்பதாலும் அவன்செயலைப் பொருட்படுத்த மாட்டாய்''என்கிறார்.

''அண்டகோ டிகள்என்று உரைத்திடும் சிற்றில்
அமைத்துஅமைத்து ஆடிடு வாய்நீ
துண்டவாள் மதியம் சூடிய சடிலச்
சுந்தரன் அழித்துஅழித்து ஆடும்
பிண்டநூல் என்றும் பேதைநீ அனையான்
பித்தன்என்று உரைப்பதும் மெய்யே.''　　　　—அகி.மாலை.81.

என்பது அச்செய்யுள்.

**உணரவல்லவர் யார்? .**

அப்பனை''ஞானத்தான்''(அற்புதத் திருவ.6)என்றும்;''ஞானம்திருஉருவா'' (கந்தர்கலி.34—35.)என்றும்குறிப்பதால், தனக்கென்று''ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றும் இல்லானாய் ஆயிரம் திருநாமம்''(திருவாசகம்.235.) பெற்றவனாய், “மேல்உயர்ந்த எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும் அக்கோலத்து அவ்வுருவே ஆம்'' (அற்புதத் திரு.33.)என்றும்,''யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்''(சித்தி.115.)என்றும்,''மைப்படிந்த கண்ணாளும்தானும் கச்சி மயானத்தான் வார்சடையான் என்னின் அல்லான்,ஒப்புடையனல்லன் ஒருவனல்லன் ஓரூரன்அல்லன் ஓர்உவமனில்லி,அப்படியும்அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக் காணின்அல்லான்,இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றுஎழுதிக் காட்டொணாதே''என்றும்,''ஓசையால் உணர்வார்க்கு உணர்வரியவன்''

(திருவாசகம்.574.) ( = உரை உணர்வு கடந்து நின்ற ஒருவன் என்பது இதன் கருத்து– மகாவித்துவான்,ச.த அவர்களின்''குருவருள்விளக்கம்'')என்றஇச்செய்திகளை உள்ளடக்கி,

''உணரவல்லவர் யார்'' –அகி. மாலை.86.

என்றுமுடித்துக் காட்டுகிறார்.மேலும்இதனை ;

''உணர்ந்தார்க் குணர்வரியோன் தில்லைச்சிற்றம்பலத்து ஒருத்தன்''–திருக்கோவையார்.9.

''உண்டுஓர் ஒண்பொருள் என்றுஉணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்றுஅறி யொண்கிலை'' –திருவாசகம்.46.

'' உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்'' பெரியபுராணம்.1.

முதலியனவும் உறுதிப் படுத்தும்.

**என்னை இரண்டின்நீக்கி ஒன்றுடன் ஒன்றாக்கி அருள்க:**

உமாபதிசிவத்தின் கொடிக்கவிகூறும் திருவைந்தெழுத்து வகைகளுள் சூக்குமத் திருவைந்தெழுத்தாய் ஞானம் அருள்வது ''சிவாயநம'' என்பது. இதில்சிவத்தைச் சிகரம்,சத்தியை வகரம்,உயிரை யகரம்,மறைப்பாற்றலை நகரம்,மலத்தை மகரம்குறிக்கும். இவற்றில்,சிவத்துக்கும் உயிருக்கும் இடையில்நிற்கும் சத்தியே, நகர மகரக் குறியீடான மறைப்பாற்றலும் மலமும் இவற்றை உயிர்ஆகிய யகரத்திலிருந்து நீக்கி,உயிரைச் சிவத்துடன் சேர்த்துச் சிவத்துடனான அத்துவிதநிலையை உயிர்க்கு அருள்வது. இதனை மகாவித்துவான் அவர்கள்

''ஓதுறு முறைமை ஒன்றின்முன் மூன்றனுள்
ஒருசிறி யேற்கும்நின் பதிக்கும்
போதுறு குழல்நீ நடுப்பொலி தலினால்
புரிந்துநின் பதியொடும் எனைப்பின்
தீதுறும் இரண்டின் நீக்கிஒன் றாக்கும்
திறன்நினக் கன்றியார்க் குளது?'' அகி.மாலை.43

என்கிறார்.

முறைப்படி ஓதுதற்குரிய ஞானம் அருளும் சிவாயநம என்ற திருவைந்தெழுத்தில் முன்னே உள்ள''சிவாய'' என்ற மூன்றினுள்,மலர்சூடிய கூந்தலுடையாநீ(வ),சிவத்துக்கும்(சி) உயிருக்கும்(ய) நடுவில் சிறந்து விளங்குவதால் என்மீது கருணைகூர்ந்து, இத்திருவைந்தெழுத்தில் இறுதியில் உள்ளனவாகிய மறைப்பாற்றல்(ந), மலம்(ம) இரண்டிலிருந்தும் என்னை நீக்கி,சிவத்துடன் ஒன்றாக்கும் திறன் உனக்கன்றி வேறுயார்க்கும் இல்லை.அங்ஙனம் நீயே எனக்கருள்க என்பது இதன் கருத்து

உயிர்கள்,சிவத்துனான அத்துவிதநிலையில் இன்புற முன்னின்று உதவுகின்றவள் அன்னையே :

'' முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருள்'' – திருவெம்பாவை.

"தாயுடன் சேர்ந்து தாதையைக் கூடிப்பின் தாயை மறந்து
ஏயுமதே நிட்டை" பட்டினத்தார்

என்பார்.

திருச்சிற்றம்பலம்

உ

**திருவானைக்கா**

**அகிலாண்டேசுவரி மாலை**

**மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை**

**காப்பு:** **செல்வ விநாயகர்**

திருவளர் கபோல மதப்பெருக்(கு) உண்டு
தெவிட்டுகார் வண்டினம் எழுந்து
மருவளர் செய்ய சாந்தினுள் மறைந்த
மத்தகம் மீதுதங் கிடுதல்
கருவளர் மணிகள் பதித்தபொற் குடத்தில்
கவினவீற் றிருந்(து)அருள் கொழிக்கும்
உருவளர் செல்வ விநாயகன் பொற்றாள்
உபயபங் கயம்முடிக்(கு) அணிவாம்.

**குறிப்புரை:** திரு= பொலிவு. கபோலம்= கன்னம். மரு= நறுமணம். செய்யசாந்து= சிறந்தசந்தனச்சேறு. கரு= கருமை. உபய பங்கயம்= இருதிருவடித் தாமரைகள்.

**பொழிப்புரை:** பொலிவுமிகு கன்னமதப் பெருக்கினைப் பருகித் தெவிட்டிய கருவண்டின் கூட்டம், அங்கிருந்து புறப்பட்டு மத்தகம் மறையுமாறு பூசிய சிறந்த சந்தனச்சேற்றில் தங்கியிருப்பதுபோல , கருமணிகள் பதித்த பொற்குடத்தில் அழகுற வீற்றிருக்கும் பொலிவுடன் அருள்கொழிக்கும் அழகுமிகு செல்வ விநாயகப் பெருமானின் இருதிருவடிகளாகிய தாமரைமலர்களை நம்தலைக்கண் சூடுவோம்.

**இலக்கணக்குறிப்பு:** திரு வளர்கபோலம், மரு..வளர்சாந்து, கரு..வளர்மணிகள், உரு..வளர்செல்வவிநாயகன்– வினைத்தொகைகள்.இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமை அணி.

நூல்

பூமலி செய்ய பொலிமணித் தோடு
புதுவெயில் எறித் (து)உள் மலர்ந்த
தேமலி ஆம்பல் செய்யவாய் முளைத்த
சிறுநகை இளநிலா எறித்து

மாமலி குழல்நின் றவர்முக மலர்கண்
வளம்தர முன்புவந்(து) அருள்வாய்
காமலி வானும் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** செய்ய பூமலி = சிறந்த அழகுமிக்க . மணித்தோடு= மணிகள் பதிக்கப் பெற்ற காதணி. புதுவெயில் = இளவெயில். தேமலிஆம்பல் = தேன்மிக்க ஆம்பல்மலர். வாய்முளைத்த = வாயில் தோன்றிய. சிறுநகை = சிறுபற்கள். மாமலி= மேன்மை மிக்க. குழல் = கூந்தல் உடையவளே. முகமலர் = முகமாகிய தாமரைமலர் கண்=கண்ணாகிய குவளைமலர். கா = கற்பகச்சோலை.
காமலி..நாயகியே! மாமலிகுழல்!நின்றவர் முகமலர் கண் வளம்தர, பூமலி .... எறித்து,முன்பு வந்து அருள்வாய் என்க.

**பொழிப்புரை** : கற்பகச் சோலை மலிந்த வானுலகத்தேவர்களும் புகழும்திருவானைக்கா அகிலாண்டநாயகியே! மேன்மை மிக்க கூந்தல் உடையவளே! உன்எதிரே நின்றவர்களது முகமாகிய தாமரை மலரும், கண்களாகிய குவளை மலர்களும் ஒருசேர மலருமாறு; சிறந்த அழகுமிக்க உன்காதணி இளவெயில் வீசவும், சிறிதே மலர்ந்த தேன்பொருந்திய செவ்வாம்பல் மலர் ஒத்த திருவாயில் முளைத்த வெள்ளிய சிறுபற்கள் இளநிலாஎறிக்கவும் முன்தோன்றி அருள்வாயாக.

**விளக்கம்:** காதணி இளவெயிலால் உன்எதிரே நிற்கும் அடியவர்களுடைய தாமரைமுகமும், புன்முறுவலால் தோன்றிய நிலவொளியால் குவளைக்கண்களும் மலர வருக என்றார். ஞாயிறும் திங்களும் ஒரேநேரத்தில் ஒளிர்தலும், இவற்றால் தாமரையும் குவளையும் ஒரேநேரத்தில் மலர்தலும் புதுமை.

**இலக்கணக் குறிப்பு:** ஆம்பல் செய்ய வாய்–உவமைத்தொகை. நகை இளநிலா, முகமலர்– உருவகங்கள் . முகமலர் கண் –உம்மைத்தொகைகள். இச்செய்யுள் முறை நிரல்நிறை யணி.இல்பொருள் உவமையணியுமாம்.

2 . வடதிசை யவனும் சமழ்ப்புறக் கனகம்
வாய்ந்துதென் திசைநகத்(து) அமரும்
குடமுனி யவனும் சமழ்ப்புறக் கல்வி
கூர்ந்துமிக்(கு) உயர்ந்தவர் பலரும்
தடமலர் புரைநின் முகத்திருக் கடைக்கண்
சார்(பு)ஒருங்கு உற்றவர் அன்றோ
கடவுளர் மனம்புக்(கு) அமர்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** வடதிசையவன் = வடக்குத்திசைத் தலைவனாகிய குபேரன். சமழ்ப்புற=வெட்க.நகம்= மலை–பொதிகை மலை. குடமுனி= அகத்தியர். தடமலர்=பெருமை பொருந்திய தாமரைமலர். கடைக்கண் சார்பு= திருக்கடைக்கண் நோக்கு– அருள். கடவுளர்= திருமால் முதலியோர்.

**பொழிப்புரை :**நான்முகன்,திருமால்,அரன் முதலிய கடவுளர் மனத்தில் எழுந்தருளி அவர்களை இயக்கும் திருவானைக்கா அகிலாண்டநாயகியே! வடதிசைத்தலைவன் ஆகிய குபேரனும் வெட்குமாறு பொருட் செல்வங்கள் பெற்றும், தென்திசைப் பொதிகை மலையில் அமர்ந்த அகத்திய முனிவரும் வெட்குமாறு பலதுறைக் கல்விச்செல்வம் மிக்கும் உயர்ந்தவர் அனைவரும் பெருமை பொருந்திய தாமரை ஒத்த உனது திருமுகத்தின் கடைக்கண் நோக்கினை ஒருசேரப் பெற்றவரல்லவா!

**விளக்கம் :** ''நங்கையினால் நாமனைத்தும் செய்தாற்போல் நா(டு)அனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்''

–திருக்களிற்றுப்படியார்–78.

என்றபடி, நாயகன் நாடியதை அவ்வாறே இயற்ற ,அம்மை பிறதெய்வங்களின்மனதில் எழுந்தருளி அவர்களைத் தொழிற்படுத்துகிறவள் ஆதலின் '' கடவுளர் மனம்புக்குஅமர்'' என்றார்.மேலும்,

''திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப்
பெருமகள் நுதற்கண் ஆகப் பெற்றுவான்செல்வம் கல்வி
அருமைவீ(டு) அளிப்பாள் ''

திருவிளையாடற்பு..நான்மாடக்..2.

ஆதலின்,இவ்வம்மையின் வலதுகண் இடதுகண் நோக்குகளைப் பெற்றவர்,முறையே செல்வமும் கல்வியும் பெற்றனர்.

**இலக்கணக் குறிப்பு :** வடதிசை, தென்திசை–வடக்கு,தெற்கு என்பன இனம் விலக்கிய அடைகள். வடதிசையவனும்குட முனியவனும் –எண்ணும்மைகள் . தட–உரிச்சொல்.இச்செய்யுள் முறை நிரல்நிறையணி.

3 .

விழிவிருந்(து) உதவு நின்திரு மணத்தில்
விமலனார் கரமலர் மேற்கொண்(டு
ஒழிவரும் கருங்கல் மிசையுறு நின்தாள்
உற்றஎன் கரமலர் மேற்கொண்(டு)
இழிவற அடியேன் மனக்கலின் இடத்தும்
இயைந்(து)உறும் என்(று)உனைத் துதித்தேன்
கழிநசை முனிவர் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை :** கழிநசை= மிக்க விருப்பம். மேற்கொண்டு= பற்றிக்கொண்டு. ஒழிவு அரும்நின்தாள்=திருவருள் வற்றாத திருவடி.என்கரமலர் மேற்கொண்டு= என்கைத் தாமரைகளால்பற்ற அதில் எழுந்தருளி. மனக்கலின்இடத்தும்=மனமாகிய கருங்கல்லினிடத்தும். இயைந்துறும் = சேர்ந்துபொருந்தும் .

**பொழிப்புரை :** மிக்க விருப்புடன் முனிவர்கள் புகழும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!பார்த்தவர் விழிகட்கு விருந்தளிக்கும் உன் திருமணநாளில் மலம் என்றும்

இல்லாத சிவபெருமான் தமது கைம்மலரால் பற்ற அம்மிக்கல் மீது பொருந்திய உனதுதிருவருள் வற்றாத திருவடியை,நான் என் கைம்மலர்களால் சிக்கெனப் பற்ற,என் மும்மலஇருள் தீருமாறு என்மனமாகிய கல்லிலும் பொருந்தும் என்பதால் உன்னை வணங்குகிறேன் .அருள்க.

**விளக்கம்:** அம்மை,மங்கலமுனிவர்க்கு மகளாகத் தோன்றிப் ''பெருந்திரு''என்ற பெயருடன் இருந்தகாலை,அப்பன்–''எழுமுனிவர்க்குஇறை''(திருத்தவத்துறை இறை) மணந்த விழிவிருந்தாகும் காட்சி:

''நனிஉயர் வான மணப்பந் தரின்மறை நாதன் மகம்புரிய
நாரணன் முதலியர் பணிதலை நிற்ப நயம்பெறு கணநாதன்
முனிவரர் அரஒலி செய்(து)இரு கைகள் முகிழ்ப்பப் பல்லியம்ஏழ்
முகில்ஒலி சாய்ப்ப அரம்பையர் வாழ்த்துமு ழக்கக் கடிமலர் வாழ்
வனிதையர் நின்னை அணிந்து பணிந்தும ணத்தவி(சு) ஏற்றஅவண்
மங்கல மாமுனி பன்னியொ டும்புனல் வாக்கம கிழ்ந்தேற்றுக்
குனிமதி வேணியர் தொட்ட கரம்..''
–பெருந்திருப்பிராட்டிபிள்ளைத்..சப்பாணிப்..8.

உன் தாளினை விமலர் கரமலர் பற்றச் சடமாகிய அம்மிக்கல் ஏறியநீ,என்கரமலர்களால் உன்திருவடி பற்றச் சித்தாகிய என்மனக்கல்லில் ஏறி அருள்க என்றார்.உன்மலர்த்தாள் அம்மிக் கல்லில் ஏறியதன் பயன் திருமண நிறைவு;அதுபோலத் திருவடி என் மனக்கல் ஏறுவதன் பயன் நான் வீடுபேறு பெறுதல் பயன் என்பது குறிப்பு.

திருவடி பெறுதலே வீடுபெறுதல்.எனவேதான்;
''நின்னிற் சிறந்தநின் தாளிணை யவை'' –பரிபாடல்.4.
என்றார்கடுவன் இளவெயினனார்.

**இலக்கணக் குறிப்பு:** கடி,கழி– உரிச்சொற்கள். கருங்கல்–கருவியாகுபெயர். கலின்– இடைக்குறை. கரமலர்–உருவகம்.இச்செய்யுள் உருவக அணி.

4. அடியனேன் கொடியன் என்றுமுன் வருதற்(கு)
அஞ்சினை எனின்வெங் கூற்றம்
மடியமுன் உதைத்தான் துணையடைந் தேனும்
வருதிமற் றதுநினக்(கு) அரிதோ
நெடியவன் பிரமன் இந்திரன் முதலோர்
நித்தமும் தாழ்ந்து சூழ்ந்(து) ஏத்திக்
கடியவெவ் வினைதீர்ந்(து) உயர்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை;** நெடியவன்= திருமால். சூழ்ந்து= வலம்வந்து. கடிய வெவ்வினை= வலிமையான கொடிய இருவினை. உதைத்தான்= உதைத்த உன்கணவன்_ அருள்தரு அமிர்தகடேசுவரர்என்னும் பெயருடைய அருள்தரு வெண்ணாவலண்ணல்.

**பொழிப்புரை ;** திருமால் நான்முகன் இந்திரன் முதலியோர் நாடோறும்வணங்கி வலம்வந்து போற்றித்தம் இருவினை தீர்ந்து உயர்தற்குரிய திருவானைக்கா அகிலாண்டநாயகியே!அடியவனாகிய என்னைக் கொடியவன் என்று கருதி என்முன் வந்துஅருளஅஞ்சுவாயானால் ,முன்பு கொடிய எமன் மடியுமாறு உதைத்த உன்கொழுநன் துணைபெற்றாவது என்முன் வந்து அருள்புரிக. இங்ஙனம் வருதல் உனக்கு அரியதன்றுஎளியதே.

காலனைக் கடிந்தது:

"மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டர்க் காக அன்று
காலனை உதைப்பர்''

_ திருமுறை4 .திருக்கடவூர் வீரட்..9:3–4.

**இலக்கணக் குறிப்பு :** வருதி –வியங்கோள் வினைமுற்று. உதைத்தான்– வினையாலணையும் பெயர். அரிதோ– ஓகாரம் எதிர்மறை. நெடியவன் பிரமன்இந்திரன் எண்ணும்மைத் தொகைகள்.

5. பாவிநீ நின்முன் வருவது தகா(து)என்
பரிசினுக்(கு) என்பையேல் முன்னம்
ஆவிசூழ் மதுரை அகத்துமா பாவி
ஆயினான் ஒருவன்முன் முக்கண்
கோவினோ(டு) அடைந்த குணத்திநீ அலையோ
குல(வு)அது மறந்தனை கொல்லோ
காவியம் கழனி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** அம்காவி சூழ்கழனி. காவி=குவளை மலர். என் பரிசு=என் உயர்ந்த தன்மை.ஆவி=குளம் மாபாவி= தன்தாயைக் கூடித் தந்தையைக் கொன்ற மாபாவி.முக்கண் கோ=முக்கண் தலைவன்–சிவபெருமான். குலவுஅது= அருள் விளங்கும் அச்செயல்.

**பொழிப்புரை:** அழகிய குவளை மலர்களையுடைய நன்செய் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!என்னை "நீபெரும்பாவி ஆதலின் உன்முன் வருவது எனது உயர்ந்த தன்மைக்கு ஏற்றதன்று'' என்று நீ கூறுவாயானால் , முன்னொரு காலத்தில் குளங்கள் உடைய மதுரை மாநகரில் வாழ்ந்த மாபாவி ஒருவனுக்கு அருள்புரிய,நீஉன் கணவனாகிய முக்கண் தலைவனுடன் அவன்முன் சென்று அருள்புரிந்த கருணைக் குணத்தியல்லவா? அருள்வழங்கும் உன் அச்செயலை மறந்து விட்டாயா? என்முன் வந்து அருள்புரிக.

இதில் சுட்டப்பெறும் வரலாற்றைத் திருவிளையாடற் புராணம் மாபாதகம் தீர்த்தபடலத்தில் காண்க

**இலக்கணக் குறிப்பு:** அலை– இடைக்குறை. அலையோ– வினாஓகாரம் முக்கண்கோ– காரணப்பெயர்.

6 . பண்டுநீ பெருமான் அருள்வழிப் புகலிப்
பாலனுக்(கு) அளித்தனை ஞானம்
மண்டுமற் றதனால் முழுப்புகழ் நினக்கே
ஆயதோ இரங்குபு நீயே
தொண்டுகொண்(டு) அடியேற்(கு) அளித்தனை யாயின்
தூயநிற் கேமுழுப் புகழாம்
கண்டுநேர் மொழியார் பயில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** புகலிப்பாலன்= சீர்காழித் திருஞானசம்பந்தர். மண்டுஞானம்= மிக்க அபர, பரஞானங்கள். கண்டு=கற்கண்டு.

**பொழிப்புரை:**கற்கண்டினை ஒப்ப இன்மொழி பேசும்மகளிர் பயிலும்திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! முன்நாளில் நீ சிவபிரான் அருளியவண்ணம் சீர்காழிச் செல்வன் ஆகிய திருஞாசம்பந்தருக்கு உன் திருமுலைப்பால் மூலம் அபரஞானம் பரஞானம் இரண்டினையும் அளித்ததனால் ஆன புகழ் உனக்கு மட்டுமே உரியதன்று. சொன்ன உன் கொழுநனுக்கும் உனக்குமாக ஆளுக்குப் பாதிபாதியே உரியதாகும். நீயே வலிய என்மீது இரக்கம்கொண்டு, என்னை உன் தொண்டனாக ஏற்று உன்கணவன் கூறாமலேயே ஞானம் இரண்டினையும் அடியேற்கு அளித்தருளின் முழுப்புகழும் உனக்கே அல்லவா. முழுப்புகழ் பெற அவர் கூறாமலேயே எனக்கு அருள்க.

**விளக்கம்:** இறைவன் அருள ஞானப்பால்தரப் பருகியதும் பெற்றனவும்:

"துணைமுலைகள் பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத்து ஊட்டு" என, வழங்கப் பருகிப் பெற்றவை "உவமை இலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்"
திருமுறை 12.பா.1969–1970.

**இலக்கணக் குறிப்பு:** இரங்குபு –செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

7. அளவறு பிழைகள் பொறுத்தருள் நின்னை
அணிஉருப் பாதியில் வைத்தான்
தளர்பிழை மூன்றே பொறுப்பவள் தன்னைச்
சடைமுடி வைத்தனன் அதனால்
பிளவியல் மதியம் சூடிய பெருமான்
பித்தன்என்(று) ஒருபெயர் பெற்றான்
களமர்மொய் கழனி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** களமர்= உழவர். உருப்பாதி= பாதிஉரு. பொறுப்பவள்=பொறுத்துக் கொள்ளும் கங்கையாள். பிளவு இயல் மதியம்= கீற்றுப்பட்ட நிலவு–பிறைநிலவு.

**பொழிப்புரை:** உழவர்கள் மொய்த்துப் பணிசெய்யும் நன்செய் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்டநாயகியே! உன் கொழுநன்; பிறரது அளவற்ற பிழைகளைப் பொறுக்கும்

உன்னைத் தன்திருவுருவின் பாதியில் மட்டுமே வைத்தான். ஆனால் தன்பால்மூழ்கித் தத்தளித்து மனம் தளர்கின்றவரை, அப்பிழை பொறுத்து மும்முறைமட்டும் மேலே தூக்கிவிடும் கங்கையாளைத் தன்சடைமுடிமேல் வைத்தான். யாரை எப்படி ஆளவேண்டும் என்றின்றி அளவற்ற பிழைபொறுக்கும் உன்னிலும் அவளைத் தலைமேல் வைத்ததால் அவன் பித்தன் –பைத்தியம் பிடித்தவன் – என்ற பெயர் பெற்றான்.

**விளக்கம்:** தண்ணீர் தன்பால் மூழ்கி நீந்த அறியாது தத்தளிப்பவரை மும்முறை மேலே தூக்கிவிடும் என்பது மரபு. கங்கையின் இருப்பிடம் சடைக்காடு. அவ்விடம் பிறை,எருக்கு,பாம்பு முதலிய மிகப்பல இருக்கும் சிற்றிடம். ஆனால் அம்மையின் இடமோ அப்பன் திருமேனியில் செம்பாதி. ஆயினும் இச்செய்யுளில் அம்மையைப் பழிப்பது போலப் புகழ்கிறார்.

**இலக்கணக் குறிப்பு:** இச்செய்யுள் புகழாப் புகழ்ச்சி அல்லது வஞ்சப்புகழ்ச்சி யணி.

8. பெரும்புகழ் அமைந்த நின்பதி என்னும்
பிரணவ குஞ்சரம் நின்கை
அரும்புவில் கரும்பு விரும்புபு கவரும்
அடல்புரிந்(து) என்றுளம் குறித்தோ
வரும்புகர் முகம்கொள் அங்குச பாசம்
வயங்குற ஏந்தினை நாளும்
கரும்புயல் நிறத்தோன் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரும்புயல் நிறத்தோன்= கார்மேகவண்ணத் திருமால். பதி=கணவன். பிரணவ குஞ்சரம்= பிரணவ வடிவமான சிவபெருமானாகிய யானை. அரும்பு= மலர். விரும்புபு= விரும்பி. அடல் புரிந்துகவரும். அடல்புரிந்து= வலிமை காட்டி. வயங்குற= விளங்க.

**பொழிப்புரை:** கார் மேகவண்ணத்திருமால் வலம் வந்து வணங்கும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பெரும்புகழ் பொருந்திய உன் கணவனாம் பிரணவ வடிவனாகிய புள்ளிகளை உடைய முகத்துடன் வரும் யானை,உன்கையில் உள்ள மலரினையும், வில் ஆகிய கரும்பினையும் தின்னவிரும்பித் தனது வலிமைகாட்டிக் கவர்ந்துவிடும் என்று எண்ணியோ நீ எப்போதும் உன்கைகளில் யானையைஅடக்கும் அங்குசம்,பாசம் ஆகிய படைக்கலன்களை ஏந்திஉள்ளாய்.

**விளக்கம்:** சிவன் ஓங்காரவடிவன் என்பதால் அவனை ஓங்கார வடிவினதாகக் கருதப்பெறும் யானை என்றார். அம்மை, தன்னைப் பிரியாதிருக்கும் இந்த யானை, தன்கை மலரையும்,கரும்பையும் கவர்ந்துவிடும் ; அப்படி நிகழ்தல் கூடாது என்ற எண்ணத்தால் தன்கைகளில் அங்குசமும் பாசமும் ஏந்தியுள்ளாள் என்கிறார்.
சிவன் ஓங்கார வடிவன்:''ஓம் எனும் ஓங்காரம் ஒண்சித்தி முத்தியே''–திருமந்திரம். 2676 :4

**இலக்கணக் குறிப்பு:** விரும்புபு– செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

9 . யான்என(து) என்னும் செருக்(கு)இழந் தவர்மற்று
இழப்புறார் நின்னைஈ(து) உண்மை
தான்என மறைகள் முழங்கவும் உணராச்
சழக்கனேன் நினையிழந்(து) உழல்வேன்
மீன்என வயங்கும் கண்ணிணாய் கொடியனேன்
வினைக்கும்ஓர் இறுதிஉண் டாம்கொல்
கான்என அரம்பை சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** அரம்பை= வாழைமரம். யான்= அகப்பற்று. எனது= புறப்பற்று, உன்னை இழப்புறார்= உன்னையடைவர். ஈது தான் உண்மை. சழக்கனேன்= தீயவனான நான். வினை= இருவினை. உழல்வேன்= துன்புறுவேன். செருக்கு= மனமயக்கம்.

**பொழிப்புரை:** வாழைமரங்கள் காடுபோல் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அகப்பற்று புறப்பற்று ஆகிய யான்எனது என்ற மனமயக்கம் இழந்தவரே உன்அருளை அடைவர். இதுவே உண்மை என்று வேதங்கள் முழங்கவும், அதனை உணராத நான் உன்அருளை இழந்து துன்புறுவேன். கெண்டைமீன் போலும் கண்களை உடையவளே! கொடியவனாகிய எனது இருவினைகட்கும் உன்அருளின்றி முடிவு உண்டோ? இல்லை. எனவே நான் என் இருபற்றுகளையும் முழுவதும் அறுத்து ஈடேறி உன்னை அடைய அருள்க.

**விளக்கம்:** யான்எனது:

“ யான்எனப் பெயரிய நச்சுமாமரம் நனிமிகு முளைத்து”
–பட்டினத்..திருவிடைமருதூர்மும்மணி..10.

“யான்எனது என்று அற்ற இடமே திருவடியா”
– கந்தர் கலிவெண்பா.. கண்ணி 34.

“யான்எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.” திருக்குறள்.346.

**இலக்கணக் குறிப்பு:** என= உவமை உருபு.

10 . விழிஇடந்(து) அப்பி மகவுஅரிந்(து) ஊட்டி
விருப்புறு தந்தைதாள் தடிந்து
பழியகல் மனையை உதவிமற் (று) இன்னும்
பலசெயற்(கு) அரியசெய் தார்க்கே
மொழியும்நின் கொழுநன் அருள்செய்வான் என்னால்
முடிதரா(து) என்(று)உனை அடைந்தேன்
கழிஉணர்(வு) உடையார் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கழிஉணர்வு=மிகச்சிறந்த நல்லுணர்வு. விழிஇடந்து அப்பியவர்– கண்ணப்பர் ஆகிய திண்ணனார். மகவு அரிந்து ஊட்டியவர்– சிறுத்தொண்டர். தந்தைதாள் தடிந்தவர்– சண்டீசர் ஆகிய விசாரசர்மர். மனைவியை உதவியவர்= இயற்பகையார். மொழியும்= புகழப் பெறும்.முடிதராது= முடியாது.

**பொழிப்புரை :** மிகச்சிறந்த நல்லுணர்வு உடையவர்கள் புகழும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! புகழப்பெறும் நின்கணவன்,தனது கண்ணைத் தோண்டி அப்பிய கண்ணப்பர் ஆகிய திண்ணனார், தன்மகன் சீராளனை அரிந்து சமைத்து அடியார்க்கு ஊட்டமுற்பட்ட சிறுத்தொண்டர், தன் தந்தைதாள் தடிந்து சண்டீசர் ஆகிய விசாரசர்மர், பழியேதும் இல்லாத தன்மனைவியைச் சிவனடியாராக வந்த சிவபெருமானோடு அனுப்பிய இயற்பகையார் போன்று செயற்கரிய செய்தவர்க்கே அருள்புரிவான் என்பதை உணர்ந்து, அங்ஙனம் செய்தல் என்னால் இயலாதுஆதலின் அருள் பெற உன்னைச் சரணடைந்தேன். எனக்கு அருள்க.

**விளக்கம் :** கண்ணப்பர்:''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக்– கண்ணப்பர் தாம்அறிதல் காளத்தியார் அறிதல் அல்லதுமற்(று யாம்அறியும்அன்பன்(று) அது'' – திருக்களிற்றுப்..1–3.

சண்டீசர்:''தாதையை வேதியனைத் தாள்இரண்டும்_சேதிப்பக்
கண்டுஈசர் தாம்ஆம் பரிசளித்தார்.''
–திருக்களிற்றுப்..19:2–3

சிறுத்தொண்டர்: ''வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லேன்''
–பட்டினத்தார்.

இயற்பகையார்:''இன்புறு தாரம் தன்னை ஈசருக் கன்பர் என்றே
துன்புறாது உதவும் தொண்டர்.''
பெரியபுரா..இயற்பகை..36.

**இலக்கணக் குறிப்பு:** உனை– இடைக்குறை. கழிஉணர்வு– உரிச்சொற்றொடர்.

11 . வழிபடும் அடியர் ஆயினார் தமக்கே
வழங்குதும் கருணைவே றாய
பழிபடும் அவர்க்கு வழங்குறாம் என்னின்
பயோதரம் மருதம்முன் அன்றிப்
பொழிசுவை நறுநீர் புல்உவர் நிலத்தும்
பொழியுமே புண்ணியப் பொருளே
கழிதல்இல் தென்னங் காத்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கழிதல்= குறைதல். வேறாய= அடியவரின் வேறுபட்ட. வழங்குறாம்=வழங்கமாட்டோம்.பயோதரம்=மேகம். புல் உவர்நிலம்= அற்பமான களர்நிலம்.

**பொழிப்புரை:**குறைவின்றி நிறைந்த தென்னஞ் சோலைகளை யுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! வணங்கும் அடியவர்களுக்கு மட்டும் கருணை வழங்குவோம் அடியவரின் வேறுபட்டவர்களாகிய பழியினர்க்குக் கருணை வழங்க மாட்டோம் என்று நீ கூறினால் அதுஉன் தகுதிக்குப் பொருந்தாது. ஏனெனில்மேகம் தான் பொழியும் சுவையான நன்னீரை மருத நிலத்தில் பொழிவதன்றி, அற்பமான களர் நிலத்திலும் பொழியும். புண்ணியப் பொருளாய் உள்ளவளே எனக்கும் அருள்க.

''கழிதல்'' என்பதற்கு வீணாதல் என்று பொருள்கொண்டு, தனது எப்பொருளாலும்வீணாதலின்றிப் பயன்படும் தென்னை எனினும்அமையும்.

**விளக்கம்:** மேகத்தின் இயல்பு:

''அறுகுளத்து உகுத்தும் அகல்வயல் பெய்தும்
உறுஇடத்து உதவா உவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போல'' –புறநானூறு: 142:1–3.

''மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ''
–கபிலர்அகவல்.

''எல்லார்க்கும் பெய்யும் மழை''

**இலக்கணக் குறிப்பு:** மருதம் முன்- முன்–ஏழன்உருபு. தமக்கே–ஏகாரம்பிரிநிலை; தேற்றமும்ஆம். வழங்குறாம் –உயர்வு கருதிய தன்மைப் பன்மை வினைமுற்று. இச்செய்யுள்வேற்றுப்பொருள்வைப்புஅணி.

12. கொடியவன் இவற்கும் அருள்புரி என்(று)உன்
கொழுநனுக்(கு) எனைக்குறித்(து) உணர்த்த
முடிவுஇல் அருளால் எண்ணினை யேல்அம்
முதல்வன்நின் ஊடலை உணர்த்த
அடிபணி பொழுதில் உணர்த்திடல் வேண்டும்
அ∴துடன் பலிக்கும்நீ அறிதி
கடிதல்இல் கழகம் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கடிதல்=வெறுத்து ஒதுக்குதல். கழகம்=தொண்டர் கூடுமிடம். **பொழிப்புரை:** வெறுத்துஒதுக்குதல் இல்லாத தொண்டர்கூடுமிடம் பல உள்ள திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன் கொழுநனிடம்'' கொடியவனாகிய இவனுக்கு நீ அருளவேண்டும்'' என்று எல்லையற்ற உன் கருணை காரணமாகக்கூற எண்ணுவை.அப்போது அம்முதல்வன் உன்ஊடலைத் தீர்க்க, உன்கால்களில் தன் தலைபட வணங்கும்போது உணர்த்தியருள்க.ஏனெனில் அப்போது கூறுவது உடனே நிறைவேறும் என்பதை நீ அறிவாய். எனவே அங்ஙனம் அருள்க.

**விளக்கம்:** தலைவன் பணிமொழி:

"காமக் கிடப்பினுள் பணிந்த கிளவி
காணுங் காலை கிழவோற்கு உரித்தே" —தொல்கா..1106.

ஆதலின் உன்கொழுநன் உன்ஊடல் தீர்க்கப் பணியும் போது கூறுக என்றார்.

13 .

தாவரும் சிருக்கு மணிவடம் சங்கு
சக்கரம் சூல்படை இலைவேல்
ஓவரும் சிறப்பின் வேறுவேறு ஏந்தும்
உண்மையால் ஒண்மல ரோன்முன்
மூவரும் இயற்றும் மூவகைத் தொழிற்கும்
மூலம்நீ என்பது தெரிந்தேன்
காஅரு மலர்நல் கிடும்திரு வானைக்
காஅகி லாண்ட நாயகியே.

**குறிப்புரை:** அருமலர்= சிறந்த மலர்கள். தாவரும்= கெடுதல் இல்லாத. சிருக்கு= வேள்வியில் ஆகுதிஇடும் அகப்பை. சூல்= சூலம். இலைவேல்= இலைவடிவான வேல். ஓவரும்=ஒழிதல் இல்லாத. முன்= முதலான. மூவர்= நான்முகன்,மால்,உருத்திரன். மூலம்= முதற்பொருள்

**பொழிப்புரை:** அரியமலர்கள் மலரும் சோலைகளையுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நீ கெடுதல் இல்லாத சிறப்பினையுடைய சிருக்கு, மணிவடம்,சங்கு,சக்கரம், சூலப்படை,இலைவடிவான வேல் ஆகியவற்றை ஒழிதல் இல்லாத சிறப்புடன் வேறுவேறாக நீ ஏந்தியுள்ள காரணத்தால் ஒளிபொருந்தியதாமரை மலரில் இருக்கும் நான்முகன் முதலான மூவரும் இயற்றும் படைத்தல்,காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களுக்கும் முதல்வி நீ என்பதை அறிந்தேன்.எனவே நீ எனக்கு உன்அருளைப் படைத்தும், காத்தும்,என் மலத்தினை அழித்தும் எனக்கு வீடருள்க.

**விளக்கம்:** நான்முகனுக்குரியன சிருக்கு,மணிவடம்.திருமாலுக்குரியன சங்கு, சக்கரம். உருத்திரனுக்குரியன சூலம்,வேல் ஆகும்.

மூவர்க்கும்முதல்வி: "மும்முதற்கும் வித்தே வருக." —மீ .பி .தமிழ்.10.

**இலக்கணக் குறிப்பு :** சிருக்கு மணிவடம் சங்கு சக்கரம் சூல்படை இலைவேல்_ எண்ணும்மைத்தொகைகள்.மூவர்—தொகைக்குறிப்பு.மூவர்க்கும்—முற்றும்மை. இச்செய்யுள் முறை நிரல்நிறையணி.

14 .

தாயினைக் கொன்றும் தந்தையைக் கொன்றும்
தவலறு மனைவியைக் கொன்றும்
சேயினைக் கொன்றும் கடும்பினைக் கொன்றும்
சேர்ந்தவர்க்(கு) அருள்வன்நின் கொழுநன்
வீயினைப் பொருவும் பதம்அடைந் தார்க்கே

விருப்பின்நீ அருள்வ(து)ஓர்ந்(து) அடைந்தேன்
காயினைச் சுமந்த பொழில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** தாயினைக் கொன்றவர்=தந்தை சோற்படி தாயியினைக் கொன்றவர் பரசுராமர். தந்தையைக் கொன்றவர்= விசாரசர்மர் என்ற சண்டீசர்.மனைவியைக் கொன்றவர்= இறைவனுக்கு வைத்திருந்த மலரினை எடுத்த கையை,மோந்த மூக்கை வெட்டிக் கொன்றவர் கழற் சிங்கர்.தவலறு=குற்றமற்ற.சேயினைக் கொன்றவர்= அடியார் உணவுக்கு மகன் சீராளனைக் கொன்றவர் சிறுத்தொண்டர். கடும்பு= சுற்றத்தார். கடும்பினைக் கொன்றவர்= சிவபுண்ணியத்துக்கு வைத்திருந்த நெல்லினை உண்ட சுற்றத்தாரையும்கொன்றவர் கோட்புலியார்.வீ=மலர்.பதம்=திருவடி.

**பொழிப்புரை:**மிகுதியான காய்களைச் சுமந்த சோலைகளுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!தன்னை அடைக்கலம்அடைந்ததால் பரசுராமர்,சண்டீசர், கழற்சிங்கர், சிறுத்தொண்டர்,கோட்புலியார் ஆகியோர் கொலைசெய்திருந்தும் அவர்களுக்கு அருளியவன் உன்கணவன்.நான் அத்தகு செயல்களை நான் செய்யமாட்டாமையால் உனது மலர் ஒத்த திருவடிகளைச் சரண்அடைந்தேன். எனக்கு விருப்புடன் அருள்க.

**விளக்கம்:** பரசுராமர் தாயினை கொன்றதைக் காஞ்சிப்புரணம் பரசிராமேச்சரப்படலம், சண்டீசர் முதலியோர் வரலாற்றைப் பெரிய புராணம்ஆகியவற்றில் காண்க.

**இலக்கணக் குறிப்பு:** பொருவும்– உவமவுருபு. அடைந்தார்= வினையாலணையும் பெயர். அடைந்தார்க்கே= ஏகாரம் தேற்றம்.

15 : குற்றியை அடைந்த பசும்புலை உழுநர்
கொடியவன் நாஞ்சில்என் செயும்அப்
பெற்றியின் நின்னை அடைந்தநா யேனைப்
பிறைஎயிற்(று) அந்தகன் கரத்துப்
பற்றிய தண்டப் படைசெயல் என்னே
பரவிய கருணைவா ரிதியே
கற்றிணி மதில்கள் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** திணிகல்= வலியகல். குற்றி= வலிய கோக்காலிமரம்.நாஞ்சில்= கலப்பை. பெற்றி= தன்மை. அந்தகன்= எமன். வாரிதி= கடல்.

**பொழிப்புரை:** வலிய கருங்கல்லால் ஆன மதில்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்டநாயகியே! அண்டமெல்லாம் பரவியுள்ள கருணைக்கடலே! வலிய கோக்காலி மரத்தைச் சார்ந்துள்ள பசியபுல்லை, உழவரது கொடிய வலிய கலப்பை யாதொன்றும் செய்ய இயலாது. அத்தன்மைபோல உன் திருவடியை அடைக்கலமாக அடைந்த என்னை, மூன்றாம் பிறைபோல் வளைந்த கூரிய பற்களையுடைய எமனது தண்டாயுதம் ஏதும் செய்ய இயலாது.

**விளக்கம்:** கற்றார் கல்லார்,செல்வர் வறியர்,சான்றோர் சால்பிலார் முதலிய வேறுபாடின்றி ''எப்போதாயினும் கூற்றுவன் வருவன்,தரியான் ஒருகணம் தறுகணாளன்'' ஆதலின் அவனை அந்தகன்= கண்ணிலான் என்றார். புல்லினைக் கொல்வதால் ''கொடிய'' என்றும், மண்ணினைக் கீழ்மேலாகப் புரட்டிப் போடுவதால் ''வன்'' என்றும் கலப்பை அடைகள் பெற்றது.

குற்றி அடைந்த புல்லை,நாஞ்சில் கொல்ல இயலாது:

''கொல்லை இரும்புனத்துக் குற்றி அடைந்தபுல்
ஒல்காவே ஆகும் உழவர் உழுபடைக்கு
மெல்லியரே ஆயினும் நற்சார்வு சார்ந்தார்மேல்
செல்லாவாம் செற்றார் சினம்.'' –நாலடியார்.அதிகா.14.8

திருவருள் பெற்றவர் எமனுக்கு அஞ்சார்:

''நமனை அஞ்சோம்'' –அப்பரடிகள். மறுமாற்றுத்திருத்தாண்ட.
''கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்'' –திருவாச..அச்சப்..10.
'' பட்டிக் கடாவில் வரும் அந்தகா உனைப் பார்அறிய
வெட்டிப் புறங்கண்டால் அலாதுவிடேன். . .
. . . . .சத்திவாள் என்கையதுவே'' –கந்தர்அலங்கா..64.

**இலக்கணக் குறிப்பு:** கல்திணி –இலக்கணப் போலி.இச்செய்யுள் உவமை அணி.

16 . முடிமிசை ஒருமந் தாகினி வாழ
முதல்வன்வைத் திடுதலின் சிறந்த
கொடிஅவள் என்று யார்நினைப் பவர்கா
கோதரம் எருக்(கு)எலும்(பு) ஆதி
படிதரும் இடத்தில் சற்(று)இடம் உடம்பில்
பாதியோ இடம்அருள் தாயே
கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கடி=நறுமணம். மந்தாகினி= கங்கை. கொடி= பெண். காகோதரம்= பாம்பு. படிதரும்=வாழும். ஆதி என்றதால் பூளை,பிறை, கொன்றை முதலியனவும் கொள்க.

**பொழிப்புரை :** நறுமணம் கமழும் மலர்களையுடைய குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்கொழுநன் தன்தலைமேல் கங்கை என்ற பெண்ணைஅவள் வாழுமாறு வைத்துள்ளதால், கொடிபோல் சிறந்தவள் அவள் என்று யார்கூறுவார்?யாரும்கூறார். தாயே!அத்தலையில் எருக்கு,எலும்பு,பாம்பு, கொன்றை, பூளை முதலியனவும் வாழும் காரணத்தால் அக்கங்கைக்கு உரியது மிகச்சிற்றிடமே. அது உனக்கு உள்ளது போல் அப்பனின் முழுஉடம்பில் பாதியன்று.எனவே நீயே சிறந்தவள்.

**இலக்கணக் குறிப்பு:** கொடி–உவமையாகுபெயர்.பாதியோ–ஓகாரம் எதிர்மறை. இச்செய்யுள் வேற்றுமையணி.

17 . பெருவளன் அமைந்த நீர்உரு வாய
பெருந்தகை நீர்உரு வாய
ஒருகுல மகளை மலர்மிசைத் தேவும்
உணர்தராக் காட்டிடை வைத்தான்
அருகுநுண் இடைநிற்(கு) அஞ்சியே யன்றோ
அணிஉருப் பாதிமற்(று) இலையோ
கருமுகில் தவழும் மதில்திரு வானை
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை :** அருகுநுண்..அஞ்சியே, பெருவளன்..மறைத்தான்.அருகு நுண்= மிகநுட்பமான.நீர் உருவாய பெருந்தகை= நீர்வடிவாக விளங்கும்திருவானைக்கா இறைவன். ஒருகுலமகள்= சிறந்த குலமகளாகிய கங்கை. காடு= சடைக்காடு. இலையோ= இல்லையா.

**பொழிப்புரை ;** கரிய மேகம் தவழும் மதில்களையுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! மிகநுட்பமான இடையுடைய அழகிய நீஅவன் உருவில் பாதியல்லவா? உனக்குஅஞ்சியே ,நீர்வடிவாக விளங்கும் ஒப்பற்ற குலமகளாகிய கங்கையை, தாமரையில் வாழும் நான்முகன் அன்னப்பறவையாய் வானின் மேலே பறந்துசென்றும் காணமுடியாத தனது சடைக்காட்டில் நீகாணமுடியாதவாறு மறைத்தான்.

**விளக்கம்:** ஆனைக்கா அண்ணல் நீர்உரு :
''தென்ஆனைக் காவானைத் தேனைப் பாலைச்
செழுநீர்த் திரளைச் சென்று ஆடினேனே''.
திருமுறை.6.திருவானைக்கா.1–10.
மடக்குச்சீர் முழுதும் இப்பதிகத்தில் மகுடமாக உள்ளது. (ஆடினேன்=திளைத்தேன்– அனுபவித்தேன்.)
'' நுண்ணிடை''என்பதுஅழகு மட்டுமன்றி,உடல்நலமும் குறிப்பது என்பர் மருத்துவர்கள்.

**இலக்கணக் குறிப்பு:** வளன்–கடைப்போலி.இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

18 . அலையடி அடைந்த அகத்(து)அடி நிலையா(து)
அலையடி யேற்(கு)இரங் குபுுன்
தலையடி சூட்டிப் பிடிஅடி என்பான்
தடிஅடி விலக்கியாள் இமய
மலையடி உதித்து வளர்ந்துவெண் நாவல்
மரத்(து)அடி வாழ்பவன் புணர்ந்தாய்
கலையடி உணர்ந்தார் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கலையடி= கலைகளின் வேர். அடி நிலையாது=உன் திருவடிகளில் நிலைக்காமல். அலையடி=அலைகளின் முன்னே. அலை= பலவாறு அலைகின்ற. தலை அடிசூட்டி= என்தலையில்– அறிவில்– உன்திருவடி சூட்டி. என்பான்= என்று கூறும்எமன்.

தடி= தண்டாயுதம்.மலையடி= மலைஅடிவாரத்தில். வெண்ணாவல் மரத்துஅடி வாழ்பவன்= அருள்தரு வெண்ணாவல் ஈசர்.

**பொழிப்புரை:** கலைகளின் வேரினை– நுட்பத்தை உணர்ந்தவர்கள் புகழும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்திருவடிகளில் நிலைக்காமல் கடல் அலைகளின்முன் அகப்பட்டது போன்ற மனத்துடன்பலவாறு அலையும்அடியவனாகிய எனக்குஇரங்கி, என் அற்பஅறிவில் உன்திருவடி சூட்டி,என்முன் வந்து இவனைப் பிடியுங்கள் அடியுங்கள் என்ற எமனது தண்டாயுத அடியைத் தடுத்துஆள, இமயமலை அடிவாரத்தில் தோன்றிவளர்ந்து, வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளியுள்ள அருள்தரு வெண்ணாவல் இறையை–சம்புகேசு வரரை–மணந்தவளே அருள்க.

**விளக்கம்**''கலை''என்பதற்கு நூல், சாத்திரம் என்றும்,அலை ''அடி'' என்பதற்கு ஆழம் என்றும் பொருள்கொள்ளினும் அமையும்.

இறைவன் தாளில் நம்தலை—அறிவு– பொருந்துதலைத் ''தாடலை'என்பர்.'

'' தாடலைபோல் கூடிஅவை தான்நிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகம்எனக் கொள்'' – திருவருட்பயன்.74.

இது முத்திநிலை குறிப்பது.இச்செய்யுளில் வரும்''தலையடி சூட்டி''என்பதும் அப்பரடிகளின் நல்லூர்ப் பதிகமகுடமும் நம் உடலுறுப்பாகிய தலையில் – அறிவில் இறைவன் தனது திருவடி சூட்டுதலாகிய அருள்பாலிப்பு நிலை.

**இலக்கணக் குறிப்பு:** இச்செய்யுள் சொற்பின்வருநிலை அணி.

19 . இருவினைச் சிமிழ்ப்புண்(டு) உழல்கொடி யவன்மற்(று)
இவற்(கு)அருள் என்(று)இரங் குபுநின்
ஒருமுதல் அவனுக்(கு) உணர்த்துதி வருத்தம்
உன்னல்உன் பரிசினுக்(கு) அடாது
வருபசுங் குழவிக்(கு) உறுபிணி தீர்க்கும்
மருந்(து)உனை யன்றியார் நுகர்வார்
கருமுகில் உறங்கும் மதில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** இருவினை= நல்வினை தீவினை. சிமிழ்ப்பு= கட்டு, உணர்த்துதி= உணர்த்துவாயாக, உன்னல்= நினைத்தல். பரிசு= இயல்பு.அடாது= பொருந்தாது. வரு= கருவிலிருந்து வந்து பிறந்த–புதிய.

**பொழிப்புரை :** கார்மேகம் தங்கும் உயரமான மதில்களையுடையதிருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நல்வினை தீவினை ஆகிய பொன்விலங்கு இரும்புவிலங்குகளால் கட்டப்பெற்றுத் துன்புறும் கொடியவன் இவன்;எனினும் இவனுக்கு அருள்புரிக என்று உன்தலைவனாகிய சிவபிரானுக்கு உணர்த்தியருள்க. இங்ஙனம் பரிந்துரை செய்யவருந்துவா யானால் அது உன்இயல்புக்குப் பொருந்தாது. ஏனெனில் புதிதாகப் பிறந்த

பச்சிளங்குழவி ஒத்த எனக்காக,நோய்தீர்க்கும் மருந்தினைத் தாயாக விளங்கும் உன்னைத்தவிர வேறுயார் உண்பார்? எனவே உணர்த்தி அருள்புரியச் செய்தருள்க.

**விளக்கம்:** இருவினைக் கட்டில் உழல்தலாவது,பிறப்புஇறப்புகளில்உழல்தல்.

"எனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத்து
யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாயர் ஆகியும் தந்தையர் ஆகியும்
வந்தி லாதவர் இல்லை; யான்அவர்
தந்தையர் ஆகியும் தாயர் ஆகியும்
வந்தி ராததும் இல்லை; முந்து
பிறவா நிலனும் இல்லை;அவ்வயின்
இறவா நிலனும் இல்லை; பிறிதில்
என்னைத் தின்னா உயிர்களும் இல்லை; யான்அவை
தம்மைத் தின்னாது ஒழிந்ததும் இல்லை; அனைத்தே
காலமும் சென்றது; யான்இதன் மேல்இனி
இளைக்கும் ஆறு இலனே "

திருமுறை 11. திருக்கழுமல மும்..7:11–22.

பச்சிளங்குழவியின் நோய்தீர்க்கத் தாய்(தாய்ப்பால்வழிமருந்தூட்ட) மருந்துண்ணல்:

"பாலுண் குழவி பசுங்குடர் பொறாதுஎன
நோய்உண் மருந்து தாய்உண் டாங்கு"

– அருட்டிருகுமரகுருபரர்:சிதம்பரமும்மணி..2:14–15.

**இலக்கணக் குறிப்பு:** உணர்த்துதி–வியங்கோள் வினைமுற்று. உறுபிணி–வினைத்தொகை. இச்செய்யுள் விலக்குஅணி.

20. எடுப்பது பிச்சை ஏந்துவ(து) ஓ(டு)அங்(கு)
இயக்குவ(து) ஒற்றைஏ(று) அரைக்கண்
உடுப்பது புன்தோல் மற்(று)இவர் மனையாய்
உற்றநீ உயிர்வயிற்(று) அழலா
அடுப்பது தவிர ஊட்டுதல் ஆதி
அறமெலாம் வளர்ப்(பை)ஈ(து) அழகே
கடுப்பது தவிர்ந்த மதில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கடுப்பது தவிர்ந்த= ஒப்பில்லாத.ஓடு= பிரமகபாலம்–நான்முகனின் மண்டை ஓடு. இயக்குவது=செலுத்துவது. அரைக்கண்= இடுப்பில். புன்தோல்= பக்குவப்படுத்தாத தோல். அழலாய் அடுப்பது தவிர= தீயாய்ச்சுடும் பசிதீர. ஊட்டுதல் ஆதி= உணவு ஊட்டல் முதலான.

**பொழிப்புரை:**தன்னொப்பில்லாத மதில்கள் கொண்ட திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்கொழுநன் ஏற்பது பிச்சை; அதன்பொருட்டுக் கையில் ஏந்துவது நான்முகனின்

மண்டைஓடு; ஏறிச்செலுத்துவது ஒற்றை எருது; இடுப்பில்உடுத்துவது பதப்படுத்தாத தோல்ஆடை; ஆனால்அவர் மனைவியாகிய நீ உயிர்களின் வயிற்றில் பெருந்தீயாய்ச் சுடும்பசி தீர்க்க உணவிடுதல் முதலிய முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பது மிக்க அழகு!

**விளக்கம்:** இறைவன் வெண்டலையில் பலிஏற்றல்

"இடமுடை வெண்டலைக்கண் பலிகொள்ளும் இன்பன்"

திருமுறை.2.திருக்கொச்சைவயம்.3.

ஊர்தி: " ஊர்தி வால்வெள்ளேறே" –புறம்.கடவுள்வாழ்த்து.

புன்தோலாடை:

"துன்னம்பெய் கோவணமும்தோலும்உடையாடை"

–திருமுறை.2 திருஆமாத்தூர்1.1.

இறைவனது ஓடும் மாடும் பிறவும்–––தனிப்பாடல்:

" ஒகாமா வீதோ உரைப்பன் டுடுடுடு
வாகார் குடந்தை நகர்க்கதிபர் –வாகாய்
எடுப்பர் நடமிடுவர் ஏறுவர்அன் பர்க்குக்
கொடுப்பர் அணிவர் குழைக்கு." – காளமேகப்புலவர்.

(ஒகாமாவீதோ இவ்வைந்து எழுத்துகளுடன் தனித்தனி டுடுடுடுகூட்டி இறுதி இரண்டடிகளில் உள்ள ஐந்துசொற்களை அவற்றின் முன் சேர்க்க. எடுத்துக்காட்டு:எடுப்பர் ஓடு;நடமிடுவர்:காடு. . .)

□□□□□□□வயிற்று அழல்–பசி:"பசிஎன்னும் தீப்பிணி","அழிபசி"–திருக்குறள்.

பசித்தீ அழிப்பன:

"குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும் □□□□□□□□□□□
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாண்அணி களையும் மாண்எழில் சிதைக்கும்
பூண்அணி மாதரொடு புறங்கடைநிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி". –

மணிமேகலை .பாத்திரம் பெற்ற..76–80. □

மேலும்;"அரும்பசி களைய ஆற்றுவது காணா விசுவாமித்திரமுனிவர்,திருந்தா நாய்ஊன் தின்னத்தொடங்கினான்" –என்பார் சாத்தனார்.–––,,,,,,,,,அடி85–87.

அம்மை ஆற்றிய32அறங்கள்:மாதவச் சிவஞான முனிவரின் காஞ்சிப் புராணத்துத் தழுவக்குழைந்த படலத்து 138—141ஆகிய செய்யுகளில் காண்க. (இவற்றில் சிலவற்றை மாற்றிக் கூறுவாரும் உண்டு.)`:

**இலக்கணக் குறிப்பு:** வளர்ப்பை–முன்னிலை ஒருமை வினைமுற்று.இச்செய்யுள் வஞ்சப்புகழ்ச்சியணி.

21 . முற்றவம் புரிந்து முழுமலம் தூமித்த
மோனமெய்ஞ் ஞானியர் அன்றி

மற்றவர் கவரப் படும்கொல்நின் கருணை
வானகத்(து) எழுமதிக் கதிரை
நற்றவம் புரிந்த சகோரமோ கொடிய
நவில்கருங் காகமோ கவரும்
கற்றவர் புகழ்ந்து சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** முற்றவம்= முதன்மையான தவம். துமித்த= நீக்கிய. நின்கருணை மற்றவர் கவரப் படும்கொல். கவர்தல்= கொள்ளையிடப்படுதல். கதிர்= ஒளி. தவம்= புண்ணியம். சகோரம்= நிலவின் ஒளியைப் பருகி வாழும் ஓர்இலக்கியப்பறவை. காகமோ கவரும்நவில்.

**பொழிப்புரை :** அறிஞர்கள் போற்றி வலம்வரும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! வானில் உலவும் நிலவின் ஒளியைப் பருகி வாழ்வது புண்ணியம் செய்தசகோரப்பறவையா? கரியகாகமா?சகோரமே பருகும். அதுபோல உன்கருணையை, முழுமையான தவம்செய்து அதனால் மலஆற்றலை முழுமையாக நீக்கிய மோனமெய்ஞ்ஞானியர்க்கல்லாமல் பிறரால் கொள்ளையிட்டு அனுபவித்தல் இயலுமோ? இயலாது.

**விளக்கம்:** சகோரப்புள்:

"சகோரப்புள் அருந்த விரிந்த முழுநகை விண்டு ஊற்று நிலவு"
– முத்துக்குமாரசாமி பிள்ளைத்..தால். 3.2

மலத்தின்ஆற்றல் நம்முத்திநிலையில் கெடுமேதவிர, மலம்அழியாது ஆதலின் "துமித்த" என்பதற்கு நீக்கிய என்று பொருள்கொள்ளப் பெற்றது.

**இலக்கணக் குறிப்பு:** கொல்–ஐயஇடைச்சொல். இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி. விலக்குஅணியும்ஆம்.

22 . தொண்(டு)அவாய் மனம்ஆ திகள்ஒருங்(கு) உய்க்கும்
தூயவ ரன்றிமற் றோரும்
அண்டர்ஆ தியரும் அணுகரு நின்தாள்
அடைவரோ அளவறு மேன்மை
கொண்டவான் கங்கை அடைவ(து)ஓ திமமோ
குரண்டமோ குணப்பெருங் குன்றே
கண்டவர் பவம்கா ணாத்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கண்டவர்=கண்டுவணங்கியவர். பவம்= பிறப்பு. தொண்டுஅவாய்= உனக்குத் தொண்டு செய்தலை விரும்பி. மனம் ஆதிகள்= மனம்மொழிமெய் ஆகியன. அண்டர்=தேவர். அணுகு அரு=நெருங்குதற்கு இயலாத. ஓதிமம்= அன்னப்பறவை. குரண்டம்= காக்கை.

**பொழிப்புரை:** கண்டு வணங்கியவரது பிறப்பை ஒழிக்கும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அளவற்ற மேன்மையுடைய புனிதமான கங்கையை அடைந்து வாழ்வது அன்னப் பறவையா? காக்கையா? அன்னமே கங்கையை அடைந்து வாழ்வது. அதுபோல ,குணப்

பெருமலையாய் விளங்குகிறவளே! உனக்குத் தொண்டு செய்தலை விரும்பித் தன்மனம் மொழிமெய் ஆகிய மூன்றையும் உன்பால் ஒக்கச்செலுத்தும் தூயவர் தவிரப் பிறர், தேவர்களும் கூட நெருங்க இயலாத திருவடியை அடைவரோ?தூயரே அடைவர்.

**விளக்கம்:** மலை, தன்பால் ''அளக்லாகா அளவும் பொருளும்.துளக்கலாகாநிலையும் தோற்றமும்,வளம்தரு வண்மையும்'' உடையது.இந்நிலையினள் பெருங்குன்றாம் அம்மை.

**இலக்கணக் குறிப்பு:** அடைவரோ—ஓகாரம் எதிர்மறை.ஓதிமமோ,குரண்டமோ—வினாஓகாரங்கள் . குன்று—உருவகம்.இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமை அணியும்,விலக்கு அணியும்ஆம்.

23 . இடையறா அன்பின் மெய்கொடு துதிப்பார்
இன்துதி முன்னர்மெய்ங் நிழல்போல்
புடையறா வினையேன் பொய்கொடு துதிக்கும்
புன்துதி எங்ஙனம் என்னில்
நடையறாத் தேமாங் குயில்குரல் எதிர்ஓர்
அரிட்டமும் கதறுதல் பொருவும்
கடைஅறா மருதம் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா கியே.

**குறிப்புரை:** கடை= எல்லை. அன்பின் இன்துதி மெய்கொடு துதிப்பார்=அன்புடைய மனத்தின்வெளிப்பாடான துதியை உடம்பாலும் செலுத்துவார். மெய்ங்நிழல்= உடம்பின்நிழல்.புடைஅறா=திரட்சிநீங்காத. நடை=தன்தன்மை. அரிட்டம்=காக்கை. கதறுதல்=தொடர்ந்து கரைதல்.

**பொழிப்புரை:** எல்லையற்ற மருதநிலம் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அடியவர் தமது மனத்தின் துதியை உடம்பாலும் சொல்லாலும் செலுத்தும் துதியின்முன்னே, உடம்பினை நீங்கா நிழல்போலத் திரட்சி நீங்கா இருவினை யுடைய நான் பொய்யாகப் போற்றும் அற்பமான போற்றுதல், இனியதன்மை மாறாத தேமாங்குயிலின் குரலுக்கு எதிராக ஒரு காக்கை தொடர்ந்து கரைதல் போன்றதாகும்.

**விளக்கம்:** மெய்ங்நிழல் நீங்காமை:

''தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை வீயாது
அடிஉறைந் தற்று''. —திருக்குறள் ,208.

''நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல்போல..'' —தனிப்பாடல். மதுரகவிராயர்.

**இலக்கணக் குறிப்பு:** இடையறா,புடையறா,நடையறா,கடையறா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். இச்செய்யுள் உவமைஅணி.

24 . மறைபல துதிக்கும் நின்பெரும் புகழை
வழுத்திய வான்தவர் நாவும்
அறையுமோ மற்றைப் புல்லிய தெய்வம்

தமைப்புகழ் அறையுமேல் இனிமை
நிறைதரு கருப்பஞ் சா(று)அவா வியநா
நிம்பநெய் அவாவுதல் போலும்
கறையறு வளமை மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கறை=குற்றம். வான்= மேலான. அவாவிய= மேன்மேல் விரும்பிய. நிம்பநெய்= வேப்பெண்ணெய்.

**பொழிப்புரை:** குற்றமற்ற வளமைகள் மலிந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நான்மறைகளும் போற்றும் உன்புகழை மேன்மேல்கூற விரும்பும் மேலான தவத்தோர் நாக்கு அற்பமான பிற சிறுதெய்வங்களின் புகழ்கூற விரும்பின் அது, இனிமைமிக்க கரும்புச்சாறு பருகி அதையே மேன்மேல் விரும்பும் நாக்கு, வேப்பெண்ணெய் பருக விரும்புவது போலாகும்.

**விளக்கம்:** குற்றமற்ற வளமையாவது குறைந்த உழைப்பில் மிகுபயன் தரும் வளமை.

சிறுதெய்வப்புகழ் கூறாமை:

" சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்".

—திருமுறை. 6. மறுமாற்றுத்.. 5:2.

சிவபெருமானைத் தவிரப் பிறதெய்வங்கள் நிலை:

அவை, "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்."

"– முத்துக்குமார..பிள்ளைத்..செங்கீரைப்..1–5 மகுடம்.

"..................................மற்று அத்தெய்வங்கள்
வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல்வினையும் செய்யும்"

—சித்தி. சுபக்கம். 115:2–3.

**இலக்கணக் குறிப்பு:** தவர்நாவும்–உயர்வு சிறப்பும்மை. இச்செய்யுள் உவமையணி.

25 . மனைதொறும் இரப்புத் தொழில்கொடு புகுவார்
மறலிதன் ஆலயம் புகுவார்
நினைதர முடியாக் கருக்குழி பலவும்
நிரம்புற ஓடுபு புகுவார்
இனையவர் புகாநின் திருப்பெருங் கோயில்
ஏழையேன் புகஅருள் புரிவாய்
கனைகடல் வாவி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** மறலிதன் ஆலயம்= எமன்உலகம். கருக்குழி=கருவுக்குரிய குழியாகிய கருப்பை. ஓடுபு= ஓடி– விரைந்து.

**பொழிப்புரை:** ஒலிக்கும் கடல்ஒத்த குளங்கள் சூழ்ந்ததிருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பிறதெய்வங்களின் வீடுதோறும் யாசிக்கப் புகும்தொழிலில் புகுகின்றவர்

வீட்டுலகு புகாது, எமனுலகம் புகுவார்; எண்ணிப் பார்த்தற்கியலாத பிறவிகளில் வரைந்து போய்ப்புகுவார்.இத்தகையோர் புகாதநின்திருக்கோயிலுள்புகுந்து நின்னை வணங்க அற்பன் ஆகிய எனக்கு அருள்வாயாக.

**விளக்கம்:** பிறவிப்பயன் வீடுபேறே. இதனை அருள்பவள் அருள்தரு அகிலாண்ட நாயகியே. பிறதெய்வங்கள் வீடுபேறு அருளா; பிறவியேதரும்.அவற்றை வணங்குவோர் பிறவி, நரகம் புகுவர் என்றார். இதனால் அவை இருக்கும் இடத்தைத் திருக்கோயில் என்று கூறாது''மனை'' என்றார்.

**இலக்கணக் குறிப்பு:** இரப்பு– தொழிற்பெயர் . கொடு–இடைக்குறை.புகுவார்,புகுவார் புகுவார்என்பவற்றுள் முன்னது வினையாலணையும் பெயர்,பின்னவை இரண்டும் வினைமுற்றுகள். கருக்குழி–உருவகம் .ஓடுபு–செய்பு என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.

26. எண்ணரும் கொடிய பாதகம் பலவும்
இயற்றுமா பாவியான் எனினும்
நண்ணரு நினது திருவருள் தோயின்
நண்ணுதல் அரிதுகொல் புனிதம்
பண்ணரும் கொலைசெய் வாளும்பொன் ஆமே
பரிசன வேதிதீண் டுதலால்
கண்ணரும் கழனி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** அரும்கண்= அரிய பெருமைகள்.நண்ணரும்=பொருந்துதற்கு அரிய. தோயின் = பொருந்தினால். புனிதம் நண்ணுதல் அரிது கொல். பரிசனவேதி= ஓர்உலோகத்தை– இரும்பைத் தொடுவதன் மூலம் அதனைப் பொன்னாக்கும் ஒருபொருள்–குளிகை என்பர்.

**பொழிப்புரை:**அரிய பெருமைகளுடைய நன்செய் நிலங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! செய்யக்கூடாத பாதகம் பலசெய்த பாவியாக நான்இருப்பினும் கூட, பொருந்துதற்கு அரிய உன்திருவருள் பொருந்தினால் புனிதம் பெறுவது எளிதாகும். இது, மிகப்பல கொலைகள் செய்த வாளாயினும்,அதனைப் பரிசனவேதிக்குளிகை தீண்டுமானால் அவ்வாள் பொன்வாள் ஆவது போன்றதாகும்.

**விளக்கம்:** பரிசனவேதியின் செயல்:

''முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்ஆனாற் போல்யாக்கைத்
தன்பரிசும் வினைஇரண்டும் சாருமலம் மூன்றும்அற
அன்புப்பிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ.''

திருமுறை12.கண்ணப்பர்.154

''வெந்தழலின் இரதம் வைத்து ஐந்து உலோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்.''

தாயுமானவர்..தேசோமயா..8:2.

வேதி இருவகைப்படும்.அவை பரிசனவேதி, தரிசனவேதி. இவற்றுள் கண்ணப்பர் பெற்றது தரிசனவேதி. தாயுமானவர் இங்குக் கூறியது பரிசனவேதி.

"அடுத்தருணைத் தேவ சிகாமணியால் அன்றோ
வடுத்தனைநீத்(து) அம்கனகம் ஆனேன்–தொடுத்த
அலகுடைய தங்கம்இனி ஆகேன்அப் பாலும்
இலகுடைய தங்கமா வேன்."–தெய்வசிகாமணி நான்மணி மாலை.25.

திருக்கயிலாய பரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர் ஆகிய திருப்பெருந்திரு தெய்வசிகாமணி தேசிகருக்குக் காலத்தால் மிகப் பிற்பட்டவர்இந்நூல் இயற்றியருளிய அருட்டிரு குமாரசாமிமுனிவர். இவர் இருவினை, மும்மலம் தீரப்பெற்றது இந்தக்குருமுதல்வரின் குருமூர்த்தத்தை வழிபட்டதால் .எனவே இவர்அங்குப் பெற்றது தரிசனவேதியாகும்.

"நின்நிலை என்னிடத்து உன்னி உன்னிப்
பன்னாள் நோக்கினர் ஆகலின் அன்னவர்
பாவனை முற்றிய பாவகப் பயன்யான்
மேவரப் பெற்றனன்."
–சிதம்பரமும்மணிக்கோவை.11:11–14.

இதுவும் தரிசனவேதி குறிப்பதே.

மும்மல வயப்பட்டவரைக் குருமூர்த்தி,இவ்வேதிகளால் தூயவர் ஆக்குவது போல்,உளவியல் மருத்துவர்கள்,உரியவரை நன்னிலைக்கண் நிறுத்த, அவரது தீயஆழ்மனப் பதிவு அழியுமாறுஅவரைக் கூர்ந்து நோக்குதல்,அவரது நெற்றிப் பொட்டினைத் தன்விரலால் தீண்டுதல் செய்தல் மற்றும் உரியனகூறி அவற்றை அவர்ஆழ்மனத்தில் பதித்தல் என்பனவும் இவ்வகை வேதியின் பாலனவே எனலாம்.

**இலக்கணக் குறிப்பு:** கொல்–ஐய இடைச்சொல்.வாளும்– இழிவுசிறப்பும்மை. இச்செய்யுள்எடுத்துக்காட்டு உவமைஅணி.

27 .
முழுவதும் குணமே நாடின்முற் றாது
முகுந்தன்ஆ தியரிடத் தினும்நீ
பழுதற உணர்த்தா விடின்உணர் வாரோ
பரமனைப் பண்(டு)அவர் புரிதோம்
எழுதரி(து) அவரும் இன்னரேல் அம்ம
என்செயல் யாதெனப் புகல்கேம்
கழுவிய மணியில் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கழுவிய= தூய்மைசெய்யப்பெற்ற. மணி=நவமணிகள். இல்சூழ்= குடும்பங்கள் சூழ்ந்த. முற்றாது= ஆய்வு முழுமையுறாது. முகுந்தன்= திருமால். தோம்= குற்றம்.இன்னரேல்= இப்படிப்பட்டவர் என்றால்.

**பொழிப்புரை:**தூய்மைசெய்யப்பெற்ற நவமணிகளை ஒத்த குடும்பங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! ஒருவரிடத்தில் உள்ள குணத்தை மட்டுமே ஆராய முற்பட்டால் அவ்வாய்வு முழுமையுறாது. ஏனெனில், திருமால் முதலியவர்களிடத்தும் குற்றமற நீ அவர்களுக்கு உணர்த்தாவிடின் அவர்கள் பரமனைப் பற்றி உணரார். ஏனெனில் முன்பு அவர்கள் செய்த குற்றங்கள் எழுதிக்காட்டற்கு இயலாத அளவு எண்ணற்றன. அவர்களே இப்படிப்பட்டவர்கள் என்றால், என்நிலை பற்றி யாதுகூறுவேன் . ஆயினும் எனக்கும் பழுதற உணர்த்தி அருள்க.

**விளக்கம்:** திருமால் முதலியோரும் ''உணர்த்த உணர்பவர்''–பசுபுண்ணியத்தால் அந்நிலை பெற்ற உயிர்க்குலத்தவர். எனவே உணர்த்தவே உணர்வர்.

உயிர்க்குலம் அனைத்தும் குணமும், குற்றமும் உடையனவே:

'' குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்''என்பது பொய்யாமொழி. உயிர்கள் உணர்த்த உணர்வன:

''ஆட்டுவித்தால் ஆர்ஒருவர் ஆடா தாரே ....
காண்பார்ஆர் கண்ணுதலாய்க் காட்டாக் காலே''

–திருமுறை6. தனித்திருத்தா.

''உணர்த்த உணர்தலின்'' –சிவஞானபோதம். சூ..

**இலக்கணக் குறிப்பு:** குணமே– ஏகாரம் பிரிநிலை, தேற்றமும்ஆம். அம்ம–உரையசை.

28.

உலகிடை அழுத பிள்ளைபால் குடிக்கும்
உண்மைஎன்(று) உரைப்பதற்(கு) ஏற்ப
இலகுசீ காழி மழ(வு)அழ அளித்தாய்
இன்முலைப் பால்அழா விடினும்
அல(கு)அற இரங்கி அளிப்பவர் இலையோ
அத்தகு மழவுயான் அருள்வாய்
கலகம்இல் கழகம் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கலகம்= கேடு. கழகம்= கல்விபயில்வார் உள்ள இடம். மழவு= குழந்தையாகிய திருஞானசம்பந்தர். யான்மழவு =நான் குழந்தை.

**பொழிப்புரை:**கேடில்லாத கல்வி பயில்வார் உள்ள இடங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!''அழுதபிள்ளை பால்குடிக்கும்'' என்ற இவ்வுலகப் பழமொழிக்கேற்ப, விளங்கும் சீர்காழியில் திருஞானசம்பந்தர் ஆகிய குழந்தைக்கு, அவர்அழுததால் இனிய தாய்ப்பால் அளித்தாய். ஆனால் ஒருகுழந்தை அழாவிடினும்கூட, அதன்மீது இரங்கி உரிய தாய்ப்பால் அளிப்பார் உலகில் உண்டு. உன்அருட்பாலுக்கு அழத்தெரியாத குழந்தைநான். நான் அழாவிடினும் எனக்கு உன்னருள் தந்தருள்க.

**விளக்கம்:** திருஞானசம்பந்தர்க்குத் தந்தது'' சிவஞானத்து இன்னமுதம் குழைத்த தாய்ப்பால் ஆதலின்''முலையின் பால்'' என்றார். குழந்தை அழாவிடினும்

நினைந்து ஊட்டுகிறவளை,''பால் நினைந்து ஊட்டும்தாய்'' என்பார் வாதவூரடிகள்.
கழகம்=கல்விபயிலுமிடம்:''கழகந்தொறும் கொத்து முத்தமிழ் மொய்த்தகந்தபுரி''
—முத்துக்குமாரசுவாமிபிள் ..காப்பு:1.

**இலக்கணக் குறிப்பு:** மழவியான்—குற்றியலிகரம்.

29.

அழும்மழவு ஒன்றற்(கு) அளித்தனன் தீம்பால்
அம்பலத்து ஆடிய பெருமான்
பழு(து)அற நீயும் அளித்தனை தீம்பால்
பசித்(து) அழும் இளமழ(வு) ஒன்றற்(கு)
எழுதரும் இவற்றால் நினக்(கு)உறு புகழ்போல்
எம்பிராற்(கு) உண்டுகொல் இயம்பாய்
கழுமணிச் சிகரி பொலிதிரு லானைக்
காஅகி லாண்டநா கியே.

**குறிப்புரை:** கழுமணிச்சிகரி =கழுவிய–தூய அழகிய கோபுரங்கள்.பசித்துஅழும் மழவு= பசியால் அழுத இளங்குழந்தை ஆகிய உபமன்யுமுனிவர்க்கு. பழுது= தந்தையைக் காணாப் பழுது. இளம்மழவு=மிக இளங்குழந்தை யாகிய திருஞான சம்பந்தர். எழுதரும்= உண்டான.

**பொழிப்புரை:** தூயஅழகியகோபுரங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பசித்துப் பாலுக்கழுத உபமன்யு முனிவருக்குப்பாற்கடலையே அழைத்துக்கொடுத்தான் அம்பலக் கூத்தன்ஆகிய உன்கணவன். நீயோ தந்தையைக் காணாது அழுத திருஞான சம்பந்தர்க்கு அவ்வழுகைதீர, உன்கணவன் கூற,தாய்ப்பால் கறந்து அளித்தாய்.இதனால் உனக்கு அமைந்தபுகழ்போல் உன் கணவனுக்கு உண்டா? கூறு.(இல்லை என்பது குறிப்பு.)

**விளக்கம்:**

உபமன்யு முனிவர்க்குப் பாற்கடல் ஈந்தது:
''பாலகனார்க்கு அன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையற்கே உந்தீபற'' —திருவாச..திருஉந்தி..17

''பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்''
திருமுறை11.திருப்பல்லா..9.

திருஞானசம்பந்தர்க்குப் பால்அளித்தது :
''எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி
உண்ணடிசில் எனஊட்ட '' பெரியபுராணம்.1971.

உபமன்யுமுனிவர்க்குஅளித்தது''மீன்ஆளும்பாற்கடல்''.திருஞானசம்பந்தர்க்கு அளித்தது''சிவஞானம்ஆளும்'' தாய்ப்பால்.முன்னவர் பெற்ற பயன்,பசியும்அழுகையும் தீர்தல்.பின்னவர் பெற்றபயன் அழுகை தீர்ந்ததுடன்''உவமையிலாக் கலைஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும்''.எனவே நீ உன்கொழுநனைவிட,புகழ்மிக்கவள் என்பதுகுறிப்பு.

**இலக்கணக் குறிப்பு**: மழவு– உரிச்சொல். இளமழவு– ஒருபொருள்பன்மொழி. கொல்– ஐயஇடைச்சொல். இச்செய்யுள் விலக்குஅணி.

30. இடையறா அன்பு பெருக்கிநீ பூசை
இயற்றிட இனி(து)உளம் உவந்து
சடையறா முடியோன் உறைதரப் பெற்ற
தண்ணிழல் நாவலந் தருவோ
புடையறா(து) அமரர் உறைதரப் பெற்ற
பொலந்தரு வோசிறந் ததுகண்
கடையறாக் கருணை யாய்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை**: கண்கடையறாக் கருணையோய்=கடைக்கண் கருணை வற்றாதவளே. நாவலம்தரு=வெண்ணாவல்மரம் பொலம்= பொலிவு.

**பொழிப்புரை:** கடைக்கண் கருணை சிறிதும் வற்றாது விளங்கும் திருவானைக்கா அகிலாண்டநாயகியே! இடையீடுபடாத உன்அன்பினைப் பெருக்கிநீ வழிபாடு செய்வதற்குத் தன்உளம்மகிழ்ந்து, சடைமுடியுடைய சிவபிரான் எழுந்தருளியுள்ள தண்ணிய நிழல்தரும் வெண்ணாவல்மரம் சிறந்ததா? பக்கமெல்லாம் தேவர்கள் சூழ்ந்துவாழப் பெற்ற பொலிவுஉடைய கற்பகமரம் சிறந்ததா? கூறியருள்க.

**விளக்கம்:** தேவர்கள் சூழ்ந்துவாழும் கற்பகமரத்தைவிட, அம்மை வழிபட, அப்பன் எழுந்தருளியுள்ள வெண்ணாவல்மரமே சிறந்தது. இதுபக்தியின் குறியீடு. கற்பகமரம் இத்தகையதன்று. காரணம்; சம்புமுனிவர் அளித்த வெண்ணாவல் பழத்தின் கொட்டையைச்சிவபிரான் உமிழ, அதனைப்''பரிகலசேடம்'' என்று சம்புமுனிவர் விழுங்க, அதுஅவர்பால் நாவல்மரமாக முளைத்தது. எனவேஅது பக்தியின்குறியீடு மட்டுமன்றி, அம்மை வழிபடும் பொருட்டு, அப்பன் அதன்நிழலில் எழுந்தருளிய சிறப்பும் பெற்றது. எனவே கற்பகமரத்தினும் இந்நாவலே சிறந்தது என்பது குறிப்பு.

**இலக்கணக் குறிப்பு**: கண்கடை– இலக்கணப்போலி. இடையறா, சடையறா, புடையறா, கடையறா– ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். இச்செய்யுள் வேற்றுமை அணி.

31 . சிறுபிறைக் கொழுந்து வீற்றிருத் தலினால்
தேவதே வன்திரு முடிமேல்
மறுவில்அச் சுவடு பொலிதரும் ஐயம்
மரு(வு)உறா(து) அஃதுமற்(று) எவர்க்கும்
உறுமறைக்(கு) அரிய நின்னடி அகத்தும்
ஒளிரும்அச் சுவடுகா ரணம்என்
கறுஒழித்(து) உரைப்பாய் புகழ்த்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கறு= சினம். மறுவுஇல் அச்சுவடு= குற்றமற்ற அப்பிறையின் சுவடு. அஃது மற்(று) எவர்க்கும் ஐயம் மருவுறாது= அதுபற்றி யார்க்கும் ஐயம் ஏற்படாது. அடிஅகத்தும்=

உள்ளங்காலிலும்.அச்சுவடு= அந்தப்பிறையின் சுவடு. அச்சுவடு நின்னடி அகத்தும் ஒளிரும் காரணம் என்?கறுஒழித்துஉரைப்பாய்.

**பொழிப்புரை:** புகழ்வாய்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தேவர்களுக்கெல்லாம் தேவனான உன்கொழுநன் திருமுடிமேல் மூன்றாம்பிறை இருப்பதால் அதன் சுவடு அவன் முடியில் பொலியும். இதுபற்றி யார்க்கும் ஐயம் ஏற்படாது. ஆனால் மிக்க வேதங்களுக்கும் அரிய உன் திருவடியின் உள்ளங்காலிலும் அப்பிறைச்சுவடு ஒளிரக்காரணம் என்ன? என்மேல் சினமின்றிக் கூறுக.

**விளக்கம்:** ''ஊடலில் தோற்றவர் வென்றார்''–(திருக்குறள்.1327.)என்று உலகியல் கூறும் பொய்யாமொழிப்படி, ஊடல்தீர்க்க உன்திருவடியில், பிறை உள்ள தனது திருமுடிபட அப்பன் வணங்கிய போது ஏற்பட்ட சுவடேஅதுஎன்பதே என்கணிப்பு. உண்மைகூறும் என்மேல்சினவாது கூறியருள்க என்கிறார். உலகியலையொட்டி இறைமேல் இங்ஙனம் ஏற்றியுரைப்பது இலக்கிய வழக்கு .

**இலக்கணக் குறிப்பு:**சிறுபிறை–சிறு–இனம்விலக்கிய அடை.தேவதேவன்–நான்காம் வேற்றுமைத்தொகை.உறுமறை– உரிச்சொற்றொடர். இச்செய்யுள் ஏதுவணி.

32. எதிர்மலர் தொடுத்த மாரவேள் உடலம்
எரிக்(கு)உண(வு) ஆக்கிய பெருமான்
அதிர்வறு மெய்யில் பாதிநீ கவர்ந்தாய்
அதிர்வற முழுதும்நீ கவர்ந்தால்
உதிர்தல்இல் நினது திறமையார் உணர்வார்
ஓங்(கு)அவன் வியாப்பியப் படலால்
கதிர்படும் இதுவே அருள்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** எதிர்=யோகநிலைக்கு எதிராக.அதிர்வுஅறுமெய்= கலங்காத திருமேனி. அமைதர=பொருத்தமாக. உதிர்தல்= சிதறுதல். கதிர்படும் அதிர்வறு மெய்யில் முழுவதும் கவர்ந்தால் அவன் வியாப்பியப் படலால் உதிர்தல்இல் நினது திறமை இதுவே அருள் .கதிர்படும்=முச்சுடர் தங்கிய. வியாப்பியப்படுதல்=பரவி அடங்குதல்.

**பொழிப்புரை:**தான்திளைக்கும் யோகநிலைக்கு எதிராக அதனைக்கலைக்க மலர்அம்பு எய்த மன்மதன் உடம்பை எரித்த சிவபிரானின் நிலைகலங்காத திருமேனியில் பாதியை நீமுன்னரே கவர்ந்துள்ளாய்.படைப்புக்காலத்தில் அவனை உன்னுள்கொண்டு நீ எஞ்சியபாதியையும் கவர்ந்தால் அவனது முச்சுடர் தங்கிய முழுத்திருமேனியும் உனதாதலால், அவன் உன்னுள்பரவி அடங்கியவனாவான். இத்தகு உன்திறமையைமுழுதும் உணர்வார் யார்? யாருமிலர்.நீயே அருள்க.

**விளக்கம்:** ''சராசரங்கள் தமக்கு உயிரானோன்''(திருவிளையாட..மண்சுமந்த ..55.4.) ''பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுரு,தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்''–(புறம்.கடவுள்..7–8)என்பதில்,கரக்கினும் என்பதன்உம்மை,கரவாமையே பெரிதும் என்று எதிர்மறை குறித்தது. இது படைத்தலாதித் தொழில் புரிநிலையினது. அவன்திருமேனியில்

பாதியளவு கொண்ட நீ படைப்பாதித் தொழில்புரியுங்கால் அவனை உன்னுள் அடக்கும்– வியாப்பியமாக்கும்–உன்திறமையை யார்உணர்வார் என்று வியக்கிறார்.

"உடையாள் நடுவுள் நீ இருத்தி "(திருவாச..378.1)என்பது அவளுள் அவன் வியாப்பியப்படுதல் குறிக்கும்.அம்மை, "ஐந்தொழிலு மேவித்தனி நடத்தும்" நிலையில்;சகலமும் அவன் என்பது, சகலமும் அவளாக ஆவதை,

"சகலமும் நின்திருச் சொரூபம்" என்ற மீ.பி.தமிழ்.நீராடல்.3 மற்றும்
"சொம்பாதி யன்மைக்கு அனைத்தும் தன்மயம் எனும் சுருதி"
–முத்துக்குமார சுவாமி..பிள்ளைத்தமிழ்.செங்கீரை.3.

என்பதும்உணர்த்தும். (சொம்=சொத்து)

**இலக்கணக் குறிப்பு:** முழுதும்– உம்மை முற்றும்மை.

33. தவவலி உடையோர் பலரையும் மயக்கிச்
சடைமுடி யோன்எதிர் மயங்கி
இவரும்அம் மயக்கால் புணர்ந்(து)ஒரு மகவும்
ஈன்றமால் மோகினி தனித்துப்
பவர்படர் வனம்புக்(கு) உறைதல்மற் றவன்மெய்ப்
பாதிநீ கவர்ந்த(து)ஓர்ந் தன்றோ
கவலரும் வளமை மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கவல்= கவலை. தவவலியுடையோர்=தாருக வனத்து முனிவர்கள். மயக்கி= திருமால் மோகினியாக வந்து மயக்கி. இவரும்=மேன்மேல் பெருகும். ஒருமகவு=சாத்தன்–ஐயனார் என்ற மகன். பவர்= கொடி. ஓர்ந்து= ஆராய்ந்து.

**பொழிப்புரை:** கவலைக்கு இடம்தராது பெரும்பயன் தரும் வளமைமிக்க திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!திருமால் ஆகிய மோகினி, தவவலிமையுடைய முனிவர்களை மயக்கியபின், சடைமுடியுடைய சிவபிரான்பால் மயங்கி, மேன்மேலும் பெருகும் அம்மயக்கத்தால் அவனைக்கூடி ஒருமகனையும் ஈன்றான்.ஈன்றவன்,சிவனது உடம்பில் பாதியை நீ கவர்ந்து இருப்பதால் உன்எதிர்வர நாணியல்லவா ஆராய்ந்து கொடிகள் படர்ந்த காட்டில் வாழ்கிறான்.

**விளக்கம்:** திருமால் ஆகிய மோகினி காட்டில் வாழக்காரணம்,காமுகர்களை மயக்கி,மனம் பேதலிக்கச் செய்ய என்பர்.மோகினி,பிச்சாடனரைக்கூடிச் சாத்தாவைப் பெற்றது: ".. ..அதிமோக மோகினியின் உருவமாய் ,நடமிடு இங்கு இவள்தன் மேலும்வைத்து உளம் நயந்துஓர் பிள்ளை பயந்த நீர் "––காசிக்கலம்பகம்.97

"மறுவலும் எம்பிரான் வலிந்து பற்றிஆங்கு
இறுகுறத் தழீயினன் இனைய காலையின்
உறுபுகழ்ச் சாத்தன்ஊங்கு உவர்க்குத் தோன்றினான்."
–காஞ்சிப்புராணம்.மாசாத்தன்தளிப்..23:1–3.

**இலக்கணக் குறிப்பு:** பலரையும்– முற்றும்மை.
இச்செய்யுள் ஏதுத் தற்குறிப்பேற்றவணி.

34.
நீஎனப் பெருமான் விரும்பிஓர் தினத்து
நிகழ்தரப் பொலிவதும் புவிக்குத்
தாய்எனப் படும்நீ அவன்எனப் பொலியும்
தன்மையும் வேறலேம் என்று
சேய்எனப் படுபல் உயிர்க்கெலாம் உண்மை
தெரிப்பது போலும்அஃ(து) அருளே
காய்எனப் பவம்முற்(று) அகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காய்= வஞ்சனை.பவம்= பிறவி. ஓர்தினம்= ஒருநாள்–உலகைப் படைக்கும் நாள். நிகழ்தர= நடந்துகொண்டு .பொலிதல்= சிறத்தல்.வேறலேம்= இருவரும் வேறுவேறானவர் அல்லோம். தன்மை= இயல்பு.ஓர்தினத்துப் பெருமான் நீ எனவிரும்பி நிகழ்தரப் பொலிவதும்.. ..

**பொழிப்புரை:** இது வஞ்சனையானது என்று உயிர்களின் பிறவியை முழுமையாக அகழ்ந்து எறியும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! கடையூழிக்குப்பின் நீ உலகைப்படைக்கத் தொடங்கும் நாளில்,உலகத் தந்தையாகிய இறைவன் தன்னை நீயாக விரும்பி நடந்துகொண்டு,உன்னைத் தன்னுள் இருந்து வெளிப்படுத்தியதால் உனக்கு அவன் தாயாகச் சிறந்து விளங்கியும், அதன்பின் உலகிற்குத் தாயாக விளங்கும் நீ, கடையூழியில் அவனுள் அடங்கி அவனாகவே சிறந்து விளங்கும் தன்மையுடன் விளங்குவதை நோக்கின்,சேய்களாக விளங்கும் பலவகைப்பட்ட உயிர்களுக்கும் நீவிர் ஒவ்வொருவரும் அவ்வப்போது தாயாகவும் தந்தை யாகவும் விளங்கும் தன்மையைத் தெரிவிப்பது போலாகும்.இச்செயல் உம்அருளேயாகும்.

**விளக்கம்:** உயிர்க்குலத்து மலம்கெடுக்க வாய்த்ததுபிறவி, அதற்குமாறாக மலங்கூட்டுவதாக அமைவதால் பிறவியைக் காயானது–வஞ்சனையானது என்றார்.

புவிக்குத் தாய்எனப்படும் நீஅவன்எனப்பொலியும் தன்மை:
“சிவம் சத்தி தன்னை ஈன்றும் சத்திதான்சிவத்தை ஈன்றும்
உவந்து இருவரும் புணர்ந்து உலகு உயிர்எல்லாம்ஈன்றும்”–
சித்தி.சுபக்கம்..67:1

என்றகருத்தைச் சித்தியார்க்கு முன்னும் பின்னும் வாழ்ந்தவர்கள் ஆண்டுள்ளனர்.

ஐந்தொழில் புரிநிலையில்; சிவத்துக்குச்சத்தி, உலகியல் உறவுமுறையில் தாய்,மகள்.மனைவி உறவுமுறை உடையவள் என்பதை,

“வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரி(து)உடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும் நல்தாரமும் ஆமே.” –திருமந்திரம்.1178.

மனைவி,தாய்,தங்கை,மகள் உறவு முறை உடையவள் என்பதை

"கனகமார் கவின்செய் முன்றில்
அனகநா டகற்குஎம் அன்னை
மனைவி தாய்தங் கைமகள்" –சிதம்பரச்செய்யுட்கோவை.33.

அப்பன்,அம்மைக்குக் கணவன்,மகன்,தந்தை,அண்ணன்,தலைவன் என்பதை,

"என்னுடை ஆரமுது எங்கள் அப்பன் எம்பெரு மான்இம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன்ம கன்தகப்பன் தமையன்எம்ஐயன்"
–திருவாசகம்.திருப்பொற்.13.

"தவளத்த நீறுஅணி யும்தடந் தோள்அண்ணல் தன்ஒருபால்
அவள்அத்த னாம்மக னாம்தில்லை யான்"
–திருக்கோவையார்.23:1–2.

என்ற இச்செய்திகளைத்திருவாசகம்"குருவருள் விளக்கம்"ஆசிரியர் மகாவித்வான்ச.த.தேசிகர் அவர்கள் திருப்பொற்சுண்ணம்13ஆம் திருப்பாடலில் பின்வருமாறு விளக்குவார்: "உலகத்தைப் படைத்தற்கா,இறைவன் சத்தியும் சிவமும்ஆனபோது, சிவம்இமவான் மகட்குக் கேள்வன் ஆகிறார்;சத்தியினின்று சதாசிவ தத்துவமாகத் தோன்றும்போது மகனாகிறார்; சிவத்தினின்றே சத்தி பிரிந்து தோன்றலால் சத்திக்குத் தகப்பன்ஆகிறார்;சுத்த மாயையிலிருந்து இறைவனது ஞானசத்தி அதிட்டிக்கச் சதாசிவ தத்துவமும், கிரியாசத்தி அதிட்டிக்கச் சத்தி தத்துவமும் தோன்றுதலின் சத்திக்குத் தமையன் ஆகிறார்" என்பது நோக்கத் தக்கதாகும்.

**இலக்கணக் குறிப்பு:** வேறலேம்– தன்மைப்பன்மை வினைமுற்று.

35 .

பரவுநும் கருணை வான்தவம் உடையார்
பால்அலால் புன்மையோர் பாலும்
விரவுமோ என்னின் எழுபெரு வெள்ளம்
விரிதரு வாரிதி மட்டோ
உரவுநீர் உறவி அளையிலும் புகுமே
உவமையில் கோமளக் கொழுந்தே
கரவுதீர் முனிவர் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரவு= வஞ்சனை. கோமளக்கொழுந்தே=அழகின் உச்ச நிலையினளே. நும்பரவுகருணை=உமது போற்றத்தக்கஅருள்.விரவுமோ=கலக்குமோ.வாரிதி=கடல். உரவுநீர்=ஆற்றுப் பெருவெள்ளம்.உறவி அளை=எறும்புப் புற்று.

**பொழிப்புரை:**வஞ்சனை தீர்ந்த முனிவர்கள் வலம்வரும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அழகின் உச்சநிலையினளே! ஆற்றுப் பெருவெள்ளம், அகன்றுவிரிந்த கடலில் மட்டுமா பாயும்?எறும்பின் புற்றிலும் பாயுமல்லவா!அதுபோல உன் போற்றத்தக்க அருளானது, மேலான தவத்தோரிடம் மட்டுமல்லாமல் அற்பர்பாலும் கலக்கும்.எனவே எனக்கும் அருள்க.

**இலக்கணக் குறிப்பு:** விரவுமோ–வினாஓகாரம்.அளையினும்– உம்மை இறந்தது தழுவியது. இச்செய்யுள் எடுத்துக்காட்டுஉவமைணி.

36. சடைஎனும் வனத்து வாழ்தரும் கங்கை
தனித்(து)உறை வாள்கொல்என்(று) எண்ணி
விடைமிசைப் பெருமான் அவள்உயிர் வாழ்வான்
மிலைந்தனன் கொன்றைஆங்(கு) அன்னப்
பெடையன நடையாய் அனையவன் தனைநீ
பித்தன்என்(று) எண்ணுதல் பிழையே
கடையறா வளமை மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கடையறா= எல்லையற்ற. தனித்து உறைவாள்= துணை யாருமின்றித் தனியே வாழ்வாள். உயிர் வாழ்வான்= உயிர் வாழ.ஆங்குக் கொன்றை மிலைந்தனன். மிலைந்தனன்=சூடினான்.

**பொழிப்புரை:**எல்லையற்ற வளமைமிக்க திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! விடை ஏறிய பெருமான்ஆகிய சிவபிரான், தனது சடைக்காட்டில் வாழும் கங்கையாள், துணையின்றி வருந்தி வாழ்வாளோ என்று நினைத்து,அவளுக்குத் துணையாக அச்சடையில் கொன்றை சூடினான். பிறர்வாழ அருளும் அவனை, அன்னப்பெடையினை ஒப்பநடக்கும் நீ ,பித்தன் என்று எண்ணுதல் பிழை; அவன்அருளாளன்.

**விளக்கம்:** நடுக்காட்டில் தனித்து வாழ்பவளுக்குத் துணையமைத்தான் என்க.

**இலக்கணக் குறிப்பு:** சடைஎனும் வனம்–உருவகம்.கொல்– ஐய இடைச்சொல். வாழ்வான்– வான்ஈற்று வினைஎச்சம். அன்னப்பெடைஅனநடை– விரிஉவமத்தொடர். அன– இடைக்குறை,உவமஉருபுமாம்.இச்செய்யுள் ஏதுத் தற்குறிப்பேற்றவணி.

37. பர(வு)உறும் உலகத்(து) உயிர்எலாம் ஈன்றும்
பருவரல் அவைஉறா(து) ஓங்க
உர(வு)உறு கருணை யால்வளர்த் திடுநீ
ஒருமலை மகள்என உதித்து
விர(வு)உறு புறவு கிளிமயில் பூவை
விரும்புபு வளர்த்தவா(று) என்னே
கர(வு)உறும் அவர்கா ணாத்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரவு= வஞ்சனை. பரவுஉறு=மிகஅகன்ற.பருவரல்= துன்பம். ஓங்க= சிறக்க. உரவுஉறு=மிகப்பொருத்தமான.விரவுஉறு=உன்னைவந்து பொருந்திய. பூவை=நாகணவாய்ப்புள்– மைனாப்பறவை.

**பொழிப்புரை:** வஞ்சனையானவர் காணற்கியலாத திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! மிகஅகன்ற உலகஉயிர்கள் அனைத்தையும் ஈன்று, அவை துன்புறாது சிறக்கப் மிகப்

பொருத்தமானகருணையால் அவற்றை வளர்த்துவரும் நீ,ஒப்பற்ற மலைமகளாய்–பார்வதியாய் வந்தபோது உன்னை வந்து பொருந்திய புறா,கிளி,மயில், மைனா போன்றவற்றை மட்டும் விரும்பிவளர்த்த வகை என்ன?

**விளக்கம்:** அம்மை உலகீன்றவள்:

''உலகுசூல் கொண்ட தலைவி'' –காசிக்கலம்பகம்.2.சுரிதகம்1.

''உலகேழும் பெற்ற தாய்க்கு நீ அருமைப் பிள்ளை''

–முத்துக்குமார. பிள்..சிற்.7.1.

**இலக்கணக் குறிப்பு:** எலாம்– இடைக்குறை,உம்மைத் தொகையுமாம் .விரும்புபு– செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

38 . பரிதிவந்(து) உதயம் எழமுறுக்(கு) உடையும்
பங்கய மலர்மிசை உறைவார்
அரிமறு மார்பும் அயன்திரு நாவும்
அமர்பவர் என்பர்நின் முகமாம்
விரிமலர்க் கமலத்(து) உறைவர்என்(று) உணரார்
மேதினி மடமைஎன் சொல்கேன்
கரி(சு)அறு வளமை மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரிசு= குற்றம். பரிதி=ஞாயிறு. முறுக்குஉடையும்=மலரும். உறைவார்=வாழும் திருமகளும்,கலைமகளும்.அரி மார்பும் மறு அயன் திருநாவும். மறு=மற்ற.மேதினி=உலகம்.

**பொழிப்புரை:** குற்றமற்ற வளமைமிக்க திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! ஞாயிறு வந்து தோன்றுதலால் கட்டவிழ்த்து மலரும் செந்தாமரை வெண்டாமரைகளுக்கு உரிய திருமகளும்,கலைமகளும் முறையே திருமால் மார்பிலும் மற்றைய நான்முகன் நாவிலும் வாழ்பவர்கள் என்பர் இவ்வுலகவர். ஆனால் அவ்விருவரும் நினது திருமுகமாகிய மலர்ந்த தாமரையில் வாழ்பவர் என்று உணராத இவ்வுலகவர் மடமையை என்னென்பேன்.

**விளக்கம்:** திருமகளும் கலைமகளும் அம்மையின் கண்கள் :

''திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப் பெருமகள் நுதற்கண் ஆகப் பெற்றுவான் செல்வம் கல்வி அருமைவீ டளிப்பாள்'' – திருவிளையாடற்..நான்மாடக்கூடல்..2.

மீச்சிறு உழைப்பால்,மீப்பெரு நலம்–விளைச்சல் தரும் வளமையே ''கரிசறு வளமை''என்றும்,அம்மையின் திருமுகம் எக்காலத்தும் மலர்ந்ததே ஆதலின் ''விரிமலர்க் கமலமுகம்''என்றும் கூறினார்.

**இலக்கணக் குறிப்பு:** முகமாம்..கமலத்து–உருவகம்.சொல்கேன்– தன்மை ஒருமை வினைமுற்று.

39 . விரும்புநின் செங்கை தாங்கலால் இரண்டாம்
வேற்றுமை விரித்(து)உரை செய்யா(து)

அரும்புதா மரைதாங் குவார்என லான்மூன்
றாவதும் படுசொலும் விரிக்கும்
பெரும்புவி மலர்பூ மா(து)எனும் பெயர்கள்
பெறும்வினைத் தொகைகுணத் தொகைப்பேர்
கரும்புபைங் கமுகின் பொலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கமுகு= பாக்குமரம்.தாமரை தாங்குவார்(இரண்டாம் வேற்றுமைத் தொகை)= தாமரையை ஏந்தியுள்ளவர்—அருள்தரு அகிலாண்ட நாயகி.தாமரை தாங்குவார்= (மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை) தாமரையால் தாங்கப்படும் திருமகள் கலைமகள்.படுசொல்=செயப்படுபொருள்
குறிக்கும்துணைவினை.மலர்பூ=(மலர்ந்த,மலர்கிற,மலரும்பூ)=வினைத்தொகை.மலர்பூ=(மலர் ஆகிய பூ)இருபெயரொட்டுப் பண்புத் தொகை=குணத்தொகை.மலர்பூஎன்பது இங்கு இருபொருளில் வந்தாற் போல,தாமரை தாங்குவார்என்பதும் இருபொருளில் வந்தது.

**பொழிப்புரை :** கரும்பானது பாக்குமரம் போன்று பொலியும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! இவ்வகன்ற உலகவர் கூறும் மலர் என்ற சொல்லும் பூ என்ற சொல்லும் இணைந்து நின்று வினைத்தொகையாகவும், இருபெயரொட்டுப்பண்புத் தொகையாகவும்நிற்க அவைதனித்தனிமாதுஎனும் சொல்லுடன்சேர்ந்து திருமகள்,கலைமகளைக் குறிப்பதுபோல், ‘‘தாமரை தாங்குவார்’’என்பதும் தாமரையைத் தாங்குவார் என்று இரண்டாம் வேற்றுமைத் தொகையாய் நின்று உன்னையும்,தாமரையால் தாங்கப்பெறும் திருமகளையும், கலைமகளையும் குறிப்பதால், தாமரை மலரைத் தாங்கும் நீயே திருமகளாகவும் கலைமகளாகவும் இருந்து அருள்புரிகிறாய் என்பது உண்மையே ஆகும்.

**விளக்கம்:** கரும்பு,கமுகிற் பொலிதல்:
‘‘கன்னல்கொல் கமுகுகொல் எனவளரும் சாலிவயல்.’’
முத்துக்குமா.பி.தமிழ்.தால்.8. **இலக்கணக் குறிப்பு:** தாங்குவார்—வினையாலணையும் பெயர்.இச்செய்யுள் எடுத்துக் காட்டுஉவமை அணி.

40. நந்திய அறியா மையில்நினைத் துதிப்பேன்
நாயினேன் ஆயினும் அதனால்
முந்திய வினைமுற்(று) ஒழியா(து) உறையும்
முறைமைஎன் மறவியி னேனும்
உந்திய அழலைத் தொடில்சுடா(து) உறும்கொல்
ஒழிவரும் கருணைவா ரிதியே
கந்திதென் பொருவப் பொலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கந்தி=பாக்குமரம். தென்= தென்னைமரம்.நந்திய=மிக்க. முந்திய= மேன்மேலும் எழும்.மறவி=மறதி.உந்திய =பெருகிய.ஒழிவரும்=வற்றாத.

**பொழிப்புரை:**பாக்குமரங்கள் ,தென்னைமரங்களைப் போல் பொலிகிற திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!வற்றாத கருணைக் கடலே! பெருகிய நெருப்பை மறந்துதொட்டாலும் அது சுடாதிருக்குமோ? தொட்டதன் பலனைத் தந்தே தீரும்.அது போல,நாயாகிய நான் உன்பெருமையை உணராத அறியாமையினால் மேன்மேலும் உன்னைத் துதித்தாலும் கூட, என்ஊழ்வினை என்துதியினால்,முழுதும் கெட வேண்டும்.ஆனால் கெடவில்லையே! என்னகாரணம்?

**விளக்கம்:** அறியாமையால் துதித்தலாவது,நம்பிகையின்றித் துதித்தல்.வழிபாட்டில் ஆகமங்கள் கூறும் அனைத்தையும் விட அசையா நம்பிக்கையே மிகமிக இன்றியமையாதது.அதுவே உரிய முழுப்பயன் விளைவிப்பது.இதனைஅருட்டிரு குமரகுருபரஅடிகள் நோயாளி,மருந்து மூலம் சிறப்பாக விளக்குகிறார்,

''..........அளியனேன் பற்றிலன் ஆயினும்
அன்பிலை கொடியை என்றுஅருளா யல்லை
நின்பதம் வழங்குதி நிமலஎன் றனக்கே.
மருந்துண் வேட்கையன் மனம்மகிழ்ந்து உண்ணினும்
தன்முகம் சுளித்துத் தலைநடுக் குற்றுக்
கண்ணீர் வீழ்த்துக் கலுழ்ந்தனன் மாந்தினும்
வாய்புகு மாயின் அம்மருந்து இருவர்க்கும்
தீப்பிணி மாற்றுதல் திண்ணம்'' –சிதம்பரமும்மணிக்..2.72–80.

( இதில்''வேட்கையன்'' என்பது முழுநம்பிக்கை குறிப்பது.)

நாய்க்குணமும்,கீழானோர்குணமும்: நாய்:மலம் தின்னும்,தான் கக்கியதைத் தின்னும், இனப்பகை கொண்டது,பெருகிய காமஇச்சை உடையது,இவ்வகைச் சேர்க்கையுடன் தெருவெங்கும் திரிவது,தன்னைப் பேணுகின்றவனிடம் வாலாட்டுவதுடன் கள்வன் தருவதையும் தின்று அவனுக்கும் வாலாட்டுவது. கீழானோர்: கீழானவை செய்து மகிழல், தன் வினைப்பயனை அனுபவித்தல், பிறரைச் சூழ்ந்து வாழாது பகைகோடல்,காமமும் அதனால் விளையும் வெகுளி, மயக்கத்துடன் திரிதல்,தனக்கு அருளும் பரம்பொருளைத் தவிர அற்பப்பயன் கருதிச் சிறுதெய்வங்களை வழிபடல்.

**இலக்கணக் குறிப்பு:** கொல்–ஐயஇடைச்சொல்.இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமை அணி.

41. அங்கைஏந் துறுபைங் கிள்ளையின் மொழியோ
அறுமுகக் குழவிவாய் மொழியோ
சங்கையே குழையாக் கொண்டவன் ஊடல்
தணித்திடப் புகலும்இன் மொழியோ
மங்கைநின் செவிக்கு நாயினேன் புன்சொல்
மற்றுநீ இரங்கல்எவ் வாறோ
கங்கைதாழ் பொன்னி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** தாழ்=வணங்கும். அங்கை=அழகியகை.

**பொழிப்புரை:**கங்கையும் வணங்கும் காவிரி சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! மங்கையே! உன்செவிகட்கு நான் கூறும் அற்பச்சொற்கள், நீஉன் அழகிய கையில் ஏந்தியுள்ள பச்சைக்கிளியின் சொற்களோ, உன் ஆறுமுகக் குழந்தையான முருகப் பெருமானின் இனிய சொற்களோ, சங்குக் காதணி அணிந்த உன்கணவன், உன்ஊடலைத் தணிக்கக் கூறும் இன்சொற்களோ அல்ல. எனவே நீ எனக்கு எவ்வாறு இரங்கி அருள்வாய்.

**விளக்கம்:** அம்மை கிளி ஏந்துதல்:

''பைங்கிளியை அங்கைகொடு பண்புரை பயிற்றும்
குங்கும சவுந்தரி'' – பூவாளூர்ப் புராணம். 4.

குழவியின் மழலை:

''குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்'' –திருக்குறள். 66

''யாழொடும் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா ஆயினும் தந்தையர்க்கு
அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை'' –புறம். 92.

''குழலும் யாழும் இனியஎனக் கூறா வண்ணம் மென்கனிவாய்
மழலை மொழிந்தும்'' –மாயையின் மழலை. பிரபுலிங்கலீலை.

ஊடல் தீர்க்கும் கணவன் இன்சொல்:

''பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை உடைக்கும் படை'' –திருக்குறள். 1258.

**இலக்கணக் குறிப்பு:** ''மொழியோ''என்று வருவனவற்றின் ஈற்று ஓகாரங்கள் வினாப் பொருளன. எவ்வாறோ–ஓகாரம் எதிர்மறை. இச் செய்யுள் விலக்கு அணி.

42.

ஒப்பில்நின் புகழே கேட்களன் செவிகண்
ஓங்குநின் உருவமே காணத்
தப்பில்நின் றனையே பாடிட வாய்கை
தவாதுநின் அடிப்பணி ஆற்ற
இப்படி உறுமேல் செங்கதிர் உதயம்
எத்திசை எழினும்மற்(று) என்னே
கப்(பு)இணர்த் தருக்கள் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** இணர் கப்பு=பூங்கொத்துடைய கிளைகள். ஓங்கு=நிலைத்த. தவாது=வழுவாது. அடிப்பணி= திருவடித்தொண்டு.

**பொழிப்புரை:** பூங்கொத்துக்களுடன் கூடிய கிளைகள் கொண்ட மரங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்டநாயகியே! ஒப்பற்ற உன்புகழையே என்செவிகள் கேட்கவும், நிலைத்த அருள்வடிவான உன் திருவுருவையே என்கண்கள் காணவும், அருளுவதில் வழுவாத உன்னையே என்வாய் பாடவும், உன்திருவடிகட்குத் தொண்டு செய்வதில் வழுவாது

என்கைகள் நிலைக்கவும் வாய்க்குமானால்,''எங்கெழிலென் ஞாயிறு''என்றுவாழ்வேன். அவை அவ்வவ்வாறே செய்ய அருள்க.

**விளக்கம்:** எங்கெழில்என் ஞாயிறு எமக்கு'' என்ற திருவெம்பாவையை நினைவூட்டுவது, ''செங்கதிர் உதயம் எத்திசை எழினும்மற்று என்னே''என்பது. கவலையற்ற நிறைநல நல்வாழ்வு குறிப்பது இது. அப்பரடிகளின் ''திருவங்கமாலை''யை நினைவூட்டுவது இச்செய்யுள். ''கண்அவனைக் காணஇரு காதுஅவனைக் கேட்க

பண்அவனைப் பாடிப் பதம்சூழ்க– எள்நிறைந்த
நெய்ஒத்து நின்றானை நீல மிடற்றானைக்
கைஒத்து நேர்கூப்புக.'' –புறப்பொருள் வெண்பா மாலை.கடவுள்..

''கண்ணால் உனது திருவடியைக் கண்டுஆ தரவு பெருகிஇரு
கையால் தொழுதுஉன் திருக்கோயில் காலால் வலம்செய்து உனதுபுகழ்ப்,
பண்ணால் உருகிக் கசிந்துகண்ணீர் பாயா எனையும் தாயாகப்
பரிந்து வளர்க்கும் பெருங்கருணை படைத்து விரிஞ்சைப் பதிவாழும்..''
–திருவிரிஞ்சை முருகன்.பி.த.வருகைப்..

**இலக்கணக் குறிப்பு:** புகழே,உருவமே,நின்தனையே–தேற்றேகாரங்கள். அடிப்பணி– தேற்றேகாரம் தொக்கது.

43 . ஓதுறு முறைமை ஒன்றின்முன் மூன்றுள்
ஒருசிறி யேற்கும்நின் பதிக்கும்
போ(து)உறு குழல்நீ நடுப்பொலி தலினால்
புரிந்துநின் பதியொடும் எனைப்பின்
தீ(து)உறும் இரண்டின் நீக்கிஒன் றாக்கும்
திறன்நினக்(கு) அன்றியார்க்(கு) உளது
கா(து)உறு கண்ணார் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காதுஉறுகண்=செவியளவு நீண்டகண். ஓதுறுமுறைமை= திருவைந்தெழுத்தை ஓதும் முறைகள்.ஒன்று= சிவயநம . முன்மூன்றனுள்= முன்னதாக உள்ள மூன்று எழுத்துள்–''சிவய.''ஒருசிறியேற்கும்= அற்பனாகிய எனக்கும்(உயிரைக் குறிக்கும்)''ய''என்கிற எழுத்துக்கும். நின்பதிக்கும்= நின் கொழுநனைக் குறிக்கும்''சி''என்ற எழுத்துக்கும். நீ நடுப் பொலிதலினால்=சத்தி ஆகிய நீ ''வ''கரமாக ''சி'',''ய''ஆகிய இவற்றின் நடுவே சிறந்து விளங்குதலால். பின் இரண்டு=இறுதி இரண்டு எழுத்துகள்–மறைத்தலைக் குறிக்கும்''ந',' மலத்தைக் குறிக்கும்''ம'' என்பன.புரிந்து நின்பதியொடும் ஒன்றாக்கும் திறன்=விருப்புடன் உன் கணவனாகிய சிவத்துடன் உயிரினைச் சேர்த்து ஒன்றாக்குகிற திறமை.

**பொழிப்புரை:** காதளவு நீண்ட கண்களையுடைய மகளிர் சூழஉள்ள திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! முறைப்படி ஓதுதற்குரிய''சிவயநம'' என்ற சூக்குமத்திருவைந் தெழுத்தில், முன்னேஉள்ள ''சிவாய'' என்ற மூன்றெழுத்துகளுள், மலர்சூடிய கூந்தலுடைய

நீ(வ),சிவத்தைக் குறிக்கும்''சி'',உயிரைக் குறிக்கும்''ய'' இவற்றின் நடுவே சிறந்து விளங்குவதால், உயிராகிய என்மீது(ய)கருணை கொண்டு, திருவைந்தெழுத்தின் பின்னிரண்டு எழுத்துகளுள், மறைத்தலைக் குறிக்கும் ''ந'',மலத்தைக் குறிக்கும்''ம''ஆகிய இரண்டையும் உயிரைக்குறிக்கும்''ய''ஆகிய என்னிடமிருந்து நீக்கி என்னைச் சிவத்துடன் ஒன்றாக்கும் திறமை உன்னையன்றி வேறுயாரிடம் உள்ளது?எனவே எனக்கு இவ்வகையில் அருள்க.

**விளக்கம்:** திருவைந்தெழுத்தும்,அதனை ஓதும் முறையும்:

''அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் ஏனைப் பெருஎழுத்தும்—நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமல் காட்டக் கொடி.'' __கொடிக்கவி. 4.

அஞ்செழுத்து=சிவாயநம. எட்டெழுத்து=ஓம்ஆம்ஔம்சிவாயநம. (ஒற்றெழுத்தைச் சேர்க்காதுஎண்ணுக. )ஆறெழுத்து=ஓம்சிவாயநம.நாலெழுத்து=ஓம்சிவாய. பிஞ்செழுத்து=வ. பெருஎழுத்து=சி.

''தீதுறும் இரண்டின்''(ந—மறைப்பாற்றல்,ம—மலம்'')நம்மைநீக்கி முதலில் அருள்கிறவள் அம்மை—வ .நமக்கு முதலில் அருள்கிறவள் அம்மை :

''முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருள்''. —திருவெம்பாவை.
''அவளன்றி ஊர்புகுமாறு அறியேனே''.—— —திருமந்திரம்.1053.
''தாயுடன் சேர்ந்து தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து
ஏயுமதே நிட்டை''. — பட்டினத்தார்.

**இலக்கணக் குறிப்பு:** மூன்றனுள்,இரண்டின்——தொகைக்குறிப்புகள்

44. கோவணம் மறையாக் கொண்டனன் பெருமான்
கொண்டனை நீயுமே கலையாத்
தூவண அவன்மா தேவன்மா தேவி
துதிக்குநீ எனில்திரு நெடுமால்
ஏவணம் அவற்கு நீவியாப் பியம்என்(று)
இசைப்ப(து)எங் ஙனம்அருள் தாயே
காவண மறுகு மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காவணம் மலி மறுகு=பந்தல்கள் மலிந்த தெருக்கள்.தூவணன் அவன்=தூய வடிவன் ஆகிய சிவபிரான். திருநெடுமால் அவற்கு ஏவணம். ஏவணம்= எவ்வகையில் தொடர்பு உடையவன். நீ வியாப்பியம்=நீ சிவபெருமானிடம் பரவியிருப்பவள்—அடக்கம்ஆன உடனிகழ்ச்சியானவள்.

**பொழிப்புரை:** பந்தல்கள் மலிந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! சிவபிரான் வேதங்களைத் தமது கோவணமாகக் கொண்டவன்.நீ வேதங்களை மேகலையாக

அணிந்தவள். தூய ஞானவடிவன் ஆகிய அவன் மாதேவன். அவனுக்குப் போற்றத் தக்க மாதேவி நீ என்றால், திருமால் அம்மாதேவனுக்கு எவ்வகையில் தொடர்பு உடையவன்? திருமாலும் அவனுக்கு மனைவி என்ற தொடர்பு உடையவன் என்பதால் நீ சிவபிரானிடம் வியாப்பியமானவளாக—அவனுள் அடக்கமானஉடனிகழ்ச்சியுடையவள் என்று இருத்தல் எங்ஙனம்இயலும்?தாயே கூறியருள்க.

**விளக்கம்:** சிவபெருமானுக்குக் கோவணம் மறை;அரைஞாண்கலை:

"மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன் காண் சாழலோ''.

திருவா..திருச்சாழல்.2.

(கலை,அரைஞாண்; மறை கோவணம் என்க—நிரல் நிறை.

திருமால் சிவனுடன் பயிலுதல்:

"உடன் பயில்கின்றனன் மாதவனே''.

திருமு.3.திருவியமகம்.

சிவனிடம் திருமாலும் உடன்பயில்கின்றனன் என்பதால்,உரிமைமனைவியாகிய நீ அவனுள் அடங்கிய உடன்நிகழ்ச்சிஆதல்—வியாப்பியம் ஆதல் எங்ஙனம்என்கிறார்.

**இலக்கணக் குறிப்பு:** மறையா, கோவணமா ஆகஎன்பது ஆ என்று குறுகியது விகாரம்.

45:

பொறிஅரி தொடரும் மருமலர்த் தாளோன்
பொலிஅனம் தொடர்சடா முடியோன்
அறியும்நின் கொழுநன் பொறிஅரி தொடரும்
மலர்க்குழல் நினைநடை அன்னம்
செறிதரத் தொடர்மென் பதத்தினை எனின்நீ
தேவொடு மாறுளாய் கொல்லோ
கறிபயில் அளிசூழ் பொழில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கறி= மிளகுக்கொடி. அளி=வண்டு. பொறி=திருமகள். அரி=திருமால். அனம்தொடர் பொலிசடாமுடியோன். அனம்=அன்னப்பறவை—நான்முகன். பொறிஅரி= புள்ளிகளுடைய வண்டு.மலர்க்குழல்= மலர்சூடியகூந்தலுடையவளே. அன்னம்நினை நடைசெறிதரத்தொடர்=அன்னப்பறவை உன்னை நடையால் நெருங்கி இருக்குமாறு—ஒத்திருக்குமாறு—தொடரும். தேவு= சிவபெருமான்.

**பொழிப்புரை:**மிளகுக்கொடிகள் மிகப்படர்ந்ததும்,மலர்களில் வண்டுகள் மிகச்சூழ்ந்ததும் ஆகிய சோலைகள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தமதுமார்பில் திருமகளைத் தாங்கிய திருமால்,பன்றியாகத் தேடிக் காணாது தொடர்ந்த மணம் மிக்க தாமரைமலர் போன்ற திருவடியும், நான்முகன் ஆகிய அன்னப்பறவை தேடித் தொடர்ந்த அழகு பொலியும் சடைமுடியும் உடையவனாக அறியப்படும் புகழ்வாய்ந்த உன்கொழுநனுடன், உன்மலர்சூடிய கூந்தலை—முடியைப்— புள்ளிகளையுடைய அரி—வண்டுகள் தொடர்வதாலும்,

உன்மென்மையான திருவடிகளை அன்னப்பறவை நடைகற்கத் தொடர்வதாலும் நீ (உன்கொழுநனுடன்) மாறுபட்டவளா?இல்லை. ஒத்து நடப்பவளே.

**விளக்கம்:** சிவபிரானைத் தொடர்ந்தன இரண்டு.ஒன்று:சிவனது திருவடி காண, திருமகளைத் தன்மார்பில் தாங்கிய திருமால்(பொறிஅரி).மற்றது சிவனது திருமுடி காணப்பறந்தஅன்னம்.சிவபிரானதுஅடியையும் முடியையும் நாடிச்சென்ற இவை தம் நிலை மாறி அம்மையின்மலர்சூடிய முடியை அரியும்(வண்டும்),திருவடியை (நடையை) அன்னமும் நாடினவாதலின் நீ உன் கொழுநனுடன் மாறுபட்டனையோ என்றார்.(பொறிஅரி என்பது; முதலடியில் திருமகளை மார்பில்தாங்கிய திருமால் என்ற பொருளிலும்,இரண்டாமடியில் புள்ளிகளையுடைய வண்டுஎன்றபொருளிலும்வரும் நயம்காண்க.

அப்பனோடு ஒத்து நிற்பவள்அம்மை:

"எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்கும்" சித்தி.சுபக்கம்

" பொன்நிறம் கட்டியினும் பூணினும் நின்றாற்போல்
அந்நிற அண்ணலும் அம்பிகையும்–செந்நிறத்தள்
எந்நிறத்த ளாயிருப்பள் எங்கள் சிவபதியும்
அந்நிறத்த னாய்இருப்பன் ஆங்கு."

– திருக்களிற்றுப்படியார்.79.

**இலக்கணக் குறிப்பு:** பொறிஅரி,பொறிஅரி –இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகைகள்.கறி–முதலாகுபெயர்.கொல் –ஐயஇடைச்சொல் .

46 . திருந்துறு தந்தை ஆகிய வரையைத்
திரிபுரம் எரித்தநாள் குழைத்த
பெருந்திறல் உணர்ந்(து)அம் மலையுளம் மகிழப்
பெருந்தகை நிறம்முலைக் கோட்டால்
பொருந்துறக் குழைத்தாய் போலும்நின் திறமை
புகலுதற்(கு) அடங்குமோ தாயே
கருந்துழாய் மார்பன் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கருந்துழாய்=பெருமைபொருந்திய துளசி. வரை= மலை. குழைத்த= வில்லாக ஏந்தி வளைத்த.நிறம்=மார்பு.

**பொழிப்புரை:** பெருமை பொருந்திய துளசி மாலையணிந்த மார்புடைய திருமால் புகழும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்தந்தை ஆகிய மலையை முப்புரம் எரித்த நாளில் வில்லாக ஏந்தி வளைத்த உன்கணவன் சிவபிரானது பேராற்றலை நீ உணர்ந்து, உன்தந்தை மனம்மகிழ உன்கணவனது மார்பினை நீ உன் முலைக் கோடுகளால் பொருத்தமாகக் குழைத்தாய்போலும்.தாயே உன்திறமை சொல்லின் எல்லைகடந்தது.

**விளக்கம்:**மலையன்ஆகியதந்தையைக்குழைத்த கணவனைத் தான்குழைத்துத் தந்தையை மகிழ்வித்தாள்.

சிவபிரான் மலையை வில்லாக ஏந்தி வளைத்தது:
''வளைந்தது வில்லு விளைந்தது பூசல்''---- திருவாச..
''நாண்என்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் மண்தின்ற பாணமே..
-தனிப்பாடல்.காளமேகம்+இரட்டைப்புலவர்கள்.

**இலக்கணக் குறிப்பு:** முலைக்கோடு-உருவகம். அடங்குமோ-எதிர்மறை ஓகாரம்.

47 . மறைமுதல் பொருவ ஏந்தினை நீயும்
மலர்புரை தருகையில் வன்னி
உறைதரும் அனையான் நிறமும்நின் நிறமும்
ஒத்தன வாயினும் அவன(து)
அறைதரும் எழுநா வதுநின(து) ஒருநா
அதுசெவி அவாம்மொழி அதுதான்
கறையற எதுநீ புகல்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** மறைமுதல்= வேதமுதல்வன் ஆகிய சிவபிரான். பொருவ= ஒப்ப.நிறம்= இயல்பு.வன்னி= நெருப்பு,கிளி.சிவன்கை வன்னி நெருப்பு.எழு= மேல்நோக்கியே எழும்.நா= சுவாலை-தீக்கொழுந்து.அம்மை கைவன்னி பச்சைக்கிளி, அதுகேட்க விரும்பும் ஒரு நாக்கு உடையது.கறையற நீ புகன்றிடு=குற்றமற நீ கூறியருள்க.

**பொழிப்புரை:**தமது கையில் வன்னியை ( நெருப்பை) ஏந்திய வேதமுதல்வனாகிய சிவபிரானை ஒப்ப, நீயும் உன்கையில் வன்னியை( பச்சைக்கிளியை) ஏந்தியுள்ளாய். இதனால் அவனது இயல்பும் நின்இயல்பும்ஒத்தன. எனினும் அவன் கையில் ஏந்திய வன்னி(நெருப்பு) மேல்நோக்கிஎழும்நாக்கு உடையது. நீ உன்கையில் ஏந்திய வன்னி( பச்சைக்கிளி) ஒருநா உடையது.அவ்வொருநா மேன்மேலும் கேட்கவிரும்பும் மொழிகள் பேசுவது. அவ்வன்னி எதுஎன்பதைத் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே குற்றமறநீயே கூறியருள்க.

**விளக்கம்:** ''வன்னி'' என்ற சொல்லை இருவேறிடத்தும் இருவேறு பொருள்களில் ஆளும் நயம் சுவைக்கத்தக்கது

அம்மை ''மரகதவல்லி' என்பது பெருவழக்காயினும்''செங்நிறத்தள்'' எனும் வழக்கும் உண்டு. ''
''ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லி'' -மீ.பி.த.அம்புலி.1-10.
''உதிக்கின்ற செங்கதிர்.. ..அபிராமி'' -அபிராமி அந்தாதி.1
அம்மை,கிளியினை ஏந்தி அதற்குப் பேசக் கற்பித்தல்:
''பைங்கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை ஒழுகுதீங் கிளவி உதவி''-
மீ.பி.த. காப்பு.8.2-3.
அக்கினியின் எழு நாக்கு: எழுஎன்பதற்கு ஏழு என்று பொருள்கொண்டு

காளி,கராளி,,மனோசவை,சலோகிதை,சதும்பரவருணை,புலிங்கினி,விசுவரூபி என்பர். ஆயினும், எழு என்பதை ஏழு என்றாக்கி எண்ணுப்பெயர்ப் பொருள் கொள்வதைவிட, எழு=மேல்நோக்கி எழும் என்று கொள்வது ஏற்புடைத்து.

**இலக்கணக் குறிப்பு:** நீயும்–இறந்தது தழுவிய எச்சவும்மை.மலர் புரைதரு கை–விரி உவமைத் தொடர்.அதுதான்–தான்–அசைச்சொல்.விடுகதை ஒத்த இச்செய்யுள் வேற்றுமையணி.

48. குடகடல் ஒடுங்கும் இரவிதண் மதியம்
குணகடல் உதிக்கும்என்(று) உரைக்கும்
படரவு ஏந்தும் உலகம்நின் ஒருகைப்
பங்கயத்(து) ஒடுங்கும் நின்கொழுநன்
தடமலர் வதனத்(து) உதிக்கும் என்(று) உணராத்
தன்மைஎன் மென்மைசால் மயிலே
கடவுளர் பலரும் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கடவுளர்=திருமால் முதலியோர்.குடகடல்=மேலைக்கடல்–அரபிக்கடல். தண்மதியம்=குளிர்ந்த முழுமதி.குணகடல்=கீழைக்கடல்– வங்காளவிரிகுடா.படரவு= ஆதிசேடன். ஒடுங்கும்=மறைந்துகிடக்கும்.தன்மைஎன்=இயல்பு எத்தகு வியப்புக்குரியது.

**பொழிப்புரை:**மென்மையான இயல்புடைய மயில் ஒத்தவளே!திருமால் முதலிய கடவுளர் பலரும் வணங்கும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!ஆதிசேடன் தன் தலையில் சுமப்பதாகக்கூறும் இவ்உலகவர் அனைவரும்; ஞாயிறு மேலைக்கடலில் மறையும்போது முழுதண்ணிலவு கீழைக்கடலில் தோன்றும்என்பர்.ஆனால், உன்கொழுநனது தாமரைஒத்த முகத்தில் வலதுகண்ணும் இடதுகண்ணுமாக ஒருசேர ஒளியுடன் விளங்கும் அவை,நீ அவன் கண்களை விளையாட்டாகப் பொத்தும்போது உன் ஒப்பற்ற கையாகிய தாமரையில் ஒருசேர ஒடுங்கும் என்பதை இவ்வுலகவர் உணராத காரணம் என்ன?

**விளக்கம்:** வெவ்வேறு நேரங்களில் தோன்றி, வெவ்வேறு நேரங்களில் மறையும் இருசுடரும் அப்பன் முகத்தில் ஒருசேரத் தோன்றி அம்மை கையில் ஒருசேர ஒடுங்கும் என்றார் ''இரவி, தண்மதியம்(இரண்டும்) குடகடல் ஒடுங்கும்,குணகடல் உதிக்கும்'' என்றால், ''மதி'' என்று மட்டும்கூறவேண்டும்.ஆனால்,முழுமையை அல்லது நிறைவைக் குறிக்கும் ''அம்'கூட்டி ''மதியம்'' என்றதால் முன்குறித்தவாறு பொருள் கொள்ளப்பெற்றது. மேலும்,''மதி''என்பது பிறையைக்குறிக்கும்எனில் பிறை,கிழக்கில் தோன்றுவதன்று என்க.

இரவியும் மதியமும் அம்மை கையில் ஒடுங்கல்:

'' நாயகன் கண்ந யப்பால் நாயகி மறைப்ப எங்கும்
பாஇருள் ஆகி மூட'' –சித்தி..சுபக்..சூத்..1.செய்.72 .

''இருண்டபூங் குழலாள் செங்கை இறுகுறப் புதைத்தலோடும்
இருண்டகங் தரத்தார் நோக்கின் இருசுடர் மறைந்த வாற்றால்
இருண்டது புவனம்'' –காஞ்சிப்புராணம்.தழுவக்குழைந்த..26.

**இலக்கணக் குறிப்பு:** குடகடல்,குணகடல்,படரவு–இவற்றின் முதற்சொற்கள் இனம் விலக்கிய அடைகள்.கைப்பங்கயம்–உருவகம். மலர்வதனம்– உவமைத்தொகை.

49 . பெருவழக்(கு) எடுத்துப் பேரவை ஏறிப்
பேசுவ குறைவறப் பேசி
ஒருதிரு நாவ லூரனை ஆண்டான்
ஓங்குவெண் நாவலூர் அண்ணல்
அருளொடு நீயும் அத்தகு செயல்ஒன்(று)
ஆற்றின்நன்(று) என்றியான் நினைந்தேன்
கருள்அற ஒளியின் மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கருள்= இருள்.பேரவை=திருவெண்ணெய் நல்லூர் அறங்கூறவையம்.

**பொழிப்புரை:**இருள்முழுதும் தீர,அதனால் மிக்க ஒளியுடன் மிளிரும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளிய சிவபிரான்,ஒப்பற்ற நாவலூரராகிய சுந்தர்மீது பெருவழக்கு– அடிமைவழக்குத் தொடுத்து, அதன்பொருட்டுத் திருவெண்ணெய் நல்லூர் அறங்கூறவையம் ஏறி, எடுத்துக்கூற வேண்டியவற்றை முழுதும் கூறிச் சுந்தரரை அடிமை கொண்டான். தாயே! அத்தகு செயல் ஒன்றினைநீ இப்போது என்மீது மேற்கொண்டு என்னை அடிமை கொள்ளல் நன்று என்று நினைந்து உன்னை வேண்டுகிறேன்.அருள்க.

**விளக்கம்:** இவ்வரலாற்றைப் பெரியபுராணம் தடுத்தாட்கொண்ட புராணத்தில் விரிவாக்காண்க.

அன்றையதிருக்கோயில்கள்அகநலம்கூட்டும்வழிபாட்டிடங்களாகமட்டுமன்றி ஊர்நலம் கூட்டும் அறங்கூறவையம், ஆவணப்பதிவகம்,கல்விக்கூடம், மருத்துவசாலை முதலியவற்றின் இடமாகவும் திகழ்ந்தன என்பதை நம் வணக்கத்திற்குரிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின்''ஆலயங்கள் சமுதாய மையங்கள்''என்ற நூலில் விரிவாகக் காணலாம்.

**இலக்கணக் குறிப்பு:** நீயும்–இறந்தது தழுவிய எச்சவும்மை.என்றியான்–குற்றியலிகரம்.

50 . முதுபுகழ் உடைநின் பதிஇரு பாத
முழுமலர்க்(கு) அர்ச்சனை ஆற்றின்
மதுமலர் ஒன்று குறையினும் அதற்கு
மாறுகண் இடந்திடல் வேண்டும்
அதுசெய மாயோன் அல்லன்யான் நின்பொன்
அடிஅருச் சனைசெய்வான் புகுந்தேன்
கதுமென அருள்செய்(து) அருள்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** பதி=கொழுநன். அருச்சனை=மலர்இட்டு வழிபடல். மாறு= மாறாக–பதிலாக. இடந்து=தோண்டி. கதும்என=விரைந்து.முழு= முழுமைபெற.

**பொழிப்புரை :**திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அநாதி காலந்தொட்டே புகழ்வாய்ந்த உன்கணவனின் இருதிருவடி மலர்கட்கும் மலரிட்டு வழிபாடு செய்யும்போது தேன்பொருந்திய ஆயிரம் மலர்களுள் ஒன்று குறைந்தாலும், அதனை ஈடுசெய்ய என் ஒருகண்ணைத் தோண்டி இட்டு வழிபட நான் திருமால் அல்லேன். எனவே உன் கொழுநனைவழிபாடு செய்யாமல் உன்னை மலரிட்டு வழிபட முற்பட்டேன்.விரைந்து எனக்கு அருள்க.

**விளக்கம் :** திருமால் கண்மலர் சாத்தி வழிபட்டது:

''பச்சைமால் சிவந்த கண்மலர் சாத்தியும் காண்பரிதான கழல்மலர்''
திருவாரூர்நான்மணி..31.

''கடிக்கமலப் பார்வை வைத்தும் கண்ணனார் காணாநின் அடிக்கமலம்''
சிதம்பரச்செய்யுட்கோவை.67

**இலக்கணக் குறிப்பு :** பாதமுழுமலர்–உருவகம்.

51 .

தருமம்என்(று) உரைக்கும் அளியமர் நின்கைத்
தாமரை மலரினது அலர்ச்சி
பெருமதி மலர்ச்சி மாற்றும்என்(று) உரையார்
பெருமதி அலர்ச்சியே செழித்த
மருமலி கமல மலரின(து) அலர்ச்சி
மாற்றும்என்(று) உரைப்பர்ஈ(து) என்னே
கருணையங் கடலே அருள்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை :** அளி= கருணை.மதிமலர்ச்சி= நிலவின் எழுச்சி.

**பொழிப்புரை :** அழகிய கருணைக் கடலாக விளங்கும் திருவானைக்கா அகிலாண்டநாயகியே! அறவடிவானது என்று கூறப்பெறும் கருணையமர்ந்த நின் கையாகிய தாமரை மலரின் அலர்ச்சியை உலகியலின்படி முழுநிலவின் அலர்ச்சி மாற்றும் என்று யாரும் கூறார்.ஆனால் முழுநிலவின் அலர்ச்சியை–பொலிவை உன் கையாகிய தாமரைமலரின் மலர்ச்சியே மாற்ற வல்லது என்பர்.இது என்ன புதுமை!

**விளக்கம் :** உலகியலின்படி சித்துப் பொருளே சடப்பொருளை ஆள்வது. சடப்பொருளாகிய நிலவு சித்துப்பொருளாகிய உன்னிடம் ஏதும்செய்தல் இயலாது.அனைத்தையும் ஆளும் சித்து நீ. எனவே உன் கைம்மலரே நிலவின் எழுச்சியை மாற்றும் என்பர் உலகவர்.

**இலக்கணக் குறிப்பு :** தாமரைமலர்,கமலமலர் –இருபெயரொட்டுப் பண்புத்தொகைகள். அலர்ச்சியே–தேற்றேகாரம்.

52 .

நீவினோ தத்தால் நின்பதி முகக்கண்
நிகழ்கைசேர்த்(து) எடுத்திடும் காலம்
ஓவியம் அனையாய் கணமுமின்(று) உனக்(கு)அஃ(து)
உம்பரா தியபல் லுயிர்க்கும்
மேவிய கோடி யுகம்பல வாம்அவ்

விநோதம்நீ ஆற்றுதல் தகாது
காவியங் கண்ணார் பயில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காவி= கருங்குவளை.விநோதம்= விளையாட்டு.நிகழ்=ஒளிரும்.கண் கை சேர்த்து=கண்ணைக் கையால் பொத்தி.உனக்குக் கணமுமின்று.

**பொழிப்புரை:** கருங்குவளை மலர் ஒத்த கண்களையுடையமகளிர் பயிலும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நீ உன் கொழுநனாகிய சிவபிரானின் ஒளிரும் இருசுடர்களாகிய கண்களை விளையாட்டாக உன்கையால் பொத்தி எடுத்த நொடிப்பொழுதாகிய அக்கால எல்லை உனக்கு ஒருநொடிப் பொழுதாயினும் அது தேவர்கட்கும், உலக உயிர்களுக்கும் பலகோடி யுகங்கள் ஆகும். ஓவியம் ஒத்த அழகியே! இவ்வாறு விளையாடுதல் உனக்குத் தக்க செயலன்று.

**விளக்கம்:** அம்மை ,அப்பனது கண்பொத்தியாடல்:

“வெறிமலர்த் தளவ மூரல் விழியிணை மறைத்து நீக்கும்
சிறுபொழுது உலகுக் கெல்லாம் எண்ணில்பல் ஊழி சென்று
மறைநெறி படைப்புச் செய்கை ஆதிய மறுத்த.. ..”
—காஞ்சிப் புரா..தழுவக்குழை.. 34.1–3.

“ஆட லான்விழி புதைத்தலும் ஆரிருட் படலம்
மூட யாவையும் இடர்க்கடல் மூழ்கிய”
—காஞ்சிப் புரா..தழுவக்குழை..317.12.

(ஆடலான்=விளையாட்டாக.)

நமக்கு உள்ள ஓராண்டுகடவுளரல்லாத் தேவர்களுக்கு ஒருநாள் என்றும், கடவுள் நிலை உயரஉயரநம்ஒருயுகம் ஒருநாள்போல அமையும்செல்லும் என்றும் கூறுவர்.

53 . தென்னவன் புரிந்த பெருந்தவப் பேற்றால்
செழுந்தழல் அகத்(து)ஒரு மகவே
என்னநீ உதித்த வாஞ்சையுள் குறித்தே
இறைநுதற் கண்புதை யாது
மன்ன(மற்று) இருகண் புதைத்தனை நின்னை
மதிக்குலம் என்ப(து)ஓர்ந் திலையோ
கன்னவில் தோளார் பயில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கன்னவில்=கல்+நவில்=கருங்கல் என்று கூறத்தக்க.செழுந்தழல்= பெருவேள்வித்தீ.வாஞ்சை=அன்பு.நுதற்கண் புதையாது மன்ன.மன்ன=நிலைபெற.

**பொழிப்புரை:** கருங்கல் என்று கூறத்தக்க தோள்களையுடைய ஆண்மக்கள் பயிலும் திருவானைகா அகிலாண்ட நாயகியே! மலையத்துவச பாண்டியன் செய்த பெருந்தவப்பேறு காரணமாக அவன் இயற்றிய பெரிய வேள்வித்தீயில் மூன்று வயது மகளாகத் தோன்றியதால்

அந்தத் தீயின்மீது கொண்ட அன்பால், சிவபிரானது தீவடிவான நுதற்கண்ணைப் பொத்தாது நிலைபெறச்செய்து,ஏனைய ஞாயிறுதிங்கள் ஆகிய இருகண்களை மட்டும் நீ பொத்தினாய். பொத்திய இருகண்களில் சந்திரனாகிய இடதுகண், நீ பிறந்த பாண்டியர் குலமாகிய சந்திரனோடு தொடர்புடையது என்பதை எண்ணிப் பார்க்கவில்லை போலும்!

**விளக்கம்:**தாயே,நீ தோன்றியது தீயாதலால்,அதனைப் புதைக்கவில்லை. நீதோன்றியது சந்திரகுலமாதலின், அதனையும் புதைத்தல் கூடாது என்று எண்ணவில்லை போலும் என்றார். இறைவனின் நுதற்கண் தீவடிவு:

“ திருநுதற் கண்ணின் தீக்கொழுந்து ஓட”

சிதம்பரமும்மணிக்..17.

வேள்வியில் தோன்றியபோது அம்மை வயது மூன்று:

“......முலைமூன்று உடையதோர் பெண்
பிள்ளைஎன மூவொருபி ராயமொடு நின்றாள்”

திருவிளையாட..தடாதகைப்..19.

பாண்டியர் மரபு சந்திரமரபு:

“ அமுதவெண் மதியின் மரபை உன்னிஉனி’–

மீ.பி.தமிழ்.காப்பு.11.1.

**இலக்கணக்குறிப்பு:** ஓர்ந்திலையோ –அசைநிலைஓகாரம்.

54. அரும்பும்ஏர் நின்கைக்(கு) அணிபல அணிந்(து )உள்
அவாவொடு தாங்குமா தர்களை
விரும்புபு சுமக்கும் மெல்லிதழ்க் கமலம்
மெய்த்தவம் உடையன எனவே
இரும்புவி புகன்றால் அனையமா தர்கள்தம்
இருந்தவப் பெருமைஎன் புகல்கேன்
கரும்புநேர் மொழியார் பயில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** ஏர்அரும்பு நின் கை.

**பொழிப்புரை:**கரும்புச்சாறு ஒத்த இன்மொழி பேசும் மகளிர் பயிலும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அழகு அரும்பும் உன்கைகளுக்கு மிக்கஆவலுடன் அணிகள் பலவும் அணிவித்து ,உன்னைத்தாங்கும் திருமகள்,கலைமகள் ஆகிய இருவரையும் விரும்பித் தாங்கும் செந்தாமரை,வெண்டாமரை இரண்டும் மெய்யான தவமுடையன என்று உலகவர் சொல்வதால் அவ்விருவரது பெருந்தவப் பெருமையை எவ்வாறு கூறுவேன்.

**இலக்கணக் குறிப்பு:** விரும்புபு– செய்பு என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.புவி– இடவாகுபெயர்.

55 . சிலம்பகத்(து) உதித்த நின்அடி தற்சூழ்
சிலம்பகத்(து) உதித்தமா தரைவல்
வலம்பகப் பொலியும் முலையினாய் அங்கை

மலரகத்(து) உதித்தமா(து) என்ன
உலம்பகப் பொருதோள் அரன்முடிக் கொளாமை
உணர்ந்தன்றோ ஊடலில் தாக்கும்
கலம்பகம் உலாமுன் புனைதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** சிலம்பு அகம்=மலைக்கண்;சிலம்பாகிய கால்அணிகலனில். மாதரை=ஒன்பான் மகளிரை. வல் வலம்பக=சூதாடு கருவியின் வலிமை கெட. அங்கை மலரகத்து உதித்த மாது=அழகிய கையாகிய மலரில் தோன்றிய கங்கை.உலம் பக=கருங்கல் வலிமைகெட. கொளாமை=கொள்ளாத தன்மை.ஊடலில் தாக்கும்=உன்திருவடிகள் ஊடற்காலத்தில் தாக்கும்

**பொழிப்புரை:**கலம்பகம்,உலா முதலிய நூல்களைப் பெற்ற திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!உன் அழகிய கையில் தோன்றிய கங்கையாகிய பெண்ணை. கருங்கல்லின் வலிமையும் கெடஉள்ள தோள்களுடைய உன்கணவன் தன்தலைமேல் கொண்டது போல, மலைக்கண் தோன்றிய உனது கால்சிலம்பில் தோன்றிய ஒன்பான் மாதரையும் தன்தலையில் வைக்கவில்லை என்பதனால் அல்லவா,சூதாடுகருவியின் வலிமைகெடப் பொலியும் முலைகளை யுடையவளே,உன் ஊடற்காலத்தில் உன்கொழுநனை உன் திருவடிகள் தாக்கும்.

**விளக்கம்:** காளமேகப்புலவரின் ''திருவானைக்கா உலா''ப்போல,முன்நாளில் ''திருவானைக்கா கலம்பகம்'' என்றநூலும் இருந்ததை இச்செய்யுள் உணர்த்துகிறது.

அம்மை சிலம்பில் நவமாதர் தோன்றியது:

''—கிள்ளைமொழி
மங்கை சிலம்பில் மணிஒன் பதில்தோன்றும்
துங்க மடவார்'' — கந்தர்கலி.கண்ணி.87

நவமாதர்: ஒன்பான் மணிகளின் பெயர்கொண்ட மாணிக்கவல்லி முதலியோர்
அம்மையின் கைகளில் கங்கைதோன்றியது:

''சங்கரன் விழிகள் மூடும் தனதுகை திறக்கும் எல்லை
அங்குலி அவைஈ றைந்தும் அச்சத்தால் வியர்ப்புத் தோன்ற
மங்கைஅத் தன்மை காணூ மற்றவை விதிர்ப்பப் போந்து
கங்கைஓர் பத்தாய் யாண்டும் கடல்களில் செறிந்த வன்றே''.
கந்தபுரா.ததீசிஉத்தரப்படலம்.369.

**இலக்கணக் குறிப்பு:** சிலம்பு=ஒலி. மலைக்காட்டிலும்,கால்சிலம்பிலும் நடைமுறையில் இடையறா ஒலிகேட்கப்பெறுவதால் இந்தஇருவகைப்பொருளிலும்இது காரணப்பெயர். (ஆறுபடைவீடுகளுள் ஒன்றான பழமுதிர் சோலையில் அருவியாக இறங்கும் ஆறு, மலையாறு. ஆதலால் அதன்பெயர் ''சிலம்பாறு''என்று அது கி.பி1960களில் வழங்கப்பெற்றும்,அங்கு எழுதப்பெற்றும் இருந்தது. ஆனால்,அதன் உண்மைப் பொருளைச் சற்றும் அறியாத"அறிஞர்பெருமக்களால்'', கால்சிலம்பில் தோன்றிய ஆறுஎன்ற பொருளில்''நூபுரகங்கை'' என்று சொல்லிலும் எழுத்திலும் சிதைக்கப்

பெற்றுள்ளது.சிலம்பாறு என்பதில் சிலம்புஎன்பது மலையைக்குறிக்கும். ஆனால் இதில்சிலம்புஎன்பது கால்சிலம்பைக் குறிப்பதாக வலிந்து பொருள்கொண்டு, கால்சிலம்பைக்குறிக்கும் நூபுரம் என்ற சொல்லுடன்,ஆறு என்பதைக் கங்கை என்றாக்கி,நூபுரத்துடன்கங்கையை இணைத்து நூபுரகங்கை என்று பெயரிட்ட இதுபோன்ற சிதைப்புக்கொடுமைகள் நம்தமிழகத்தில் பல, பண்டுமுதல் நிகழ்ந்து வருவது கொடுமையிலும் கொடுமை.)

56 . பெரியவர்க்(கு) இடுக்கண் புரிவதை உணர்ந்து
பெரும்புகழ்த் தந்தைதன் மரபுஎன்(று)
அரியவர் சிந்தை ஆலயம் புகுவாய்
அயர்ந்தும்எண் ணாமல்வண் குறிஞ்சிக்(கு
உரியவன் கரத்துப் புகூஉக்கு ருகுப்பேர்
ஒருவனைக் கொன்றனை அழகே
கரியவன் பிரமன் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** சிந்தை ஆலயம்=மனக்கோயில்.கரியவன்= திருமால்.தந்தைதன் மரபு=தந்தை ஆகியமலை மரபு.அயர்ந்தும்= நல்லுணர்வு அழிந்தும்.குறிஞ்சிக்கு உரியவன்=முருகன்.புகூஉ=புகுந்து.குருகுப்பேர் ஒருவன்= கிரௌஞ்சம் என்ற மலைவடிவில் இருந்த அசுரன்–தாரகன்.

**பொழிப்புரை:**சான்றோர் மனக்கோயிலில் வாழ்கின்றவளே!திருமாலும், நான்முகனும் வலம் வந்து வணங்கும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அன்றில்பறவையின் பெயராகிய கிரவுஞ்சம் என்ற மாயமலையின் பெயருடைய தாரகாசுரன், மேலானவர்களுக்கெல்லாம் துன்பம் செய்வதை உணர்ந்து,அவன் உன்தந்தையின் மலைமரபினன் என்று கருணை காட்டாமல், வளமான குறிஞ்சித் தலைவனாகிய முருகப்பெருமானது திருக்கைகளில் நீ வேலாயுதமாகப் புகுந்துஅவனைக் கொன்றாய்.கருணை வடிவான உனக்கு இது அழகேயாகும்.

**விளக்கம்:** குருகுபெயர்க்குன்றம்கொன்றது:

''வருதிகிரிகோல்அவுணன் மார்பம் பிளந்து
குருகுபெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே'' சிலம்பு.குன்றக்குரவை.

''தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக வீர வடிவேல் விடுத்தோனே'' –கந்தர்கலி..கண்ணி94. சிவபிரானேஎன்பதை உணராதார் பராசத்தி தந்தது என்ற பொருளில் வழக்கப்படுத்துவர். வேல்தந்தவன் இறைவனே என்பார் கச்சியப்பர்.

'' எப்படைக்கும்,நாயகம் ஆவ தொருதனிச் சுடர்வேல்
நல்கியே மதலைகைக் கொடுத்தான்–கந்தபு..விடைபெறு..38. என்பதில், முன்னைச் செய்யுளொடு பொருந்த,''கொடுத்தான்''என்றதும் காணலாம்.

சிந்தை ஆலயம்: ''உள்ளம் பெருங்கோயில்'' ——திருமந்திரம்.1823.

''.. .. .. .. .. .. .. .வெம்மைவினைக்
கள்ளத் திருக்குழியில் காணலாம் கண்டீர்நம்
உள்ளத் திருக்கோயில் உள்'' —மதுரைக்கலம்பகம்.37.

**இலக்கணக் குறிப்பு:** புகூஉ—இன்னிசையளபெடை.

57.

நினைஉணர் மகள்தாய் மர(பு)என ஒருமான்
நெடுங்கைஏந் தினன்பெம்மான் அம்மான்
தனைஉணர் மகன்தாய் மர(பு)எனக் கிள்ளை
தன்னைநின் கையில்ஏந் தினையால்
வினைஉண ரார்சொல் நீயும்நின் பதியும்
விரும்புறும் ஆடல்என் உரைக்கேன்
கனைஉணர் அளிசூழ் பொழில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**கனை=ஒலி.உணர்=அனுபவித்தல்.அளி=வண்டு.நினைஉணர்பெம்மான்=உன்இயல்பு உணர்ந்த சிவபிரான். மகள் தாய் மரபுஎன=நீ தனக்கு மகள், தாய் முறை என்று. ஒருமான்=ஒப்பற்ற மகத்துவம் வாய்ந்த.நெடுங்கை=பெருமை பொருந்திய ஒருபக்கம்—இடது பக்கம்.அம்மான்தனை=மாமன்—கணவன்ஆகிய அவனை.மகன் தாய் மரபுஎன=தனக்கு மகன்,தாய் முறைஎன.உணர்=உணர்ந்து. கிள்ளை=கிள்+ஐ= (கணவனாய்)நெருக்கமான அத்தலைவனை.கையில்=பக்கத்தில்(வலது பக்கத்தில்). வினையுணரார் =உம் இருவர் செயலையும்உணராதவர்.விரும்புறு=விரும்பும்கருத்தை—விருப்பத்தை. ஆடல்= திருவிளையாடல். என்உரைக்கேன்=எங்ஙனம் எடுத்து இயம்புவேன்.

**பொழிப்புரை:**தேனினை ஒலித்து அனுபவிக்கும் வண்டுகள் கொண்ட சோலைகளையுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்இயல்பு உணர்ந்த சிவபிரான்,நீ ஒருவகையில் தனக்கு மகள்முறைமை,தாய்முறைமை உடையவள் என்று,ஒப்பற்ற மகத்துவம் வாய்ந்த தனது பெருமைபொருந்திய திருமேனியின் இடதுபக்கம் ஏந்தினான்.உன்மாமன்—கணவன் ஆகிய அவன்உனக்கு ஒருவகையில் மகன்முறைமை,தாய்முறைமை உடையவன்என்று, உனக்குமிக நெருக்கமானஅவன் உன் கணவன் என்பதால்,நீஉனது பெருமை பொருந்திய திருமேனியின் வலதுபக்கம் ஏந்தினாய்.உம்இருவர் செயலின் உண்மைத்தன்மையை உணராதவர் சொற்படியே சொல்வதன்றி ,உம் விருப்பத்தை நான்மட்டும்எவ்வாறு உரைப்பேன்.

**விளக்கம்:** பொருளும்ஆற்றலுமாக விளங்கும் அப்பனும் அம்மையும் ஒரேதிருமேனியில் வலம்இடமாகப் பொலிவதற்குத் தற்குறிப்பேற்றமாகக் காரணம் கூறினார்.
அம்மை தன்கையில் கிளியினை ஏந்தியுள்ள திருக்கோலத்தை எண்ணி,கிளி என்று பொருள்தரும் ''கிள்ளை'' என்றசொல்லை,கிள்+ஐ என்று பிரித்து நெருக்கமான தலைவன் என்று பொருள்கொள்ளும் நயம் புலப்படக்கூறினார். படைத்தல்முதலியன செய்ய, இறைவன் சத்தியைத் தோற்றுவித்தபோது; இறைவன் தாய்,சத்தி மகள் முறையிலும்,பின்னர் சத்தி சதாசிவதத்துவத்தைத் தோற்றுவித்த போது; சதாசிவன்

மகன், சத்தி தாய் முறையிலும் ஆகின்றனர். அப்பன்,அம்மை இருவரிடையே இத்தகு உறவுமுறை அமைவது பற்றிய விரிவான செய்தியைச் செய்யுள் எண் 34 இல் காண்க.

**இலக்கணக் குறிப்பு:** உணரார்– வினையாலணையும் பெயர். உரைக்கேன்–தன்மைஒருமை வினைமுற்று.மகள் தாய்,மகன் தாய்–எண்ணும்மைத்தொகைகள்.

58 .

பொலிதரப் பசந்து நீர்மழை எங்கும்
பொழியுமே புயல்அது போல
மலிதரப் பசந்து நீயும்வண் கருணை
மழைபொழி குவைகொடு வினையால்
மெலிதரல் உற்ற எனைஒழித் திடுவான்
விதிஎவன் விமலமெய்ச் சுடரே
கலிதரு துயர்சா ராத்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கலி= கேடு. பசந்து = (வெண்ணிறம்)மிகவும்மாறி.மெலிதரல்= வருந்துதல். விதி=ஆணை–அருளாணை .எவன்=யாது.

**பொழிப்புரை:**கேடுதரும் துன்பம் சற்றும் சாராத திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தனதுவெண்ணிறம் மிகவும் மாறிக் கருநிறம் பெற்று மழை நீரினை எவ்விடத்தும் பொழியும் மேகம் போல,நீ உனது செந்நிறம் மிகவும் மாறிப் பசுமை நிறம் பெற்று வளமான கருணைமழை எங்கும்எப்போதும் பொழிவாய். குற்றமற்ற ஞானவடிவான சுடரே!கொடிய வினையால் மனம் வருந்தும் என்னை,உன் அருளாணை அக்கருணை மழையிலிருந்து நீக்கக் காரணம் என்ன?என்னை உன் கருணையிலிருந்து நீக்காது அருள்க.

**விளக்கம்:** வெண்மேகம் கருநிறம்கொண்டு எல்லார்க்கும்மழை பொழிகிறது. அதுபோல,நீ உன்செந்நிறம் மாறிப் பசுமை நிறம்கொண்டு எல்லார்க்கும் அருள்மழை பொழிகிறாய். அதிலிருந்து என்னை நீக்காது அருள்கஎன்றார்.படிப்பவர்பால் இது ‘‘முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்து ’’என்றதிருவெம்பாவைப் பாடலை நினைவூட்டும்.

**இலக்கணக் குறிப்பு:** ஒழித்திடுவான்–வான் ஈற்று வினைஎச்சம்.
இச்செய்யுள் உவமை அணி.

59 .

நறையிலா மலரோ நயம்இலா மொழியோ
நயனம்இல் லாதவன் முகமோ
பொறையிலாத் தவமோ மக(வு)இலா மனையோ
புனல்இலா ஓடையோ நீதி
முறையிலா அரசோ மதியிலா இரவோ
மூடனேன் பத்தியில் பாடல்
கறையிலா வளமை மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கறை இலா=குற்றம் இல்லாத.நறை =தேன்,நறுமணம்.நயம்=இன்பம். மழவு= குழந்தை.பத்தி=பத்திமை .

**பொழிப்புரை:** குற்றம்இல்லாத வளமைமிக்க திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அறிவும்,பத்திமையும் இல்லாத என்பாடல்கள்;தேன்\மணம்இல்லாத மலரா?இன்பம் தராத சொல்லா?கண்இல்லாத முகமா?பொறுமை இல்லாத தவமா?குழந்தை இல்லாத வீடா?நீர் இல்லாத ஓடையா?நீதிமுறைமை இல்லாதஅரசனா?நிலவு இல்லாத இரவா? நீ எனக்கு அருளாமைக்குக் காரணம்யாது ?அருள்க.

**விளக்கம்:** பாடலுக்கு அறிவுநுட்பமும் பத்திமையுமே உயிர் என்றார்.

தவவாழ்வுக்குப் பொறுமை:

''உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
அற்றே தவத்துக்கு உரு.'' –திருக்குறள்.216.

மனைக்கு மழவு:

''படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும் ..... .
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைதாம் வாழும் நாளே''. –புறம்188.

''சந்திரன் இல்லா வானம் தாமரை இல்லாப் பொய்கை
மந்திரி இல்லா வேந்தன் மதகரி இல்லாச் சேனை
சுந்தரப் புலவோர் இல்லாத் தொல்சபை சுதர்இல் வாழ்வு
தந்திகள் இல்லா வீணை தனமிலா மங்கை போலாம்''.

**இலக்கணக் குறிப்பு:** இலா,இலா,இலா,இலா–இடைக்குறையாய் வந்த ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். மலரோ,மொழியோ,முகமோ,தவமோ,மனையோ, ஓடையோ,அரசோ,இரவோ– ஈற்று ஓகாரங்கள் வினாப்பொருளன.இச்செய்யுள் பல்பொருள்உவமை வந்த எடுத்துக் காட்டு உவமை அணி.

60 .

குணமிலேன் மொழிபா நலம்இல(து) எனினும்
குறித்ததை ஏற்(று)அருள் செய்ய
இணர்மலி குழால்நிற் கேதகும் சிலம்பி
இயற்றுநூல் பந்தரும் உவந்து
புணர்அருள் புரிந்தான் நின்பதி அந்தப்
புராணம்நீ ஓர்ந்தனை யன்றே
கணம்மலி முனிவர் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** மலிமுனிவர்கணம்=மிக்க முனிவர் கூட்டம்.குறித்தது=பாடலின் உட்கருத்து. செய்ய=சிறந்த.மலி இணர் குழால்=மிக்க பூங்கொத்துச் சூடிய கூந்தல் உடையவளே.அருள் செய்ய நிற்கேதகும்= அருள்புரிவது சிறந்த உனக்கே தக்கதாகும்.

**பொழிப்புரை:** மிக்க முனிவர் கூட்டம் வலம்வரும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! சிலந்திப்பூச்சி நூற்று இட்ட நூற்பந்தரையும் உவந்து ஏற்றுத் தக்கஅருள் புரிந்தான் உன் கொழுநன் என்ற அந்தப் புராணச்செய்தி நீ அறிவாயல்லவா?எனவே நான் நற்குணம் இல்லாதவனாயினும் என்பாடல்கள் நலமில்லாதன என்றாலும் என்நோக்கத்தை–உட்கருத்தை ஏற்று,பூங்கொத்துகளைச் சூடிய கூந்தல் உடையவளே எனக்கு அருள்வது என்பது சிறந்த உனக்கே தக்கதாகும்.

**விளக்கம்:** சிலம்பிநூல் இழிந்ததேயாயினும் அதனால் பந்தர் இழைத்த நோக்கம், சருகு முதலியன பெருமான்மீது விழலாகாது என்ற உயர்நோக்கம் காரணமாக, அச்சிலம்பியை மறுமையில் கோச்செங்கட் சோழனாக்கினான் இறைவன் என்பது தலபுராணம்.
புணர்அருளாவது: தனக்குப் பந்தரிட்டு நிழற்றிய சிலம்பியை ,மறுமையில் செங்கணான்ஆக்கி, அவன்மீது வெயில்படாது மறைக்கவும்,வருந்திய குடிமறைக்கவும் செய்யும் விண்பொரு வியன்குடைக்கீழ் இருந்துஅரசாளும் கோச்செங்கட்சோழனாக்கியது ஆகும்.
சிலம்பியே கோச்செங்கட் சோழன்:

> "செங்கண் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்
> அங்கண் கருணை பெரிது ஆயவனே ." திருமுறை.2.திருவானைக்கா.5.
> "ஞானம் உடைய ஒருசிலந்தி நம்பன் செம்பொன் திருமுடிமேல்
> கானல் விரவும் சருகுஉதிரா வண்ணம் கலந்த வாய்நூலால்
> மேல்நல் திருமேல் கட்டிஎன விரிந்து செறியப் புரிந்துளதால் ."
> –பெரியபுராணம்.4204.
> "மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்துமகிழ்
> அக்கமல வதிவயிற்றில் அணிமகவாய் வந்தடைய"
> –பெரியபுராணம்.4209.
> "என்கோச் செங்கண்ணனோஎன்றாள் ." –பெரியபுராணம்.4211.
>
> "சிலம்பி வாயின்நூல் இழைத்திடு பந்தரில் செங்கண் மால்தொழ வைகும்
> அலம்பு தெண்டிரைப் பொன்னிஅம் தண்துறை."
> திருவிளையாட..கால்மாறிஆடிய..4.

**இலக்கணக் குறிப்பு:** குழால் –விளி.பந்தர்–கடைப்போலி.

61 .

வரிவிழிக்(கு) உடைந்த மானையும் நுதற்கு
மானுறாப் பிறையையும் அல்குற்(கு)
இரிதரும் படவெவ் அரவையும் மருங்கிற்(கு)
இணைதராத் துடியையும் சுமந்தான்
துரி(சு)அறு வனப்பார் நின்உறுப் பினுக்குத்
தோற்றலும் விசேடம்என்(று) உணர்ந்தே

கரியகண் டத்தோன் அருள்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை :** அருள்=அருளேவடிவான. துரிசு=குற்றம். வனப்பு= பேரழகு. வரி= செவ்வரி. உடைந்த= தோற்றோடிய=இரிதரும். மானுறா=ஒப்பாகாத. இணைதரா= இணையாகாத.

**பொழிப்புரை:** அருளே வடிவான திருவானைக்கா அகிலாண்டநாயகியே! நஞ்சுண்டதால் கருநிறம் பெற்ற திருக்கழுத்தனாகிய சிவபிரான், குற்றமற்ற பேரழகுடைய உன் உறுப்புகட்குத் தோற்பதும்கூட, சிறப்புடையதே ஆகும் என்று உணர்ந்ததால், உன் செவ்வரி படர்ந்த விழிகட்குத் தோற்றோடிய மானையும், நெற்றிக்கு ஒப்பாகாத பிறையையும், அல்குலுக்குத் தோற்றுஓடிய படஅரவையும், இடுப்பிற்கு ஒப்பாகாத உடுக்கையையும் தன்பால் தாங்கியுள்ளான்

**விளக்கம்:** பேராற்றல் பெற்றவரிடம் தோற்பதும் ஒரு சிறப்பே என்பதை''நாசம் வந்துற்ற போது நல்லதோர் பகையைப் பெற்றேன்''என்பதும் உணர்த்தும்.

அம்மையின் வடிவு அருளே: ''அருளது சத்தியாகும்'' —சித்தி..239.

**இலக்கணக் குறிப்பு:** மானையும், பிறையையும், அரவையும், துடியையும்—உம்மைகள் எண்ணுப் பொருளன. தோற்றலும்—இழிவுசிறப்பும்மை. இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

62. பொறைஅருள் அடக்கம் அன்(பு)உப சாரம்
பொலியும்ஆ சாரம்நல் வாய்மை
அறைதரும் இன்ன குறையுளேன் எனினும்
அடிமையே நினக்கியான் உறுப்புக்
குறையுடை யாரும் மக்கள்என்(று) எடுத்துக்
கூறுவர் உலகர்நீ உணர்வாய்
கறையற விளங்கும் அருள்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** நினக்கியான்=நினக்கு+யான். எடுத்துக்கூறுவர்=புகழ்வர்

**பொழிப்புரை:** குற்றமற விளங்கும் திருவருள் பாலிக்கும்திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பொறுமை, அருள், அடக்கம், அன்பு, உபசாரம், ஆசாரம், நல்லவாய்மை என்று கூறப் பெறுவனவற்றுள் குறையுள்ளவனாய் நான் இருப்பினும் உன் அடிமையே. உறுப்பால் குறையுடைய ஒருவனையும் உலகமக்கள் , என்மக்கள் என்றே புகழ்வர் என்பதை நீ நன்கு அறிவாய் . எனவே முன்கூறியவற்றுள் நான் குறையுடையவ னாயினும் இவ்வடிமையை ஏற்று எடுத்துக் காத்தருள்க.

**விளக்கம்:** கறையற விளங்கும் அருள்:

ஒருபாற்கோடாமல், மாரிபோலவும், வெயில்போலவும், காற்றுப்போலவும் எல்லார் மாட்டும் ஒத்த அருளுடைமை.

''எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்ற சிவமே'' — திருவருட்பா.

**இலக்கணக் குறிப்பு:** பொறை அருள்.. ...வாய்மை—உம்மைத்தொகைகள். நினக்கியான் —கி—குற்றியலிகரம்.இதன் காரணமாக இதுசெய்க என்பதால் இச்செய்யுள் ஏதுவணி.

63 . உரைசெய்வெண் ணாவல் நிழல்உறை பெருமான்
ஓங்(கு)அருள் முறைசெலுத் தியகோன்
விரைசெய்பூங் கொன்றை யவன்என நீயும்
விருப்பொடு செலுத்திடல் வேண்டும்
புரைசெய்என் பாலே மற்றது செலுத்தில்
பொருப்பின்மேல் இடுசுடர் போலாம்
கரைசெயா வளங்கள் மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரைசெயா=எல்லையற்ற. உரை=புகழ். முறை =ஒழுங்கு.புரை=குற்றம் பொருப்பு=மலை.

**பொழிப்புரை:** எல்லையற்ற வளங்கள் மலிந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! புகழ்பெற்ற வெண்ணாவல் நிழலில் எழுந்தருளிய இப்பேரரசன்தமது மேலான அருளை ஒழுங்குறச் செலுத்தியவன் ஆவான் .மணக்கும் பொலிவு உடைய கொன்றை சூடிய அவனைப் போல் நீயும் விருப்புடன் அருள் புரிய வேண்டும்.குற்றம் செய்யும் எனக்கு நீ அருள் புரிந்தால் உன்புகழ் குன்றின் மேல் இட்ட விளக்குப்போல் எங்கும் பரவும். அருள்க.

**விளக்கம்:** கொன்றை, சிவபெருமானுக்கு உகந்த மலர்
'' கண்ணி கார்நறும் கொன்றை காமர்
வண்ண மார்பில் தாரும் கொன்றை'' — புறம்.கடவுள்..

''குன்றின்மேல் இட்ட விளக்கு''— — பழமொழி

**இலக்கணக் குறிப்பு:** நீயும்—இறந்தது தழுவிய எச்சவும்மை.ஓங்குஅருள்—வினைத்தொகை. இச்செய்யுள் உவமை அணி.

64 . புண்ணிய வெள்ளை நாவலோன் ஆரம்
பூண்டவன் எனும்பெயர் புனைந்தான்
தண்ணிய குணத்து நீயும்என் பாடல்
தழுவுபு பூணுவை யாயின்
அண்ணிய பாடல் பூண்டவள் எனும்ஓர்
அரும்பெயர் நினக்கும்உண் டாமே
கண்ணிய வரங்கள் தருதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கண்ணிய=கருதிய.புண்ணிய=புனிதமான.வெள்ளை நாவலோன்= வெண்ணாவல் நிழல் அமர்ந்த பெருமான்.ஆரம்பூண்டவன்=உறந்தைச் சோழன் அணிந்திருந்த முத்துமாலையைத் தான்அணிந்தவன்.தழுவுபு=ஏற்று.அண்ணிய=மிக இனிக்கும்.அரும்புகழ்=பெறுதற்கரிய புகழ்.

**பொழிப்புரை:** அடியவர் கருதும் வரங்களை எல்லாம் அருளும் திருவானைக்கா அகிலாண்டநாயகியே! புனிதமான வெண்ணாவல் நிழல் அமர்ந்த பெருமான், காவிரியில் நீராடிய உறந்தைச் சோழன் கழுத்திலணிந்திருந்த முத்துமாலையைத் திருமஞ்சனக் குடத்திற்குள் வரச்செய்து திருமுழுக்கில் தான் பூண்டவன் என்று பெயர்பெற்றான். அருட்குணத்து நீயும்என் மிகஇனிக்கும் பாடலைஏற்று அணியின் இப்பாலை ஏற்று அருள் புரிந்தவள் என்ற பெறுதற்கரியபுகழ் உனக்கும் உண்டாகும் அல்லவா? எனவே என்பாடலை அணிந்து அருள்க.

**விளக்கம்:** ''கண்ணிய''என்பதற்கு,''வேண்ட முழுதும் தருவோய் நீ''என்பதற்கு ஏற்ப ''அடியவர்கருதும்'' என்று,மட்டுமன்றி''வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே''என்பதற்கு ஏற்ப'' நீ தரக்கருதிய'' எனினும்அமையும். விரும்பியது கொள்க ''என்னதோஇங்கு அதிகாரம்'' என்பதையும் எண்ணுக.

அண்ணல் சோழனதுஆரம் ஏந்தியது:

'' பாரும் விண்ணும் கைதொழப் பாயும் கங்கை செஞ்சடை
ஆரம் நீரொ டேந்தினான் ஆனைக் காவு சேர்மினே''–

திருமு. 3. திருவானைக்கா. 7.

''தாரம் ஆகிய பொன்னித் தண்துறை ஆடி வீழ்த்தும்
நீரில் நின்னடி போற்றி நின்மலா கொள்என ஆங்கே
ஆரம் கொண்டஎம் ஆனைக்கா வுடைஆதியை

திருமு. 7. திருவானைக்கா. 7.

**இலக்கணக் குறிப்பு:** நீயும்,நினக்கும்– இறந்தது தழுவிய எச்சவும்மைகள். உண்டாமே– ஏகாரம் அசைநிலை.

65.

தழைசெய்வெண் ணாவல் நறுநிழல் உறைவான்
தனிமுதல் அவன்ஒரு பாகத்(து)
உழைசெய்ஒண் விழியாய் உறைகுவை நீமற்(று)
உன்அடி நிழலில்எஞ் ஞான்றும்
விழைசெய்யான் உறைந்திடப் புரிந்திடின் அதனால்
மிக்கபுண் ணியம்நினக்(கு) உண்டே
கழைசெய்பூங் கழனி பொலிதிரு வானைக்
காஅகி லாண்டநா கியே.

**குறிப்புரை:**உழை=இடம்.செய்=செம்மை .கழை=கரும்பு.

**பொழிப்புரை:**மென்மையான நன்செய் நிலத்தில் கரும்புகள் விளைந்து பொலியும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!தழைத்த சிறந்த வெண்ணாவல் மரத்து மணக்கும் நிழலில் எழுந்தருளியுள்ள தன்னேரில்லா முதல்வனின் ஒப்பற்ற இடப்பாகத்தில் ஒளிபொருந்திய செவ்வரிபடர்ந்த கண்களையுடைய நீ உறைகிறாய். உன்திருவடிநிழலில் என்னை எக்காலத்தும் வாழச்செய்தால் உனக்கு மிக்கபுண்ணியம் உண்டென்பதில் ஐயமில்லை.அருள்க.

**இலக்கணக் குறிப்பு :**வெண்ணாவல்– வெண்மை–இனம் விலக்கிய அடைமொழி. உறைவான்– வினையாலணையும் பெயர்.உண்டடே –தேற்றேகாரம்.

66. பிரம்படி பட்டும் கல்லடி ஏற்றும்
பிறைபொரு வில்லடி கொண்டும்
நிரம்புற அருள்வான் ஓங்குவெண் ணாவல்
நிழல்உறை பவன்அடி யார்பால்
உரம்பயில் அவன்போல் நீஅவ்வா(று) ஏற்(று)இன்(பு)
உதவுநள் அல்லள்மெல் லியள்நீ
கரம்(பு)அறு கழனி மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரம்பு=சாகுபடிக்கு உதவாநிலம்.பிரம்படிபட்டது அரிமர்த்தன பாண்டியனிடம்.கல்லடி ஏற்றது சாக்கியநாயனாரிடம்.வில்லடி கொண்டது விசயனிடம். உரம்=வலிமை .இன்பு=இன்பம். உதவுநள்=உதவுகின்றவள்.

**பொழிப்புரை:** சாகுபடிக்கு உதவாத நிலம் என்பது ஏதுமின்றி நன்செய் மட்டுமே மலிந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அரிமர்த்த பாண்டியனிடம் பிரம்படி பட்டும்,சாக்கிய நாயனாரிடம் கல்லெறியுண்டும்,பிறைஒப்ப வளைந்த வில்லால் விசயனிடம் அடிகொண்டும், அவற்றால் சிறிதும் மனம் நோகாது அவர்கட்கெல்லாம் அருள்புரிந்தவன் உயர்ந்த வெண்ணாவல் அண்ணல். அடியார்க்கு அருளி மகிழ்வதில் வலிமையுடன் விளங்கும் அவன்போல், இன்னல்களை ஏற்று அருளும்அளவு வலிமை உடையவள் அல்லை நீ.ஏனெனில் மெல்லியள் நீ.

**விளக்கம்:** சிவபிரான்;பிரம்படி,கல்லெறி,வில்லடி பட்டது:

‘‘வில்லால் அடிக்கச் செருப்பா உதைக்க வெகுண்டுஒருவன்
கல்லால் எறியப் பிரம்பால் அடிக்கஇக் காசினியில்
அல்லார் பொழில்தில்லை அம்பல வாணர்க்கோர் அன்னைபிதா
இல்லாத தாழ்வல்ல வோஇங்ங னேஎளி தானதுவே

_தனிப்பாடல்.காளமேகப்புலவர்.

(தட்டிக்கேட்க,தடுக்கப் பெற்றோர் இல்லாக்குறையே சிவனுக்கு இவைநேரக் காரணம் என்றது காளமேகப்புலவரின் வஞ்சப்புகழ்ச்சி.)

நம்மாலையில் வரும்இம்மூன்று செய்திகளையும்;திருவிளையாடற்புராணம், பெரிய புராணம்,மாபாரதம் ஆகியவற்றில் விரிவாகக் காணலாம்.

**இலக்கணக் குறிப்பு:** பிறை பொரு வில்–பொரு–உவம உருபு.

67. பற்பலர் அறியப் பித்தன்என்(று) எள்ளிப்
பனவபோ என்றுளார் தமையும்
பொற்(பு)அலர் பெருமான் விடாம்என ஆண்டு
புரந்தனன் இங்ஙனம் இன்றி

வெற்பலர் மருந்தே துதித்துவா என்னும்
வினையினேன் தனைவிட விதிஎன்
கற்(பு)அலர் நந்த வனத்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கற்புஅலர் =முல்லைமலர்.பித்தன் என்று எள்ளிப் பனவ போ என்றவர் சுந்தரர். பனவ=மறையவனே.பொற்புஅலர்= பொலிவுமலர்ந்த.விடாம்= விடமாட்டோம்.மலைதரும்மருந்து= இமவான் மகளாகிய அம்மை—மலைமகள்.

**பொழிப்புரை:**முல்லைமலர்கள் மலர்ந்த நந்தவனங்கள் கொண்ட திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! அறங்கூறவையில் இருந்தஅனைவரும் அறிய,''பித்தனோ'' என்று இகழ்ந்தும்''மறையவனேபோ''என்றும்கூறிய சுந்தரரையும்,பொலிவு விரியும் சிவபெருமான்''உன்னைவிடமாட்டோம்''என்று தடுத்தாண்டுகொண்டான்.நான் சுந்தரர் போலன்றி உன்னை''மலைதரும் அருமை மருந்தே''என்று துதித்து,அருள்புரிய வேண்டுகின்றவன்.என்னை நீ கைவிட என் தலைவிதி என்னே!கைவிடாது அருள்க.

**விளக்கம்:** வெற்பு அலர் மருந்து:

''வெம்பாசம் மருவிய பிணிகெட மலைதரும் அருமை மருந்தே''

மீ.பி.தமிழ்.செங்கீரை.9.

வெம்பாசம்—பிறவிகள்தோறும் உயிரைப்பற்றிய மலப்பிணி.மருவிய பிணி—ஒவ்வொரு பிறப்பிலும் உடலைப்பற்றிய பிணி.எனவே அம்மையாகிய இம்மருந்து உடற்பிணியும், உயிர்ப்பிணியும்(மலம்)தீர்ப்பது ஆகும்.

**இலக்கணக் குறிப்பு:** விடாம்—உயர்வு கருதிய தன்மைப்பன்மை வினைமுற்று.என்—எவன்என்கிற வினா வினைக்குறிப்பின் விகாரவடிவு.அலர்மருந்து—வினைத்தொகை.

68. தேவியோ(டு) இனிது வந்தருள் புரிந்தான்
சிவனடி யார்க்கென்ப தன்றி
ஆவிநேர் கொழுந னோடுவந்(து) ஆண்டாள்
அம்மைஎன் பார்இலை அன்னே
மேவிய சீர்த்தி நினக்(கு)உறா விதம்என்
விளம்பிட வேண்டும்நா யேற்குக்
காவிஆர் தடம்சூழ் தருதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காவி=கருங்குவளை மலர். உறா விதம்= வந்துசேரா விதம் .

**பொழிப்புரை:** கருங்குவளை மலர்கள் பூத்த குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! சிவனடியார்க்கருளும் போது தன்மனைவியோடு வந்தருளினான் சிவபிரான் என்பார்களே தவிர,உயிர்ஒத்த தன் கணவனுடன்வந்து நீஅருளினாய் என்பார் யாருமில்லை.அருள்வதில் வரும் புகழில் உன்னை முன்நிறுத்திக் கூறாமைக்குக் காரணம் என்ன?தாயே!நாயேற்குக் கூறியருள்க

**விளக்கம்:** உண்மையில்,கோயில் கட்டியவன் கொற்றனேயாயினும்,''அரசன் கட்டிய கோயில்''என்று ஏவுதற் கருத்தாவையே குறிப்பது போல''நாடனைத்தும் நங்கையினால் செய்தளிக்கும் நாயகன்''சிவனேயாதலின்,அவனையே குறிப்பர்.

திருநீலகண்டர்,இளையான்குடி மாறர் ஆகியவர்களுக்குப் பெருமான், பெருமாட்டியுடன் காட்சியருளினான் சிறுத்தொண்டருக்கு;அம்மை,முருகன் ஆகியவருடன் காட்சியருளினான்.காரணம் : ''மகவரிந்து ஊட்டும் அருஞ்செயலில் சிறுத்தொண்டர்,திருவெண்காட்டு நங்கை, சந்தனத்தாதியார் ஆகிய மூவருடன்கூட,மகன்–சிறுவன் சீராளன் பங்கும் மிகப்பெரியது. எனவே,சீராளனாகிய மகனைப் பெற்ற அந்த இல்லறத்தார்க்குத் தானும்தன் பங்கினளாகிய மலைமகள், முருகன் என்று அதேநிலையில் தமது குடும்பத்துடன் காட்சியருளினான்'' என்பார்கள் நம் வணக்கத்திற்குரிய ''தமிழ்மாமுனிவர்''தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்

69. அடியவர் குறிப்(பு)ஓர்ந்(து) ஆண்பனை காய்க்க
ஆற்(று)எதிர் செல்லஏ(டு) என்பின்
பொடிமட வரல்ஆ கக்கராம் விழுங்கும்
பொருள்தரச் செய்தனன் பரமன்
கொடியனேன் குறிப்(பு)ஓர்ந்(து) உன்அடிக்(கு) அன்பு
கொளப்புரி வதும்உனக்(கு) அரிதோ
கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** குறிப்பு=உள்ளக்கருத்து. திருஞான சம்பந்தர் குறிப்பின்படி;ஆண்பனை காய்க்க,வைகையில் ஏடுஎதிர்ஏற,என்பினைப் பூம்பாவை ஆக்க;முறையே திருஓத்தூர்,திருவேடகம், திருமயிலை ஆகிய இடங்களில் அருளினான். சுந்தரர் குறிப்பின்படி அவிநாசியில் ,முதலை விழுங்கிய சிறுவனை அது கக்கச் செய்தான்.அரிதோ= அரியதன்று–எளியதே ஆகும்.

**பொழிப்புரை:** மணமலர்க் குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தன்அடியவர்க்காகப் பரமன் ஆண்பனை காய்க்கவும்,ஏடு வைகையில் எதிர் ஏறவும், எலும்புத் தூளினைப் பூம்பாவையாக ஆக்கவும் திருஞான சம்பந்தர்உளக்குறிப்பு உணர்ந்தும்,முதலை உண்டபாலனை ,சுந்தரர்க்காக மீட்டுத்தந்தும் அருளினான். தாயே !நீ கொடியவனாகிய என் உள்ளக்குறிப்புணர்ந்து என்னை உன்திருவடிகட்கு அன்பு பூணுமாறு செய்வது உனக்கு அரியதன்று,எளியதேயாகும்,எனக்கு அருள்க.

**இலக்கணக் குறிப்பு:** அரியதோ–ஓகாரம்எதிர்மறை.கடி–பலகுணம்தழுவிய உரிச்சொல்.

70 . அயன்அரி குலிசன் அமரர்உள் நடுங்க
அடர்த்(து)எழும் கொடுவிடம் வாங்கி
நயனம்மூன்(று) உடையான் உண்டனன் முன்னே
நங்கைநின் பவளவாய் அமிர்தப்
பயன்உணர்ந் தன்றோ அலன்எனின் அனைய

பரமன்எவ் வா(று)உணத் துணிவான்
கயல்மலர்த் தடங்கள் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை**: கயல்மலர்= கெண்டைமீன்களும்மலர்களும். தடம்=குளம். குலிசன்= குலிசம்என்ற ஆயுதம் ஏந்திய தேவேந்திரன். அடர்த்து=செறிந்து. நயனம்= கண். பயன் முன்னே உணர்ந்தன்றோ உண்டனன்.

**பொழிப்புரை:** கெண்டைமீன்களும் மலர்களும் நிறைந்த குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்டநாயகியே!நான்முகன்,திருமால்,இந்திரன் மற்றுமுள தேவர்கள் அனைவரும் மனம்நடுங்கச் செறிந்து எழுந்த கொடியநஞ்சினை, முக்கண்ணன்ஆகிய சிவபெருமான்,தன்கையில் ஏந்தி உண்டான். உன்பவளம் ஒத்த இதழ் அமுதம் உண்டதன்பயன் சாவாமை என்பதை முன்னரே உணர்ந்ததாலன்றோ நஞ்சினைத் துணிந்து உண்டான்.

**விளக்கம் :** பெருமான் நஞ்சுஉண்டது:

“ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்து அருள் செய்குவாய்”—சிலம்பு.
“விடமுண்ட கண்டன்” – கோளறுபதிகம்.

**இலக்கணக் குறிப்பு:** அயன் அரி குலிசன் அமரர்கள்—எண்ணும்மைத்தொகைகள். இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

71 . ஒளிமிகு சம்பு லிங்கநா யகன்போல்
உடையையால் நுதல்விழி நீயும்
அளிமிகும் அனையார் மாரனை எரித்தார்
யாரைநீ எரித்தனை அம்மா
விளிமிகு நாயேன் வினையினை எரித்தால்
இரும்புகழ் அவரினும் நினக்(கு)ஆம்
களிமிகும் அமரர் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை**: நுதல்விழி நீயும் உடையையால். அனையார் =அச்சிவனார். விளிமிகு= ஓயாது உன்னை அழைக்கும். இரும்புகழ்=பெரும்புகழ்

**பொழிப்புரை:** களிப்பு மிகுதியுடன் தேவர்கள் வலம்வரும்திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!அருள்ஒளி மிக்க வெண்ணாவல்ஈசர் போல நீயும் முக்கண்கள் உடையவள். கருணைமிக்க அவர்,மன்மதனைத் தன் நுதல்விழியால் எரித்தார். நீஉன் நுதல்விழியால் யாரை எரித்தாய்?இதுவரை நீ யாரையும் எரிக்கவில்லை. எனினும், தன் தலைவனை இடைவிடாது குரைத்து அழைக்கின்ற நாய்போல் உன்னை அழைக்கும் என் இருவினைகளை எரித்தால்,மன்மதன் உருவை எரித்த அவரினும் உனக்குப் பெரும்புகழ் உண்டாகும். இங்ஙனம் அருள்க.

**விளக்கம்**: உருவினை எரிப்பதைக்காட்டிலும்,அருவமானதை எரிப்பது அருஞ்செயல். மன்மதன் உருவை அப்பன் எரித்த புகழினும்,அருவமான என் வினைப்பயனை நீஎரித்தழிப்பின் உனக்குப்பெரும் புகழ் உண்டு என்றார்.
அம்மைக்கும் முக்கண்:

> ''திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப்
> பெருமகள் நுதற்க ணாகப் பெற்றுவான் செல்வம் கல்வி
> அருமை(வீடு) அளிப்பாள் ..'' திருவிளையா.நான்மாடக்கூ.2.

'''முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒருதீங்கு இல்லையே'' அபிராமிஅந்..பயன்.
விளிமிகு நாயேன்:

> ''பவன்எனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால்
> இவன்எனை அழைப்பு ஒழியான் என்று எதிர்ப்படுமே'
> திருமு.4.தனித்திருவிருத்தம்.9

**இலக்கணக் குறிப்பு:** மிகுநாயேன்–வினைத்தொகை.அவரினும்–உயர்வுசிறப்பும்மை.

72. நெடுவலி கொடுமா மேருவில் பிடித்தாய்
நீஅ:.(து) உணர்குவன் யானும்
அடுதிறல் சூலி பிடித்தனன் என்பார்
அவனியுள் சிலர்கருத்(து) என்னோ
இடு(கு)இடை நீயும் அவனும்வே றல்லீர்
என்பதை உணர்ந்தனர் கொல்லோ
கடுவிழி மடவார் பயில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை**: கடுவிழி=கூரிய பார்வை.நெடுவலிமேரு கொடுவில் =நீண்டவலியபெரிய மேருமலை யாகிய வளைந்தவில்.யானும் உணர்குவன்=வில்ஏந்தியது இடது கை–இடது பக்கத்தவளாகிய நீயே வில்ஏந்தினாய் என்பதை நானும் உணர்வேன். அடுதிறல்=அழிக்கும் ஆற்றல்.சூலி=சூலம் ஏந்திய சிவபிரான்.அவனி= உலகம். இடுகுஇடை= ஒடுங்கிய இடுப்பு.

**பொழிப்புரை:**கூரிய பார்வையுடைய மகளிர் மிக்க திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!நீண்ட வலிய பெரிய மேருமலை ஆகிய வளைந்த வில்லினை ஏந்தியது சிவபிரானின் இடதுகை என்பதால், வில்ஏந்தியவள் நீயே என்பதை நானும் உணர்வேன்.ஆனால் அழிக்கும் ஆற்றல்உடைய சிவபிரானே அவ்வில் ஏந்தினான் என்று உலகில் சிலர்கருதுவது ஏன்?ஒடுங்கிய இடுப்பினையுடைய நீயும்அவனும் ஆற்றலும்பொருளுமாய் வேறானவர்அல்லர் ஒன்றானவர் என்பதுணர்ந்தே அங்ஙனம் கூறுகின்றனரோ?
**விளக்கம்**: கடுஎன்றசொல்,கூர்மை,நஞ்சுஎன்ற பொருள்கள்தரும்.இங்குக்கூர்மை என்பது சிறக்குமாதலின் கூர்மைஎன்பது கொள்ளப்பெற்றது.வில்ஏந்தியது இடதுகை,எனவே வில்ஏந்தியவள் இடப்பால் அமைந்த நீயே என்றார்.

**இலக்கணக் குறிப்பு:** யானும்– இறந்தததுதழுவிய எச்சவும்மை.கொல்–ஐய இடைச் சொல். என்னோ,கொல்லோ –அசைநிலை ஓகாரங்கள்.

73 . அம்பலத்து ஆட எடுத்ததாள் துணைஎன்(று)
அறைவன்ஓர் கால்மலை அரையன்
வம்பலர் முன்றில் திருமணத்(து) அம்மி
வைத்ததாள் துணைஎன்பன் ஓர்கால்
செம்பொருள் துணியான் என்(று)எனை இகழேல்
தேர்ந்(து)ஒரு வழிநின்றேன் அன்னாய்
கம்(பு)அலர்த் தடம்சூழ் தருதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கம்பு= சங்கு.அலர்=தண்ணீர்.ஓர்கால்=ஒருமுறை. அரையன்=அரசன்–இமவான்.வம்பு=நறுமணம்.முன்றில்=இல்முன்.துணியான்=தெளிவு இல்லாதவன்.ஒருவழி தேர்ந்துநின்றேன்=ஒருமுறையில் ஆராய்து கூறினேன்.அன்னாய்=தாயே.

**பொழிப்புரை:**சங்குப் பூச்சிகள் வாழும் நீர்நிறைந்த குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றத் தூக்கிய இடது திருவடி– உன்திருவடி துணை என்று நான் ஒருமுறை கூறுவேன். மற்றொருமுறை,இமவானின் நறுமணம் கமழும் அரண்மனை முற்றத்தில் நடந்த உன்திருமணத்தில், நீ எடுத்து அம்மிமேல் வைத்த வலது திருவடிதுணைஎன்பேன். இவ்வாறு கூறுவதால் செம்பொருள் பற்றிய தெளிவில்லாதவன் இவன் என்று என்னை இகழாதே.தாயே! ஆராய்ந்து ஒருவழிப்பட்டுக் கூறினேன். எனக்குஅருள்புரிக.

**விளக்கம்:** பெருமான் அம்பலத்தில் ஆடஎடுத்த இடதுதிருவடியும்,திருமணகாலத்தில் அம்மை, அம்மிமீது எடுத்துவைத்த வலதுதிருவடியும் அம்மையினதே. ஆதலின் உனது இருதிருவடிகளுமே –நீயே எனக்குத்துணை என்ற தெளிவுடன் தான் கூறினேன் என்றார்.

"நின்னில் சிறந்தநின் தாளிணை அவை"–என்ற கடுவன்இளவெயினனாரின் பரிபாடல் நினைக.

**இலக்கணக் குறிப்பு:** அரையன்–இடைப்போலி. அன்னாய்–விளி.

74 . எதிர்அறு பொதுவில் குறட்பிணர் வெரின்மேல்
இயைத்திடல் தகா(து)என உணர்ந்து
முதிர்உணர்(வு) உடைய பரன்மறைச் சிலம்பார்
மொய்வலத் தாள்நிறீஇ இடத்தாள்
அதிர்(வு)அற எடுத்தான் வழுதிஅவ் வருமை
அறிதரான் பிழைத்தனன் பொறுத்தாய்
கதிர்அருட்(கு) அழகே அதுதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**கதிர்அருள்=ஒளிர்கருணை.பொது=பொன்னம்பலம்.குறள்பிணர்=பூதத்தின்சமமில்லாத–சருச்சரையான.வெரிந்=முதுகு.முதிர்உணர்வு=முதிர்ந்த ஞானம்.மறைச்

சிலம்புஆர்=மறைகளாகிய சிலம்பு அணிந்த.மொய்=பெருமை.நிறீஇ =நிறுவி.
அதிர்வற=நடுக்கம்தீர.எடுத்தான்=ஆடத் தூக்கினான்.வழுதி=இராசசேகர பாண்டியன்.
அறிதரான்=அறியாதவனாய். பிழைத்தனன்=கால்மாறி ஆடுமாறுவேண்டிக் கொண்ட
பிழைசெய்தான்.

**பொழிப்புரை:** ஒப்பற்ற பொன்னம்பலத்தில்,பூதத்தின் சருச்சரையான முதுகில்,தமது
மறைச்சிலம்பணிந்த பெருமையுடைய இடது திருவடி அருளும் திருவடியாதலால் அதனை
வைக்காமல்,தாம்ஆடும்போது உண்டாகும் நடுக்கம் தீரத்தூக்கிய திருவடியாக்
கொண்டு,வலது திருவடியைப் பூதத்தின் சருச்சரையான முதுகில்ஊன்றி
ஆடினான்.இவ்வருமை அறியாமல் கால்மாறஆட வேண்டிக்கொண்ட இராசசேகர
பாண்டியனது அப்பிழையைப் பொறுத்து அவனுக்கு அருள்புரிந்தாய். உனது ஒளிர்கின்ற
கருணைக்கு இது அழகுறுசெயலாகும்.

**விளக்கம்:** குறட்பூதம்,மலத்தின் குறியீடு.வலதுதிருவடி குறளனை அமுக்குவதை, ‘‘மலம்
சாய அமுக்கி’’என்றும்;அருளும் திருவடியாகிய தூக்கிய திருவடியை
(அம்மையின்திருவடி)’’அருள்தான் எடுத்து’’ என்றும் உண்மை விளக்கம் செய்யுள் 36
கூறும்.தூக்கிய திருவடியை’’இனித்தமுடைய எடுத்த பொற்பாதம்’’என்பார் அப்பரடிகள்.

கால்மாறி ஆடுமாறு பாண்டியன் வேண்டுதல்:

‘‘ நின்றதாள் எடுத்து வீசி எடுத்ததாள் நிலம்மீது ஊன்றி
இன்றுநான் காண மாறி ஆடிஎன் வருத்தம் எல்லாம்
பொன்றுமா செய்தி அன்றேல் பொன்றுவன் என்னா அன்பின்
குன்றனான் சுரிகை வாள்மேல் குப்புற வீழ்வல் என்னா. ’’

திருவிளை..கால்மாறி.20.

**இலக்கணக் குறிப்பு:** அறிதரான்–முற்றெச்சம்.நிறீஇ–இன்னிசைஅளபெடை.

75 .

பரவுவெண் ணாவல் நீழலோன் இடத்தாள்
பற்றிய என்முனம் குறுக
உரவுசெய் தண்ட தரன்உளம் நடுங்கும்
உதைத்த(து)அத் தாள்என உன்னி
விரவும்அப் பதம்நின் பதமன்றோ அதனை
மென்பதம் என்ப(து)என் விளம்பாய்
கர(வு)உறாப் புலவர் புகழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரவு=பொய்ம்மை.பரவு=போற்றும்.இடத்தாள்=இடதுதிருவடி–அம்மையின்
திருவடி.உரவு=வலிமை.தண்டதரன்=எமன்.விரவும்=என்உள்ளத்தில்கலந்த

**பொழிப்புரை:**பொய்ம்மை இல்லாத புலவர்கள் புகழும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!
அனைவரும் போற்றும் வெண்ணாவல் நிழலில் எழுந்தருளியுள்ளவனது இடதுதிருவடியாகிய
உன் திருவடியை என்உள்ளத்தில் சிக்கெனப் பற்றிக்கொண்ட என்முன் எமன்வர,மனம்
நடுங்குவான்.ஏனெனில்,மார்க்கண்டேயன் பொருட்டு அவனை உதைத்தது உனது

இடதுதிருவடி என்பதால். இங்ஙனம் வன்செயல் செய்த அதனை மென்மையான திருவடி என்பதேன்?காரணம் கூறியருள்க.

**விளக்கம்**: அம்மையது திருவடியின் அச்செயல்,''குடிபுறம் காத்தோம்பிக் குற்றம் கடிவது'' ஆதலின் அது மென்பதம் என்பர் கரவுஉறாப் புலவர்.

காலனை உதைத்தது இடது திருவடி—அம்மைபங்கினது:

''கூற்றும ரித்திட வேஉதை பார்வதி யார்க்கும் இனித்த பெண்.''

—திருப்புகழ்.சமாஜம்303.

76. ஒருகருங் கேழல் உருஎடுத்(து) இணையில்
உன்பதி அடிமலர் காண்பான்
பெருநிலம் அகழ்ந்த மாயவன் நினது
பிறங்குபே ராலயம் சூழ்ந்த
பொருவில்நீ றிட்டான் மதிலடி கண்டால்
போதுமே புண்ணியக் கொழுந்தே
கருள்கடிந்(து) ஒளியின் மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை**: கருள்=இருள். கருங்கேழல்=வலியபன்றி. மாயவன்=திருமால். பொருவில்= ஒப்பற்ற.நீறு இட்டான் மதில்=இது திருமதிலின்பெயர்.

**பொழிப்புரை**:இருளினை ஓட்டி ஒளியில் மலிந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தன்னேரிலாத உன் கொழுநனது திருவடித் தாமரைகளைக் காண,திருமால் வலிமைவாய்ந்த ஒருபன்றியின் உருவெடுத்து,இப்பேருலகினை அகழ்ந்துகொண்டே சென்றும்,அத்திருவடிகளைக் காணவில்லை.ஆனால்; புண்ணியக் கொழுந்தே நீ விளங்கும் திருவானைக்கா ஆலயத்தைச் சூழ்ந்த ''திருநீறிட்டான்மதிலின்''கீழ்நிலை —அத்திவாரம் கண்டால் பெருமானது திருவடியைக் காணலாம்.

**விளக்கம்**: திருநீறிட்டான் திருமதில்: இது திருவானைக்கா திருக்கோயில் ஐந்தாம் திருச்சுற்றுத் திருமதில். இம்மதில் கட்டத் தொடங்கியபோது,சிவபிரான் ஒரு சித்தராக எழுந்தருளி, மதில்கட்டும் திருப்பணியில் ஈடுபட்டவர்களுக்கு அன்றாடம் கூலியாகத் தமதுதிருக்கரத்தால் திருநீறு வழங்கினான்.அது அவரவர் பணிக்கேற்ற கூலிக்குரிய பொன்னாய் ஒளிர்ந்தது.எனவே இம்மதில் இப்பெயர்பெற்றது.

இம்மதில் மிகுஉயரமும்அகலமும் கொண்டதாதலின், இவற்றுக்கு ஏற்பக் கீழ்நிலை—அத்திவாரம்—கொண்டது,எனவே இதன் கீழ்நிலையின் எல்லையினைக் காண்பரிது.ஆகவே இதன்கீழ்நிலை கண்டால்,பெருமான் திருவடி காணலாம்என்றார்.

திருமால்,சிவனதுதிருவடி காணவியலாமை:

''புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கரியாது
இரங்கிடு எந்தாய் என்றுஇரப்ப: —திருக்கோவையார்.8.

திருநீறிட்டான் திருமதில்:

''மெய்த்திரு நீறிட்டான் மதில் சுற்றிய திருவானைக்கா''

– வேலைப்போல்விழி..திருப்புகழ்

**இலக்கணக் குறிப்பு:** இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

77 . உயல்மறந்து அடரும் திரிபுரம் சிதைப்பான்
ஒருவரை எளிதினில் குழைத்த
பயல்மதி முடித்த பாடல்சால் பெருமான்
பாழிஅம் தடநெடுந் தோள்கள்
வியன்முலைக் கோட்டால் குழைத்தருள் நினக்கு
மெல்லியல் எனும்பெயர் தகுமோ
கயல்மலர்த் தடங்கள் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** உயல்=உய்தல். அடரும்=போரிடும். ஒரு வரை=மாமேருமலை. பயல்=இளமை. பாடல்=புகழ். பாழி=வலிமை. வியன்=பெருமை. தகுமோ=தகாது.

**பொழிப்புரை:** கெண்டை மீன்களுடன் தாமரைமலர்களும் நிறைந்த குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தாம் உய்தலை மறந்து போரிடும் முப்புர அசுரர்களின் ஆற்றலைக் கெடுக்க,மாமேருமலையினை வில்லாக எளிதில் வளைத்த ஒப்பற்ற சிவபிரானது வலிய திரண்ட தோள்களைப் பெருமைபொருந்திய உன்முலைகளாகிய கோடுகளால் குழைத்த உனக்கு மெல்லியல் என்ற பெயர் தகுமோ?தகாது.

**விளக்கம்:** முப்புரம்: ‘‘முப்புரம் என்பது மும்மல காரியம்’’ –திருமந்திரம். 343.
‘‘திரிகின்ற முப்புரம் செற்ற பிரானை’’ –திருமந்திரம். 348.

முப்புரம் எரித்தபின் மூவர் நிலை:

‘‘ மூவெ யில்செற்ற ஞான்றுஉய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர்என்று ஏவிய பின்னை
ஒருவ நீகரி காடரங் காக
மாவை நோக்கிஓர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே ’’

– திருமு..7.திருப்புன்கூர்.8.

**இலக்கணக் குறிப்பு:** சிதைப்பான்–முற்றெச்சம். தகுமோ–எதிர்மறை ஓகாரம்.

78. மையஆண் மகன்எள் எச்சில்உண் டாற்கு
மகிழ்ந்(து)அருள் செய்துநின் கொழுநன்
மெய்அவாம் சீர்த்தி படைத்தனன் எனக்கு
விரும்பிநீ அருளுவை யாயின்
ஐயபெண் மகள்எள் எச்சில்உண் டானுக்(கு)
அருளினாள் எனும்புகழ் நினக்காம்

கையர்வந்(து) அணுகற்(கு) அரும்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**கையர்=வஞ்சகர்.ஆண்மகன் எச்சில் மைய. மைய= குற்றமுடைய பொருள்.மெய்அவாம்=ஞானத்தையே விரும்பும்.எச்சில் உண்டானுக்கு=பரிகல சேடம் உண்டவனுக்கு(பரிகல சேடம்=ஒருவர் உண்டது போக அவ்வுண்கலத்தில் எஞ்சியுள்ள உணவு.)எள் எச்சில்= எச்சிற்பட்ட- இகழத்தக்க எச்சில் உணவு.

**பொழிப்புரை:**வஞ்சகர்நெருங்கவும் இயலாத திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்கணவனாகிய சிவபெருமான், ஆண்மகனாகிய தனது எச்சிற் பட்டதால் குற்றமுடையதாகக் கருதப்பெறும் பொருளை-நாவற்கனியின் விதையை- விழுங்கிய சம்புமுனிவர்க்கு மகிழ்ந்து அவர்க்கு அவர்விரும்பிய ஞானத்தை அருளினான். அதுபோல,உனக்கு இட்ட படையலை நீஎனக்கு அருளினால்-அழகிய பெண்ஒருத்தியின் எச்சிலை உண்டவனாகிய எனக்கு அருளினாய் என்ற பெரும்புகழ் உனக்கும் உண்டாகும்.உன்பரிகலசேடம் உண்டு,உன்அருள்பெற அருள்க.

**விளக்கம்:** நம் சைவசித்தாந்த மரபுப்படி,சிவபிரான்ஒருவனே ஆண்மகன்; பிறர் அனைவரும் பெண்மக்களே என்பதால்,சிவபிரானை ''ஆண்மகன்''என்றார்.

சிவபிரான்,சம்புமுனிவர்தர, அதுக்கி உமிழ்ந்த அந்த வெண்ணாவற்கனியின் விதையைச் சம்புமனிவர் விழுங்க,அதில் முளைத்தெழுந்தவெண்ணால் மரநிழலில் இறைவன் எழுந்தருளினான் என்பது இத்தலபுராணச் செய்தி.

இங்குப் ''பெண்மகள்''என்றதுஅம்மையை.அவளின் எச்சில் உண்டலாவது, அவள் துய்க்குமாறு படையலிட்டனவற்றை நாம்உண்ணல். பரிகலசேடம் உண்ணல் இல்லறத்துக் கணவன்மனைவியிடையில் உண்டு; அடியவர் கூட்டத்தும் உண்டென்பதை

''நின்,பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருஅமுது ஆர்ந்து தெருக்கடை எறிந்த
பரிகலம் மாந்தி'' -பண்டாரமும்மணிக்கோவை.5:38-41.

என்பதுணர்த்தும்.

**இலக்கணக் குறிப்பு:** உண்டானுக்கு-வினையாலணையும்பெயர்.

79. புனல்பயில் தவளை முழங்கநின் கொழுநன்
புகழ்ப்பெயர் உரைத்ததா உணர்ந்து
மினல்பயில் கனகம் வீசினான் ஒருவன்
மெய்ம்மையே நின்பெயர் உரைக்கும்
உனல்பயில் குழாம்பு கேன்தொழேன் புகழேன்
உவந்திடேன் எங்ஙனம் உய்வேன்
கனல்பயில் மணிமா மதில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**கனல்பயில்=ஒளிமிக்க.மினல்=மின்னல்–ஒளி.ஒருவன்–வரகுணபாண்டியன் என்னும் அரசன்.மெய்ம்மையே=உண்மையேஆகும்.உனல்பயில்= நினைப்பதையே பயிலும்–இடைவிடாது நினைக்கும்.குழாம்=கூட்டம்.உய்வேன்=ஈடேறுவேன். **பொழிப்புரை:** ஒளிமிக்க அழகிய பெரியமதில்சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நீரில் வாழும் தவளைகளின்ஒலியை''அரகரஅரகர''என்று சிவனபிரானது திருப்பெயரைமுழங்கி உருவேற்றுவதாகவதாக உணர்ந்த அரசனாகிய வரகுணபாண்டியன் , ஒளிரும் பொற்காசுகளையும் பொன்னையும் கலந்து அவற்றுக்குத்தூவியது உண்மையே ஆகும்.ஆனால்நான் உன்திருப்பெயரினை இடைவிடாது நினைக்கும் தொண்டர் கூட்டத்துடன் கலந்தேனில்லை;உன்னைத் தொழுதேனில்லை; உன்னைப் புகழவோ,உன்நினைவில் மகிழவோ இல்லை. இந்நிலையில் நான் ஈடேறுவது எங்ஙனம்?எனினும் எனக்கு ஈடேற்றம் அருள்க.

**விளக்கம்** வரகுணபாண்டியன்,தவளைக்குக் காசும்பொன்னும் வீசியது:

''குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று
காசும் பொன்னும் கலந்து தூவியும்
. . .. .. .. .. ..
பெரிய அன்பின் வரகுண தேவரும்''

– திருவிடைமருதூர்மும்மணிக்..28.

அடியார் நடுவுள் இருக்க வேண்டுதல்:

''அடியேன்உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்''

–திருவா..கோயில்மூத்த.1.

திருவாதவூரடிகள் தன்மேலேற்றிக் கூறுவன:

''ஆமாறுன் சேவடிக்கே அகம்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்''

திருச்சதகம்.18.

**இலக்கணக் குறிப்பு:** மினல்,உனல்–இடைக்குறைகள்.

80 .

மாஇயல் பெருமான் மான்பிறை சுமந்தேன்
வாமபா கத்(து)இனி(து) அமரும்
நீவிளை யாடற்(கு) என்பன்நம் பற்க
நிகழ்இ∴(து) இடைமரு தூரின்
மேவிஓர் அரசில் விழுங்கிய(து) ஆதி
வெறுப்பன மறைப்பதற்(கு) என்று
காவிஅம் கண்ணாய் உணர்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** ஓர் அரசில் மேவி=வரகுண பாண்டியனாகிய ஓர்அரசனிடம் வந்து. விழுங்கியஆதி= விழுங்கிய எள்,திருடிய பொருள் ஆகிய அனைத்தும். வெறுப்பன=பிறர் வெறுக்கத்தக்க தனது செயல்கள்.காவி= கருங்குவளை மலர்.

**பொழிப்புரை:** திருவிடை மருதூரில் வரகுணபாண்டியன் ஆகிய அரசனிடம் வந்த ஒருதிருடன்,திருக்கோயில் திருச்சுற்றில் எண்ணெய்க்காகக் காய வைத்திருந்த எள்ளைத் தான் தின்றது,'' மீண்டும் மனிதனாகப் பிறந்து இத்திருக்கோயிலில் தொண்டு புரியவே''என்று கூறியதும்,திருக்கோயில் பொருள்களைத் திருடிய ஒரு திருடன், சிவனடியார்போல் தன்உடம்பில் திருநீறு பூசி இருந்ததும், பிறர் வெறுக்கத் தக்க தமது செயல்களை மறைக்கவே என்பதை உணர்ந்த கருங்குவளை மலர்கள் ஒத்த கண்களையுடையவளே! திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!தம்செயல்களை மறைக்கக் கூறிய அவர்களைப் போலவே, உன்கணவன் சிவபெருமானும், உன்னிடம்'' நான்என்தலையில் மூன்றாம்பிறையும்,கையில் மானையும் சுமந்திருப்பது, அவற்றுடன் நீ விளையாடி மகிழவே என்பான்; அதனை நீ நம்பாதே.

**விளக்கம்:** திருவிடைமருதூர் நிகழ்வுகள்:

"வெள்ளை நீறு மெய்யில் கண்டு
கள்ளன் கையில் கட்டுஅவிழ்ப் பித்தும்
.. .. .. .. .. .. .. .. .. .. ..
வழிபடும் ஒருவன் மஞ்சனத்து இயற்றிய
செழுவிதை எள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலும் அவன்இப் பிறப்புக்கு என்ன
இடித்துக் கொண்டுஅவன் எச்சிலை நுகர்ந்தும்''
—திருவிடைமும்மணிக்.28.

**இலக்கணக் குறிப்பு:** அரசில்—இல்—ஏழன் உருபு.கண்ணாய்—விளி.என்பன்—படர்க்கை ஆண்பால் ஒருமை வினைமுற்று.நம்பற்க—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. இச்செய்யுள் எடுத்துக்காட்டுஉவமை அணி.

81 .

அண்டகோ டிகள்என்(று) உரைத்திடும் சிற்றில்
அமைத்(து)அமைத்(து) ஆடிடு வாய்நீ
துண்டவான் மதியம் சூடிய சடிலச்
சுந்தரன் அழித்(து)அழித்(து) ஆடும்
பிண்டநூல் என்றும் பேதைநீ அனையான்
பித்தன்என்(று) உரைப்பதும் மெய்யே
கண்(டு)அவாம் மொழியார் பயில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கண்டுஅவாம்=கற்கண்டும் விரும்பத்தக்க.ஆடிடுவாய்= விளையாடுவாய். துண்ட வாள்மதியம்=சிறுதுண்டாகஉள்ள ஒளிபொருந்திய மூன்றாம்பிறை.பிண்டம்= தொகுக்கப்பெற்றவை.நூல்=விதிமுறை.பேதை=பெண்.மெய்யே=உண்மையே.

**பொழிப்புரை:**கற்கண்டும் விரும்பத்தக்க இன்சொல் பேசும் மகளிர் பயிலும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! கோடிக்கணக்கான அண்டங்களை நீ சிற்றில்களாகப் படைத்துப் படைத்து விளையாடுவாய்.ஆனால்,ஒளி பொருந்திய சிறுதுண்டாக உள்ள மூன்றாம்பிறை சூடிய சடையுடைய அழகனாகிய சிவபிரான், அவற்றை அழித்து அழித்து விளையாடுவான்.பெண்ணாகிய நீ ;அவன்அவ்வாறு அழிப்பது பற்றிக் கவலைப்படாமல்

தொகுக்கப் பெற்ற–பலவற்றால் ஆக்கப்பெற்ற– பொருள்கள் எல்லாம் உரிய காலத்தில் அழியும் என்பதே விதிமுறைமை என்றும், அவற்றை அவன் அழிப்பதால் பித்தன் என்றும் நீ கூறுவது உண்மையே ஆகும்.

**விளக்கம்:** உயிர்களின் உடலும்,ஐம்பொறிகளும்,உலகமும், உலகில் உள்ள அனுபவப் பொருள்களும் ஐம்பூதக்கூட்டால் ஆனவை என்ற நம் மெய்ப்பொருளியலை, இன்று அறிவியலும் உறுதிசெய்கிறது.இங்ஙனம்தொகுத்து ஆக்கப்பெற்றஅனைத்தும் ஒருநாள் தத்தம் நிலைகளில் கெடும்என்று, மெய்ப்பொருளியல் அறிவியல் இரண்டும் கூறும்.இவற்றை ஆக்குகின்றவள் அன்னை அகிலலாண்ட நாயகி.இவற்றைக் கடைஊழியில் அழிப்பவன் அப்பன்.இங்ஙனம்ஆக்கலும் அழித்தலும்,ஒன்றைஒன்று தொடர்வன ஆதலின்,அவற்றை அமைத்துஅமைத்து என்றும் அழித்துஅழித்து என்றும் அடுக்குகிறார்.
அனைத்தையும் அம்மைமூலம் படைப்பவன் அப்பனே:

''நம்கையினால் நாம்அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்''

– திருக்களிற்றுப்..78.

ஊழியிலும் நிலைக்கும் தனிமுதல்: ''

''ஊழிமுதல்வனாய் நின்ற ஒருவனை'' –திருவெம்பாவை.8 ''

'' பல்லுயிரும் பலஉலகும் படைத்து அளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்'' –மனோன்மணீயம்.

''கடைஊழி வரும்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையான்உன் வாசகத்தின் ஒருபிரதி கருதினதே'' –மனோன்மணீயம்.

அம்மை படைக்க, அப்பன் அழிக்கிறான்:

''மடல்வாய் அவிழ்ந்த குழற்பேதை ஒருத்தி திருத்தும் பகிரண்ட
மணற்சிற் றிலைஓர் கணத்தின்கண் மட்டித்து ஆடும்மைந்தன்''

_முத்துக்குமாரசு..பிள்ளை..சிற்றில்.8.

**இலக்கணக் குறிப்பு:**சிற்றில்–பண்புத்தொகை.அமைத்துஅமைத்து;அழித்துஅழித்து– விரைவும்,எளிமையும் பற்றிவந்த அடுக்குத்தொடர்கள்.

82 . மகள்என நினைந்துத் தாய்என விளித்த
மலைஇறை மனைஅறி யாமை
புகர்அறு பிரமன் முதற்பல உயிர்க்கும்
பொருந்துதாய் ஆம்உனைக் கணேசன்
அகம்நகு முருகக் கடவுள்தாய் என்று
நவில்அறி யாமையை ஏய்க்கும்
ககனமேல் ஓங்கும் மதில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** ககனம்=வானம். மலைஇறை=மலையரசன்–இமவான்.மனை= மனைவி ஆகிய மேனை.புகர்=குற்றம்.அகம்நகுஅறியாமை=மனமகிழ்ச்சியின்வந்தஅறியாமை.

**பொழிப்புரை:**வானளாவ உயர்ந்த மதிலுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! தமக்கு நீ மகள்என்ற உறவுமுறையுடையவள் என்று நினைத்த போதிலும் உன்னை, தாயே என்று அழைத்த இமவான்,அவன் மனைவி ஆகிய இருவர்செயலும்—விளியும், மகிழ்ச்சியால் விளைந்தஅறியாமையாகும்.நான்முகன் முதலிய பற்பல உயிர்களுக்கும் பொருத்தமான தாயாகிய உன்னை,உலகவர் விநாயகர்,முருகக்கடவுள் ஆகிய இருவர்க்குமட்டும் தாய்என்று கூறுவதும் முன்னதுபோன்ற அறியாமையே ஆகும்.

**விளக்கம்:** அருள்தரு மீனாட்சியம்மையைப் பெற்றோர் தாய்எனல்:

“தாய்வரு கென்றவர் பேதைமை கண்டு ததும்பு புன்னகை யாட”

—மீ.பி.தமிழ்.செங்கீரை.7.

**இலக்கணக் குறிப்பு:** ஏய்க்கும்—உவமஉருபு.மகளைத் தாய்என்றது—உவப்பின் வந்த மரபு வழுவமைதி. இச்செய்யுள் உவமைஅணி.

83 .

இலங்(கு)அறம் முப்பத் திரண்டென வகுத்(து)ஆங்கே
இகலற அவைஎலாம் வளர்த்து
மலங்(கு)உயிர் பலவும் புரக்கும்நீ கொடியேன்
மாட்டருள் புரியின்அ:(து) அவற்றுள்
துலங்கும்ஒன் றோடுசே ராதுகொல் தனிப்பில்
சொற்றிமுப் பத்(து)மூன்(று) என்றே
கலங்கல்இல் வளமை மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**கலங்கல்=மாசுபடல்.இலங்கு=சிறந்துவிளங்கும்.இகல்=ஒப்பு.மலங்கு=மனம் கலங்கும்.கொடியேன்மாட்டு,தனிப்பில்அருள்புரியின்.தனிப்பு=தனியே.சொற்றி=சொல்க.

**பொழிப்புரை:** மாசில்லாத வளமை மிக்க திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! சிறந்து விளங்கும் அறங்கள் முப்பத்திரண்டு என்று வரையறை செய்துகொண்டு அவற்றை எல்லாம் ஒப்பற்ற முறையில் வளர்த்து ,மனம்கலங்கும் உயிர்களை எல்லாம் காத்தருளும் நீ,கொடியவனாகிய என்மீது தனிப்பட்டமுறையில் அருளினால் அது, முன்னைய முப்பத்திரண்டுடன் சேர்ந்து முப்பத்துமூன்று என்று ஆகாதா? சொல்லுக. ஆகும். எனவே எனக்குத் தனிப்பட்ட முறையில் அருள்புரிக.

**விளக்கம்:** அறங்கள்32: சிவஞானமுனிவரின் காஞ்சிப்புராணம் கூறுவன: தேவவேள்வி,பிதிர்வேள்வி,பூதவேள்வி,மானிடவேள்வி,பிரமவேள்வி,வறியார்க்குஈதல், துறவியர்க்கு மடம் அமைத்தல்,இல்வாழ்வார்க்கு இல்லம் அளித்தல், இல்வாழ்வுக்கு உரிய கருவிப் பொருள்கள் வழங்குதல்,தண்ணீர்ப் பந்தர் அமைத்தல்,பூஞ்சோலை ஆக்கல்,யாசிப்பவர் மாற்றுத்திறனாளியர் துன்புற்றோர்ஆகியோரை ஆதரித்தல், நோயர்க்கு மருந்து உதவுதல்,குழவி பேணல்,தாம்பூலம் தருதல்,சுண்ணாம்பு தருதல், தலைக்கு எண்ணெய் தருதல்,முழுக அரப்புத் தருதல்,படுக்கை அளித்தல்,பூதானம் கோதானம் கன்னிகா தானம் செய்தல்,பிறர்க்கு மணம் செய்வித்தல்,விளக்குத் தருதல்,தீராக்கடன் தீர்த்தல்,சிவனடியார்க்கு வேண்டுவன வழங்கல்,உருத்திராக்கம்

வழங்குதல்,திருநீறு வழங்குதல்,பூசைக்குஉரியன தருதல்,சைவநூல்,புராணம் வழங்குதல்,ஓதுவித்தல், சிவபக்திஉபதேசித்தல்,அபயம் அளித்தல் என்பன.

–தழுவக்குழைந்த..138–141.

(இவற்றுள் சிலவற்றைச் சிலர் மாற்றிக் கூறுதலும் உண்டு.)

**இலக்கணக் குறிப்பு:** கொல்–ஐய இடைச்சொல்.சொற்றி–வியங்கோள் வினைமுற்று.

84 .

இளைத்(து)அடைந் தேனை ஆடிஎன்(று) உனையான்
இரந்(து)இரந்(து) ஏத்தநீ இரங்கி
வளைத்தபே ரருளால் ஆளுவ தனிலும்
மன்றநீ யேஅருள் புரிந்தால்
முளைத்தசீர் பரவ இடமிலை கேட்டோ
முகில்மழை வழங்கிடும் தாயே
களைத்தடஞ் சிகரி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**களை=அழகு.தடஞ்சிகரி=பெருமைபொருந்தியகோபுரம்.ஆடி=ஆள்+த்+இ=ஆண்டருள்க.வளைத்த=சூழ்ந்த.மன்ற=மிக.முளைத்த =உன்னிடம் தோன்றிய. பரவ=தனித்தனியே பலமுறை போற்ற.

**பொழிப்புரை:**அழகிய பெருமை பொருந்திய கோபுரங்கள்சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!நான் மனம் இளைத்து"என்னை ஆண்டருள்க"என்று உன்னைத் தனித்தனியே ஒவ்வொன்றுக்கும் போற்ற,நீ என்பால் மனம் இரங்கி உன்னைச் சூழ்ந்த பேரருளால் அவ்வப்போது அருள்வதைக் காட்டிலும்,நீயே வலியவந்து மிக அருள்புரிவாயானால் ஒவ்வொருமுறையும் உன்னைப் போற்றித் தொல்லை தரமாட்டேன்.மேகம் நாம் கேட்டுக்கேட்டா மழை பொழியும் அதுபோல நீயும் நான் கேளாமலேயே எனக்குப் பேரருள்புரிக.

**இலக்கணக் குறிப்பு:** ஆடி– வியங்கோள் வினைமுற்று.இலை–இடைக்குறை. கேட்டோ– எதிர்மறை ஓகாரம். இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

85 .

பிழைபல உடையேன் ஆயினும் அவற்றைப்
பேதைநீ என்பதற்(கு) இணங்கக்
குழைமனத்(து) அகற்றி ஆளவே வேண்டும்
கூர்ந்(து)இனி(து) ஆண்டிடாய் என்னில்
மழைமலர்க் கூந்தல் கங்கையைப் புகழ்வேன்
வைவரே நொந்தவர் தாயே
கழைமலி கழனி சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கழை=கரும்பு.நீ பேதை=நீ பெண்.குழைமனம்=இரக்கமனம்.அகற்றி= என்பிழைகளை உன்மனத்திலிருந்து முற்றும்நீக்கி.கூர்ந்து=மிகவும்.மலர் மழைக் கூந்தல்.மழை=கார்மேகம்.தாயே நொந்தவர்வைவரே.

**பொழிப்புரை:** கரும்புகள் மலிந்த நன்செய் வயல்சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நான் பிழைகள்பல செய்தவனாயினும்,நீ பெண்என்பதால் உன்இரக்கம் மிக்க உள்ளத்திலிருந்து''இவன் பிழைபல செய்தவன்''என்ற எண்ணத்தை முற்றிலும் நீக்கிஎன்னை ஆளவேண்டுகிறேன்.அங்ஙனம் நீ என்னை மிகவும் ஆளாவிடின், நான் மலர்சூடிய கார்மேகம் ஒத்த கூந்தலுடைய கங்கையாளைப் புகழ்வேன். தாயே! மனம்நொந்தவர் வைவர் என்பது உலகியலன்றோ!நான் கங்கையைப் புகழ்ந்து, உன்னை வையாதபடிஅருள்க.

**விளக்கம்:** ''மலர்மழைக்கூந்தல்''என்பதில்,மலர்என்பது மங்கலத்தன்மையையும், மழைக்கூந்தல்என்பது நரைபடா என்றும் இளமையையும் குறிக்க வந்தன.

ஆண்மகன் ஒருவன்,தன்மீது இரக்கங்காட்டவேண்டிய ஒருத்தி, இரக்கம் காட்டாவிடில் ''உன்னை இகழ்வேன்'' என்றும்,''மலர்மழைக்கூந்தலுடைய வேறு ஒருத்தியைப் புகழ்வேன்''என்பதும் பிழைகளாதலின் நான் மேலும் பிழைகள் செய்யாது அருள்க என்றார்.

நொந்தவர் வைவர்:

''ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் இருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே''

—சுந்தரர்.மீளாஅடிமை..

''வாயார உண்டபேர் வாழ்த்துவதும் நொந்தபேர்
வைவதுவும் எங்கள்உலக வாய்பாடு'' —
தாயுமானவர்.சச்சிதானந்தசிவம்.8.

**இலக்கணக் குறிப்பு:** ஆளவே—தேற்றேகாரம்.மழை—காரியவாகுபெயர்.வைவரே—ஏகாரம் அசைநிலை.

86. சடைமிசை மாதை நோக்கியார் எனின்நீ
சங்கரன் நீர்என்பான் முகம்முன்
இடைதெரி தரல்என் என்னின்நோக் குறுநின்
எழில்முகம் உதன்நிழல் என்பான்
உடையநா யகிநீ மறுத்திடில் பிறரால்
உணர்என்பான் உணரவல் லவர்யார்
கடையுறல் ஒழிந்த வளம்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கடையுறல் ஒழிந்த=எல்லையற்ற.மாதை=கங்கையை.முகம் முன் இடை தெரிதரல் என்=முகம் எதிரேநடுவில் தெரிவது என்ன.நோக்குறு=பார்க்கும்.உதன்= அவன்.உதன்,நோக்குறு நின்எழில்முகம் என்பான்.

**பொழிப்புரை:** எல்லையற்ற பெருவளம்கொண்ட திருவானைக்கா அகிலாண்டநாயகியே! நீ,உன்கணவனாகிய சங்கரனின் சடையில்உள்ள பெண்ணைப் பார்த்து,''இதுயார்'' என்றால்,அதற்கு அவன்''தண்ணீர்''என்பான்;''எனக்கு எதிரே இதன் நடுவில் ஒருமுகம் தெரிகிறதே''என்றால்,அதற்கு அவன்''காணும்உன் முகத்தின் நிழல்'' என்பான்; அவனுக்கு மனைவியாகிய நீ''அப்படிஇல்லை''என்றால், ''பிறரிடம் கேட்டு அறிந்துகொள்''என்பான்.ஆனால்,அவனை உணர்ந்து உரைக்க வல்லவர் யார்?அவன் உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவனல்லவா?

**விளக்கம்**: இச்செய்யுட் செய்தி:

''ஐயநின் சென்னிமிசை உறைகின்ற மடமங்கை
யார்என்ன உமைவினவவும்
அன்னதொரு மடமங்கை யன்றுவெண் திரைகொழித்(து)
அழகுஒழுகு தண்புனல்எனத்
துய்யஒளி ஆனனம் கரியவிழி காதுவாய்
தோயத்தில் உண்டோஎனச்
சொல்லரும் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை
துய்யசெங் குமுதம்என்னப்
பொய்எனநி னைத்துநற் கொங்கையும் கூந்தலும்
புனலிடை உண்டோஎனப்
புற்புதம் சைவலம் அதெனவே மறுத்துப்
புகன்றிடுதி நங்காய்எனத்
தையல்அவள் ஏன்என்ன நாணொடு வணங்கி என்றன்
பிழைபொறுத் திடுதிஎன்றே
சங்கரன் உரைத்திடத் திருஉளம் மகிழ்ந்தசிவ
சங்கரிஉ மைக்காக்கவே.''

–தனிப்பாடல்திரட்டு.சிவப்பிரகாச சுவாமிகள்.

அவனைஉணரவல்லவர் யார்?:

''உணர்வார்க்கு உணர்வரியவன்'' –திருவாசகம்.அற்புதப்.8

'' உணர்ந்தார்க்கு உணர்வரியோன் தில்லைச்சிற் றம்பலத்து ஒருத்தன்''
– திருக்கோவையார்.9:1.

**இலக்கணக் குறிப்பு:** யார்–உயர்திணை முப்பால் வினாவினைக் குறிப்புவினைமுற்று.

87 . எனக்(கு)அருள் செய்யின்நின் கொழுநனைப் புகழ்வேன்
இமயநின் தந்தையைப் புகழ்வேன்
மனக்(கு)இனி தாநின் மைந்தரைப் புகழ்வேன்
மலரின்நின் தோழியர்ப் புகழ்வேன்
நினக்(கு)இனி யவராம் அடியரைப் புகழ்வேன்
நின்னையும் புகழுவேன் தாயே

கனக்கடி மதில்சூழ் தருதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே

**குறிப்புரை:** கனம்கடி= பருமனும் காவலும்.தோழியர்=திருமகளும் கலைமகளும். மனக்குஇனிதா=மனத்துக்கு இனிய விதம்.மனக்குஇனிதாஎன்ற தொடரை,நின் கொழுநன் முதலிய ஐந்தினொடும் கூட்டுக

**பொழிப்புரை:** பருமனும் காவலும் கொண்ட மதில்சூழ்நத திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! நீ எனக்கு அருள்புரிந்தால்,தாயே!நான் உனது மனத்துக்கு இனிமை தரும்விதம் உன் கணவன்,இமயமலை அரசனாகிய உன்தந்தை இமவான், உன்மகன்கள்ஆகிய விநாயகன் முருகன்,உன்தோழியர்ஆகிய திருமகள் கலைமகள், உன்அடியவர்கள் மட்டுமன்றி உன்னையும் புகழ்வேன்.எனவே எனக்கு அருள்புரிக.

**இலக்கணக் குறிப்பு:** கடி–பலகுணம் தழுவிய உரிச்சொல். நின்னையும்– உம்மை, இறந்தனதழுவிய எச்சவும்மை. இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி.

88 .

பூவண நகரில் பொன்னனை யாள்இல்
புகுந்தனன் முன்புகா மாரி
தூவண அன்பின் ஐந்திணை எனும்நூல்
சொற்றதை விளக்கினன் என்னில்
மாவணத் தளிர்நேர் மேனியாய் உலக
மாதுகொல் நீவிடை இதற்(கு)என்
காவணம் நிறைவீ தித்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காவணம்=பந்தல்.பூவணம்=மதுரைக்கு அருகில் உள்ள பாண்டிய நாட்டுத் திருத்தலம்.பொன்னனையாள்=உருத்திர கணிகை ஒருத்தியின் பெயர்.முன்பு காமாரி புகுந்தனன்.காமாரி=சிவபிரான்.தூவண அன்பின்=தூய அழகிய அன்பிற்குரிய. ஐந்திணை= அன்புடைக்காமம்.நூல் சொற்றதை="அன்பின் ஐந்திணை"என்றே தொடங்கும் இறையனார்அகப்பொருள் நூல் கூறியதை.என்னில்=என்றால். மாவணத்தளிர்=அழகிய மாந்தளிர்.இதற்கு நீ விடைஎன்.விடை=வருத்தம்.

**பொழிப்புரை:** பந்தல்கள் நிறைந்த வீதிகளையுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! முன்னொரு காலத்தில் சிவபிரான்,திருப்பூவண நகரத்துப் பொன்னனையாள்என்ற உருத்திரகணிகையின் வீட்டில் புகுந்து,தூய அழகிய "அன்பின்ஐந்திணை"என்று தொடங்கும் இறையனார்அகப்பொருள் நூற்கருத்தை, அவளுக்கு விளக்கிக்கூறினான் என்பதால்,மாந்தளிர் போன்ற மேனியுடையவளே! அதன்பொருட்டு நீ உலகத்துப் பெண்டிர்போல் அவனைத் தவறாகநினைத்து வருந்துவது ஏன்? உன்கொழுநன் தவறிலன்.

**விளக்கம்:** அன்பின்ஐந்திணை:

"ஐந்திணை என்பது அன்புடைக் காமம்" –நம்பிஅகப்பொருள்.4.

திருப்பூவணத்தில் சிவபெருமான்:

"பூவணம் அதனில் பொலிந்திருந்து அருளித்

தூவண மேனி காட்டிய தொன்மையும்—

—திருவாசகம்.கீர்த்தித்..50—51.

பொன்னனையாள்: திருப்பூவணநாதர் திருமுன் நாடோறும், கூத்துக்குஉரிய மத்தளம்முதலிய துணைக்கருவிகளின்றி ஆடும் சொக்கக்கூத்து ஆடி, அடியவர்களைப் பொருள்என்று நினைத்து வீட்டிற்கழைத்துவந்து சுவையூண் ஊட்டி,எஞ்சியது உண்டு,மகிழ்வித்து,அவர்கள் தருவனகொண்டு வாழ்ந்தாள். தான்பெற்ற பொன்னால் சிவபிரான் திருவுருச் சமைக்க மிகவிரும்பியும் இயலாது வருந்தினாள்.அவள் விருப்பம் தீர்க்கச் சிவபிரான் சித்தராக எழுந்தருளினார். வீட்டில் இருந்த அனைத்து உலோகங்களையும் தன்முன் வைக்கச்சொல்லி, அவற்றின்மேல் நீற்றினைச்சிதறி,'' இரவில் இவற்றைத் தீயிலிட்டு எடுத்தால் இவை பொன்னாகும்.அப்பொன்னால் நாயகன் திருவுருச்சமைப்பாயாக''என்றார். அவள், அவரிடம் ''இங்குநீர் வதிந்து கங்குல்வாய் அமுதுஅருந்தி,இக்காரியம் முடித்து இருள் புலருமுன் போம்''என்றாள்.''அங்கயற்கணாள் தனைப்பிரியார் அதற்கு இசையார், மதுரையிற்சித்தர்யாம்'' என்றுமறைந்தார்.—இதுவே''திருவிளையாடற் புராணத்து இரசவாதம்செய்தபடலச்''செய்தி.

பொன்னையாளின்''கங்குலில்தங்குதல்,கங்குல் வாய்அமுதுஅருந்தல்,இருள் புலருமுன் போதல்''என்பவற்றுக்கு அவர்சற்றும் இடங்கொடாததை''அங்கயற்கணாள் தனைப் பிரியார்,அதற்கு இசையார்,சித்தர்யாம் என்று மறைந்தார்''என்ற கவிக் கூற்றையும்,சித்தர்கூற்றையும் சிலர் மனதிற்கொள்ளாமல்'' உருத்திரகணிகைக்கு அருள்புரிந்து,அவளை அணைந்த வரலாறு''என்பது பொருந்தாது.மேலும்''உலகமாது கொல் நீ விடைஇதற்குஎன்?என்றதொடரால் ,எங்கு எது நடப்பினும் அதனை உள்ளவாறு உணரும் தெய்வப்பெண் நீ,உலகப்பெண்களைப்போல (உன்னைப்பிரியாத அவன் மேல்ஐயுற்று)வருந்தற்க என்பதும் எண்ணத்தக்கது.

**இலக்கணக் குறிப்பு:** என்—எவன் என்பதன் குறுக்கம்.

89 .

பேயொடு நடிக்கும் பித்தனே என்றோ
பெருங்கதி இலன்இவன் என்றோ
தாயொடு தந்தை இலன்இவன் என்றோ
தம்பிரான் ஒருதிரு மேனி
நீயொரு பாதி நின்முன்ஓர் பாதி
நிலவுறக் கொண்டது நன்றே
காயொரு வாத்தென் பொலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** தென்காய் ஒருவா=தென்னங்குலைகள் நீங்காத.கதி=புகலிடம். தம்பிரான்=ஞானி—கடவுள்.நின்முன்=உன் அண்ணன்—திருமால்.நிலவுற=நிலையாக.

**பொழிப்புரை:** தென்னங்குலைகள் நீங்காதுபொலியும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!ஞானியாகிய சிவபிரானது ஒப்பற்ற திருமேனியினை,அவன் பேயுடன் கூத்தாடும் பித்தன்,அவனைக்காக்க நல்ல புகலிடம் இல்லை, தாயும்தந்தையும் இல்லாதவன்

என்பதால்,நீ ஒரு பாதியிலும், உன்அண்ணன் திருமால் ஒருபாதியிலுமாக இடங்கொண்டு அவனைக் காக்கும் தன்மையில் நிலைபெற்றது நற்செயலே ஆகும்.

**விளக்கம்:** சிவபெருமான்;பித்தன்,அவனைக்காப்பவர் யாருமில்லைஎன்பதால் அவனைக் காக்கஅண்ணனும் தங்கையுமாக அவன்உடம்பில் பங்குபெற்றுக் காக்கிறீர்கள் என்றார்.

பேயொடு ஆடினான்:

"நீடுகாடு இடமாய்நின்ற பேய்க்கணம்
கூடுபூதம் குழுமிநின்று ஆர்க்கவே ஆடினார்......

திருமுறை.5.திருப்பாலைத்..4

தாய்தந்தை இல்லாதவன்:

''தாயுமிலி தந்தையிலி தான்தனியன்'' –

திருவாச.திருச்சாழல்.3.

நீஒருபாதி நின்முன்ஒருபாதி:

"மாதுஒரு பாலும் மால்ஒரு பாலும் மகிழ்கின்ற நாதன்'

திருமு1.திருப்புறவயம்.2.

''ஒருபாதி மால்கொள மற்றொரு பாதி உமையவள் கொண்டு
இருபாதி யாலும் இறந்தான் புராரி ; இருநதியோ
பெருவா ரிதியில்; பிறைவானில்; சர்ப்பம் பிலத்தில்; கற்ப
தருவான போஜ கொடைஉன் கையோடுஎன்கை தந்தனனே.''

_தனிப்பாடல்திர.பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்.

**இலக்கணக் குறிப்பு:**ஒருவா– ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.இலி–இடைக்குறை.

90 .

மோகினி உருக்கொண்(டு) ஒருதரம் புணர்நின்
முன்னவன் தனக்கும்ஓர் பாதி
ஏகல்இல் எழில்நின் தனக்கும்ஓர் பாதி
எம்பிரான் மேனியில் என்றால்
ஆகிய நீயே அவன்எனத் தெரிந்தேன்
அல்லைஎன் றால்பொறுப் பாயோ
காகனம் சுமக்கும் வளர்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கனம்=மேகம்.நின்முன்னவன்=உன் அண்ணன்–திருமால்.ஏகல்இல்எழில்= சிறிதும்குறையாதபேரழகு.அல்லை=நீஅப்படிப்பட்டவள் இல்லை.பொறுப்பாயோ=பொறாய்.

**பொழிப்புரை:**மேகத்தைச் சுமக்கும் சோலைகள் வளரும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!மோகினி வடிவம்தாங்கி முன்ஒருமுறை கூடிய உன்அண்ணன் திருமாலுக்கு ஒருபாதி உடம்பும்,சிறிதும் குறையாத பேரழகு வாய்ந்த உனக்கு ஒருபாதி உடம்பும்,சிவபிரான் திருமேனியில் உள்ளது என்றால் எல்லாமாகிய நீயே அவனாக–

சிவபிரானாக உள்ளாய் என்பதறிந்தேன்.அப்படி இல்லை என்று நான் கூறினால் நீ பொறுத்துக்கொள்ளமாட்டாய்.

**விளக்கம்:** திருமால் மோகினிஉருவுடன் சிவபிரானைக் கூடிச் சாத்தாவைப்பெற்ற செய்தியை முன்செய்யுள் எண்33இன் விளக்கவுரையில் காண்க.

**இலக்கணக் குறிப்பு:** நின் முன்–நாலாம் வேற்றுமைத்தொகை.தனக்கும்,தனக்கும்– எண்ணும்மைகள்.பொறுப்பாயோ– எதிர்மறை ஓகாரம்.

91 . பல்லுல(கு) ஈன்ற நின்திரு உதரப்
பால்உள(து) என்னும்நின் இடைநேர்
ஒல்லுமா(று) இல(து)ஆ யினும்ஒரு பக்கம்
ஒத்தலின் சிருட்டியை ஆக்கும்
வெல்லுநா யகன்கைத் துடிஎனின் நின்றன்
மெல்வயிற்றுக்(கு) அதுபுகழ் ஆமோ
கல்லுமா மலத்தர் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கல்லுமாமலத்தர்=மிகப்பெரிய ஆணவமலத்தைத் தோண்டி எறியும்அடியார். உதரப்பால்= வயிற்றின்கண்ணதான. நேர்=உவமை.ஒல்லுமாறு இலது=பொருந்தாது. வெல்லுநாயகன் கைத்துடி நேர்ஒல்லுமாறு இலது.ஆயினும் சிருட்டியையாற்றும்= எனினும் உடுக்கை(உன்திருவயிறுபோல்)உலகைத் தோற்றுவிக்கும்.மெல்வயிற்றுக்கு= மென்மையான திருவயிற்றுக்கு.அது=அந்தத்துடியை உவமையாகக்கூறும் செயல். புகழோ=புகழாகப்பொருந்தாது.

**பொழிப்புரை:**அகந்தை என்னும் மிகப்பெரிய ஆணவமலத்தைத் தோண்டி எறியும் அடியார்கள் சூழ்ந்துள்ள திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பலப்பல உலகங்களையும் ஈன்ற உனது திருவயிற்றின் கண்ணதான உன்இடுப்பு,வெற்றியே யுடைய சிவபெருமானின் திருக்கையில் உள்ள உடுக்கையை ஒக்கும் என்றுகூறின், இடையின் நுட்பம்காரணமாக அவ்வாறுகூறுவது முற்றும்பொருந்தாது. ஆயினும் உன் திருவயிறுபோல் உடுக்கையும் படைத்தலைச் செய்யும் என்றால் உன்இடையின் இருபுறங்களும் மிகமென்மையானவை.துடிஅங்ஙனம் பெற்றதன்று.எனவே துடியை உன்வயிற்றுக்கு உவமைகூறுவது பொருத்தமோ புகழோ துடிக்குத் தராது.

**விளக்கம்:** துடி படைத்தல் செய்வது:

''தோற்றம் துடியதனில்'' –உண்மைவிளக்கம்.35.

அம்மை பல்லுலகு ஈன்றவள்:

''உலகேழும் பெற்ற தாய்க்கு நீ அருமைப்பிள்ளை'' –

- முத்துக்.பி.த.சிற்றில்.7.

கல்லு மாமலத்தர்:

''அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர்''

–மீ.பி.த.வருகை.9.

**இலக்கணக் குறிப்பு:** இச்செய்யுள் விலக்கு அணி.

92 . வண்படு கருப்புச் சிலைகொடு நெடிய
வலிபடு மேருவில் கொண்ட
தண்படு மதியம் சூடியைப் பொருது
சயம்படு நகைபுரிந்(து) உவப்பாய்
ஒண்படு வலர்க்குப் பசும்புல்வன் படைஎன்(று
உரைப்பதை விளக்கினை தாயே
கண்படும் அனச்செய் சூழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** அனம் கண்படு செய்=தாமரைமலர்களில் அன்னப்பறவைகள் உறங்கும் நன்செய். வண்படுகருப்புச்சிலை=வளமான கரும்புவில். வலிபடு=வலிமையுடைய. சயம்படு நகை=வெற்றிப்புன்னகை. ஒண்படு=அறிவுவாய்த்த. வலர்=வல்லவர்.

**பொழிப்புரை:** தாமரைமலர்களில் அன்னப்பறவைகள் உறங்கும் நன்செய் நிலங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!நீ வளமான கரும்புவில்லை உன் கையில்ஏந்தி, சிறந்த வலிய மேருமலையை வில்லாக ஏந்திய சிவபிரானுடன் போரிட்டு,வெற்றிப் புன்னகை செய்து மகிழ்ந்தவள்!அறிவு வாய்த்த வல்லவர்களுக்குப் பசிய புல்லும் வலிமையான ஆயுதம் என்ற உலகவர் பழமொழியைத்,தாயே!நீமேருவில் ஏந்தியவனைக் கரும்புவில் ஏந்தி வென்றதன்மூலம் மெய்ப்பித்தாய்.

**விளக்கம்:** வண்படு கருப்புசிலையினைக் கையில் ஏந்தியவள் அம்மை.இனி, ''வண்படுகருப்புச்சிலை''என்பதற்கு,வளமானகருநிறப் புருவவில்எனினும்ஒக்கும்.ஏன்?

'' முரிபுரு வச்சிலை கடைகுனி யச்சில முளரிக் கணைதொட்டுக்
குன்றவில் ஆளியை வென்ற தடாதகை''

— மீ.பி.த.சப்பாணி.8. என்றதால்.

(வளைந்த புருவம்–வில். கண்கள்–இருதாமரை மொட்டுகள் ஆகியகணைகள்.'' சில கணையில்–இரண்டே கணையில்– வென்றாள் என்றது நயம்''என்பார் தமிழ்த்தாத்தா.)

'' வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்'' –பழமொழி.

**இலக்கணக் குறிப்பு:** கரும்பு என்பது கருப்பு என்று வந்தது வலித்தல்விகாரம். அனம்– இடைக்குறை.செய்–காரணப்பெயர்.உவப்பாய்–விளி. இச்செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பு அணி.

93 . தேவிநின் இடைதோள் ஒத்திடும் குணத்தால்
சிதம்பர தலத்தும்வேய் வனத்தும்
மேவிய நகைமுத்(து) அணிமுலை ஒக்கும்
விதத்தினால் திருமுல்லை வாயில்
பாவிய கயிலை இடத்தும்வீற் றிருப்பன்
பரன்தலை மதியனே யன்றோ

காவியன் ககனம் உறும்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** வியன்ககனம்=அகன்ற வானம்.இடைக்கு உருவமின்மையால் ஆகாயத்தலமான சிதம்பரம்.தோள் மூங்கில் ஒத்தமையால் மூங்கில் பெயருடைய வேணுவனம்.நகை–பற்கள்–முல்லை அரும்புகளைஒத்தமையால்முல்லைப் பெயருடைய திருமுல்லை வாயில்.முலைகள் குன்றினை ஒத்தமையால் கயிலை மலை ஆகிய இடங்கள்.வேணுவனம்=திருநெல்வேலி–இறைவன் வேணுவனநாதர்.

**பொழிப்புரை:** அகன்ற வானளாவும் சோலைகள் கொண்ட திருவானைக்காஅகிலாண்ட நாயகியே!மேலானவனும்,தன்தலையில் மதிசூடியவனுமாகிய உன்கொழுநன்,உன் இடுப்பு வெற்றிடமான படியால் ஆகாயத்தலமாகிய சிதம்பரத்தும்,உன்தோள்கள் மூங்கிலை ஒத்தனஆதலால் வேணுவனத்தும்,உன்ஒளியுடைய பற்கள் முல்லை யரும்புகளைஒத்தன ஆதலால் திருமுல்லைவாயிலிலும்,முத்துமாலையணிந்த உன்முலைகள் குன்று ஒத்தன ஆதலால் கயிலையிலும் விரும்பி எழுந்தருளிஉள்ளான்

**விளக்கம்:** ‘‘தலைமதியன்’’என்றதொடருக்கு,தலைசிறந்த அறிவுவடிவன்– தலைசிறந்த ஞானி எனினும்அமையும்.
சிவபிரான் ஞானவடிவன்:

‘‘ஞானத் தாய்உனை நானும் தொழுவனே’
– திருமுறை.5.தனித்திருக்குறுந்தொகை.3.

**இலக்கணக் குறிப்பு:** இச்செய்யுள் நிரல்நிறை அணி.தற்குறிப்பேற்றவணியுமாம்.

94 . சுவைபடு கனிசெய் பனசம்நெட் டரம்பை
சூதம்ஆ மலகம்வெண் நாவல்
இவைமுதல் பலவான் தருநிழல் உறைவான்
இனியநின் மொழிச்சுவை அவாவி
நவைபடு கொடிய வச்சிர வனமும்
நயந்தனன் பித்தன்ஆ தலினால்
கவைபடு சூலி எழில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கவைபடு=முப்பிரிவுகள் கொண்ட.சூலி=சூலப்படை ஏந்தியவளே.கனிசெய்=கனிகள்தரும்.பனசம்=பலா.நெட்டரம்பை=உயரமான வாழை.சூதம்=மா.ஆமலகம்=நெல்லி.உறைவான்=எழுந்தருளியுள்ள உன் கொழுநன்.திருக்குற்றாலம்,திருப் பைஞ் ஞீலி,காஞ்சி,திருநெல்லிக்கா,திருவானைக்கா இவற்றின் தலமரங்கள் முறையே பலா,வாழை,மா,நெல்லி,வெண்ணாவல்என்பன.வச்சிரவனம்=தருப்பைக்காடு–திருநள்ளாறு.பழப்பயன் இல்லாதது தருப்பை.

**பொழிப்புரை:** முப்பிரிவுகள் கொண்ட சூலம் ஏந்தியவளே!அழகிய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!இனிய உனது சொற்களின் சுவையினை விரும்பிய உன் கொழுநன்அச்சொற்களோடு ஒத்த சுவையுள்ள கனிகள்தரும் பலா தலமரம்கொண்ட

திருக்குற்றாலம்,கிளையின்றி நீண்ட வாழை தலமரம்கொண்டதிருப்பைஞ்ஞீலி,மா தலமரம்கொண்டகாஞ்சி,நெல்லி தலமரம்கொண்ட திருநெல்லிக்கா,வெண்ணாவல் தலமரம்கொண்ட திருவானைக்கா ஆகியிடங்களில் எழுந்தருளியுள்ளான்.அவன் பித்தனாதலின் பழப்பயன் இல்லாததாகிய குற்றம் பொருந்திய தருப்பைக்காட்டிலும்– திருநள்ளாற்றிலும் எழுந்தருளியள்ளான் .

**இலக்கணக் குறிப்பு:** பனசம். . . . . வெண்ணாவல்–எண்ணும்மைத்தொகைகள். சூலி– அண்மைவிளி.உறைவான்–வினையாலணையும் பெயர்.

95 . இறையவர் வாமத்(து) உறையும்நீ தொழில்செய்
இமையவர் தருப்பணம் காட்ட
மறை(வு)இல்மற்(று) அதனை நோக்கிஅவ் இறைவன்
வலப்புரத்(து) ஒருமடக் கொடிநன்(கு
உறைவ(து)என் எனமற்(று) அவனொடு பிணங்கேல்
உற்றுநோக் கிடில்பிழை இல்லான்
கறைமலி களத்தன் வளத்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:**கறை=நஞ்சின்கறை.வாமம்=இடதுபாகம்.தொழில்=பணிவிடை.தருப்பணம்=முகம் பார்க்கும் கண்ணாடி.மறைவுஇல் மற்றதனை=ஒளிவு மறைவின்றித் தோன்றும் உருவத்தை.உற்று நோக்கிடில்=கூர்ந்து நினைத்துப் பார்த்தால்

**பொழிப்புரை:**நஞ்சின் கறைமலிந்த திருக்கழுத்தினை உடைய சிவபிரானது திருவானைக்காஅகிலாண்ட நாயகியே! இறைவனது இடப்பாகத்தில் உள்ள உனக்குப் பணிவிடை செய்யும் தேவருலகமகளிர் உன்முன்னே கண்ணாடிகாட்ட,எதையும் ஒளிவு மறைவில்லாமல் காட்டும் அதில்காணப்படும் உருவத்தின் வலதுபாகத்தில் ஒருத்தி அழகுற உறைகின்றாளே என்று பிழைபட எண்ணி அவ்விறைவனுடன் பிணங்காதே. ஏனெனில் நீ கூர்ந்து பார்த்துச் சிந்தித்தால் அவன் பிழைஇல்லாதவன் என்பது புலனாகும்.

**விளக்கம்:** நாம் முகம்பார்க்கும் கண்ணாடியில்; நம்இடதுபக்கம் வலதுபக்கமாகவும், வலதுபக்கம் இடதுபக்கமாகவும் தெரிவதைவைத்து எழுந்த கற்பனைஇது.

அவன் கண்டக்கறை உள்ளவனேதவிர,உள்ளக்கறை இல்லாதவன் என்றார்.

**இலக்கணக் குறிப்பு:** களத்தன்–குறிப்பு வினையாலணையும் பெயர்.

96 . கொடியது பிறத்தல் அதனினும் அம்ம
கொடியதே இறத்தல்இவ் விரண்டும்
தடிதர நினைந்தேன் தந்தைதாய் இல்லான்
தறுகண்வெங் கூற்(று)உதைத் தாற்(கு)உன்
அடியன்என்(று) உணர்த்தி அருள்விலக் குவையேல்
அகிலம்மீ(து) ஒருகதி உண்டோ
கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக்

காஅகி லாண்டநா யகியே. .

**குறிப்புரை:** கடி=நறுமணம். தடிதர=விலக்க. தறுகண்=அஞ்சாமை. விலக்குவையேல்= அருளாது ஒழிந்தால். கதி=புகலிடம்.

**பொழிப்புரை:** நறுமணம்மிக்க மலர்கள்பூத்த குளங்கள் சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! பிறப்பது கொடியது; அதனினும் கொடியது இறப்பது. இரண்டையும் நான் விலக்க நினைக்கிறேன். தந்தை தாய் இல்லாதவனும், அஞ்சாத எமனை உதைத்தவனும் ஆகிய சிவபிரானாகிய உன்கொழுநனுக்கு என்னைப்பற்றி, ''இவன் உன் அடியான்'' என்று உணர்த்தி, என்பிறப்பு இறப்புகளை விலக்கியருள்க. இங்ஙனம் நீ அருளாவிடின் இவ்வுலகில் எனக்குப் புகலிடம் ஏதுமில்லை. அருள்க.

**விளக்கம்:** இறப்பு பிறப்புகளுக்கு இரங்குதல்:

''பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே.''
—திருமுறை. 6. தனித்திருத்தாண். 6

தனதுபிறப்பினை ஒழிக்க, பிறப்புக்குக் காரணமான தந்தைதாய் இன்மை, இறப்பினை ஒழிக்க உயிர் கவரும் எமனை உதைத்தமை ஆகிய இரண்டும் ஒருசேர உள்ளவன் துணைவேண்டினார்.

சிவபிரான் தாய் தந்தை இல்லான்:

''தாயுமிலி தந்தையிலி தான்தனியன்''
– திருவா. திருச்சாழல். 3.

விலக்குவையேல் .. .. .. ஒருகதி உண்டோ:

''அருளாது ஒழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர்இங்கு''
– திருவா. கோயில்மூத்த. 8.

**இலக்கணக் குறிப்பு:** அம்ம—உரையசை, இல்லான், உதைத்தாற்கு—வினையாலணையும் பெயர்கள்.

97. தடிஉணல் என்றும் வனசரர் பெருமான்
தருதடி மிசைந்தனன் ஒழிக
மிடிஇடை யவர்மால் என்றுநிற்(கு) அளித்தான்
மேனியில் பாதிஆ தலினால்
படிவிதி விலக்(கு)இ லான்பரன் என்னைப்
பற்றிஆ டற்(கு)அவை குறியான்
கடிதரா(து) உணர்த்து நீதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** என்றும் தடி உணல். தடி=புலால். வனசரர் பெருமான்=வேடுவர் தலைவனாகிய திண்ணனார்—கண்ணப்பர். ஒழிக=அதுஒருபுறம் கிடக்க. மிடி இடையவர்=வறுமைப்பட்டவர் போல் மிகமெலிந்த இடையுடையவர் திருமால்—பெண். பாதிஆதலினால்=நீ சிவனது திருமேனியில் பாதிஇடம் கொண்டவள்—முழு நம்பிக்கைக்கு உரியவள்—என்ற

காரணத்தால்.படி=உலகம்.நிற்குஅளித்தான்=உனக்கு அடைக்கலமாகத் தந்தான்.விதி விலக்கு இலான்=உலக விதிக்கோ,விலக்குக்கோ உட்படாதவன்.ஆடற்கு= ஆளுதற்கு. கடிதராது=சினம்கொள்ளாமல்.

**பொழிப்புரை:** நாடோறும் புலால் உண்ணும்வேடர் தலைவன் ஆகிய திண்ணனார் ஊட்டிய புலாலைஉன்கணவன்உண்டான். அதுஒருபுறம் கிடக்க, தன்உடம்பில் சரிபாதி இடம் பெற்றவள்–முழுநம்பிக்கைக்கு உரியவள்–நீ என்பதால்,மிக்க வறுமையால் இளைத்தவர் ஒத்த மிகமெல்லிய இடையினையுடைய பெண் ஆகிய திருமாலை உன்னிடம் அடைக்கலப் பொருளாகத் தந்து தன்ஒருபாதியில்வைத்தான்.எனவே உன்கணவன்,உலகியல் விதிகட்கும் விலக்குகட்கும் சிறிதும் உட்படாதவன்.ஆகவே கீழான எனக்கு அருளி ஆள்வதற்கு என்கீழ்நிலை அவன் கருதான் என்பதால் என்மீது நீ சினம்கொள்ளாது,என்னை ஆட்கொள்ளுமாறு அவனுக்கு உணர்த்தியருள்க.

**விளக்கம்:** சிவபிரான்,''அருளாள்வான்'' ஆதலின், தான்புலால் உண்ணான்எனினும், அருளாளர் புலால் உண்ணார் என்ற வழக்கத்தை–விதியினை மீறி,''அன்புப்பிழம்பாம் திண்ணனார் படைத்த எச்சிற்புலாலையும் ஏற்று அருள்புரிந்தான்.மேலும்,''ஆவுரித்துத் தின்றுழலும்.. .. ..அன்பராகில்.. ..நாம்வணங்கும் கடவுளாரே''என்றஅப்பரடிகள் திருவாக்கினையும்,குகன் கொண்டுவந்த தேனையும் மீனையும்இராமபிரான் ''அரியதாம், உவப்ப உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் தெரிதரக் கொணர்ந்த என்றால் அமிழ்தினும் சீர்த்த'',''இனிதின் நாமும் உண்டனம்அன்றோ''என்று ஏற்றான்என்பனவற்றுடன்

> ''ஊனொடு உண்டல் நன்றுஎன ஊனொடு உண்டல் தீதுஎன
> ஆன தொண்டர் அன்பினால் பேச நின்ற தன்மையான்''

என்றதிருஞானசம்பந்தரின் திருவானைக்கா பதிகத்து9ஆம் திருப்பாடல் நினைக .

தொண்டர்களின் அன்புப்பேச்சு என்று இதில்வரும் ''ஊனொடு உண்டல் தீது'' –என்பது விதி;'' ஊனொடு உண்டல் நன்று'' என்பது விலக்கு.

தன் துணைநலமாக ஏற்றஒருத்தியிடம் மற்றொரு பெண்ணை–மனைவியை அடைக்கலக் காப்பாக வைக்காமை வழிவழி வந்த விதி.அரிதாக– இதற்கு மாறாக நிகழ்தல் என்பது விலக்கு.இவ்விலக்கு நிகழ்வே,அம்மை,பெண்ணாகிய திருமால் இருவரிடையேயான மேல்குறிப்பிடப்பெற்ற செய்தி.

**இலக்கணக் குறிப்பு:** விதி விலக்கு –எண்ணும்மைத் தொகைகள்.

98. வரக்கருங் கொண்மூ மழைபொழி யாதேல்
மண்பயிர் உயும்வகை உண்டோ
திரக்கடுங் கவலை சிதைதரப் பல்கால்
செய்யும்வின் ணப்பம்நீ உணர்ந்தும்
இரக்கம்இல் லவள்போல் இருத்தியேல் கருணை
எங்(கு)இனி இருப்பது தாயே
கரக்(கு)அரு வளங்கள் மலிதிரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** கரக்குஅரு= ஒளித்தற்கு இயலாத. வரம்=மேன்மை. கருங்கொண்மூ= கார்மேகம். உண்டோ=இல்லை. திரம்=மிகவலிய. சிதைதர=அழியுமாறு.

**பொழிப்புரை:**ஒளித்தற்கு இயலாத அரியவளங்கள் மலிந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!மேன்மையுடைய கார்மேகம், உலகில் மழை பொழியாவிடில் அற்பப் பயிரும்கூட உலகில் உயிர்வாழ்தல் என்பதுஅணு அளவும்உண்டோ? இல்லை. மிகவலிய கொடிய என்கவலைகள் அழியும் பொருட்டு உன்னிடம் பலமுறை வேண்டிக்கொண்டும் நீ இரக்கம் இல்லாதவள் போல் இரப்பின்,கருணை என்பது உன்னிடமன்றி வேறு எங்கு இருக்கும்? தாயே கருணைமழை பொழிந்தருள்க.

**விளக்கம்:** தாயே,உன் அருளாட்சியில் கார்முகில் கூடத் தவறாது மழை பொழிவதால்தான்,திருவானைக்கா எங்கும்''கரக்கருவளங்கள் மலிந்துள்ளன''. ஆனால் எனக்கு மட்டும் நீ அருளாததேன்?அருள்க என்றார்.

மழைபொழியாதேல் மண்பயிரில்லை:

''விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது.'' —திருக்குறள்.16.

**இலக்கணக் குறிப்பு:** உண்டோ—எதிர்மறைஓகாரம்.உயும்—இடைக்குறை.பயிரும்—இழிவுசிறப்பும்மை.

99.

மாயவ னாய்ஓர் பாதிஇல் லவளாய்
மற்றொர்பா தியும்கவர்ந் தனையால்
நாயகன் மேனி எனின்அவன் வடிவம்
நாடொறும் மறைந்ததாய் இருக்கச்
சேயமண் சத்தி மயம்எனா(து) அந்தோ
சிவமயம் என்ப(து)என் உரையாய்
காயம்மீ(து) எழுந்த மதில்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

**குறிப்புரை:** காயம்=ஆகாயம்.நாயகன்மேனி மாயவனாய்ஓர்.. .. ..கவர்ந்தனையால்.

**பொழிப்புரை:** வானளாவிய மதில்சூழ்ந்த திருவானைக்கா அகிலாண்ட நாயகியே! உன்கொழுநனது திருமேனியைத் திருமாலாக ஒருபாதியும் மனைவியாக ஒருபாதியுமாக நீயே கவர்ந்துகொண்டாய் என்றால்,உன்கொழுநனது திருஉரு என்றுமே உம்மிடம் மறைந்துள்ளது.எனவே நீள்உலகம் ''சத்தி மயம்''என்னாது'' ''சிவமயம்''என்பதேன்? கூறியருள்க.

**விளக்கம்:** ''அரியலால் தேவிஇல்லை ஐயன்ஐ யாறனார்க்கே''என்பதால் திருமாலே உமையவள் என்றாலும் கூட,''மையரிக்கண்ணியாளும் மாலும் ஓர் பாகம்ஆகி' '(திருமுறை.4,கோயில்.4.)என்றும், ''மாதொரு பாலும் மாலொரு பாலும் மகிழ்கின்ற நாதன்''(திருமுறை.1. திருப்புறவம்.2.) என்றும் வருவனவற்றால், சிவபிரான் வடிவம் மறைந்ததாய் இருக்கிறதுஎன்றார்.சிவமும்சத்தியும்ஆகிய பொருளும்ஆற்றலுமாக உலகம்

அமைந்துள்ளதால் ''சர்வம்சிவமயம்''எனினும்''சர்வம் சத்திமயம்''எனினும் ஒன்றேஎனலாம்.''அரசன் கட்டிய கோயில்''என்று ஏவுதற்கருத்தாவை முதன்மைப்படுத்துவதே உலகவழக்கு.அப்பன்ஏவுதற்கருத்தா, அம்மை இயற்றுதற் கருத்தா என்பது நம் மெய்ப்பொருளியல் முடிபும் ஆகும்.

ஓர்பாதிமாதும் பிறிதொரு பாதிமாலும்–தனிப்பாடல்: செய்யுள் எண்89இல்காண்க.

**இலக்கணக் குறிப்பு:** அந்தோ–அதிசயம் குறித்த இரக்கக் குறிப்புச்சொல்.

100.

பனிபடு நின்தாள் பங்கயம் பொங்கும்
பனிவரை அகம்நக நிகழும்
துனிபடு பொழுது பரன்முடி மதியம்
துண்எனத் தாக்கும்நீர் வாவி
நனிபடு முட்டாள் பங்கயம் பெறுமோ
நவின்றன இணையில்என்(று) உணர்ந்தேன்
கனிபடு பொழில்விண் கமழ்திரு வானைக்
காஅகி லாண்டநா யகியே.

கூட்டுமுறை: பனிவரை அகம்நகப் பொங்கும் பனிபடு நின்தாள்,துனிபடுபொழுது பரன்முடி நிகழும்மதியம் துண்எனத் தாக்கும். வாவி நனிநீர்படு முட்டாள் பங்கயம் பெறுமோ? நவின்றன இணை இல் என்பது உணர்ந்தேன்.

**குறிப்புரை:** பனிவரை அகம் நக=இமவான் மனம் மகிழ.பொங்கும்=பொலியும். பனிபடு= குளிர்ந்த.துனிபடுபொழுது=புலவி நீட்டத்தின் பொழுது.துண்என= திடுக்கிட. நனிநீர்=மிக்கதண்ணீர்.படு=தோன்றும்–முளைக்கும்.பெறுமோ=ஒக்குமோ. நவின்ற=ஒப்புமை உடையன என்றுகூறியது.இணை இல்=ஒப்புமை இல்லாதன.

**பொழிப்புரை:**வானளவு மணக்கும் கனிகள் பழுத்த சோலைகளையுடைய திருவானைக்கா அகிலாண்ட நாயகியே!இமவான் மனம்மகிழப் பொலியும் குளிர்ந்த உன் திருவடி, சிவபிரானுடன் நீகொள்ளும் புலவிநீட்டத்தில், உன்தாளில்அவன்தன் திருமுடிபட வணங்கும்போது அவனது திருமுடியில் உள்ளபிறை திடுக்கிடுமாறு தாக்கும் வன்மையது.எனவே மிக்கதண்ணீரில், முட்களைத் தனது தண்டில் கொண்டு தோன்றுகின்ற மென்மையான தாமரைமலரும் உன்திருவடியும் தம்முள் ஒப்புமையுடையன என்பது பொருந்தாது.

**விளக்கம்:** உன்திருவடியில்–தாளில்–முட்கள் இல்லை.தாமரையின்தாளிலோ முட்கள். முட்கள்கொண்டதாளுடைது தாமரை ஆதலால் அதனை,முள்+தாள்+தாமரை= முட்டாள் தாமரை என்பர்.முட்டாள்தாமரை என்பது முட்டாள்தனமான தாமரை என்றும்பொருள்தரும். ஆனால் நீயோ ஞானவடிவினள்.ஆகவே உன்திருவடிக்குத் தாமரை இவ்விருவகையிலும் ஒப்பாகாது என்றார்.

அம்மைஅப்பர் திருவடி பனிபடு திருவடி:

"நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்."

– திருமுறை. 6. திருநல்லூர். 1.

**இலக்கணக் குறிப்பு:** தாள் பங்கயம்–உருவகம். பனிவரை–இடவாகுபெயர். நனிநீர்= உரிச்சொற்றொடர். முட்டாள்–தனிமொழியும், தொடர்மொழியுமாய் நிற்கும் பொதுமொழி. விண் கமழ்கனி, கனி படுபொழில்–வினைத்தொகைகள்.

திருச்சிற்றம்பலம்

**********************